மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையவெளியீடு-21

# மநு விஞ்ஞானேசுவரீயம்

என்னும்

மிதாக்ஷரத்தின் வழிநூல்



மகாமகோபாத்யாய டாக்டர்

உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

1960

அடையாறு சென்னை-20.

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு-21.

உ

ஸ்ரீ அழகின் பெருமாள் அவர்கள்

பாடியருளிய

# மநு விஞ்ஞானேசுவரீயம்

என்னும்

## மிதாக்ஷரத்தின் வழி நூல்

---

சென்னை, உயர்தர நீதிமன்றம் நீதிபதி,

மேன்மை தங்கிய

ஸ்ரீ P. இராஜகோபாலன் M.A., I.C.S., அவர்கள்

அளித்த

நூன்முகம் கொண்டது




மகாமகோபாத்யாய டாக்டர்

உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

அடையாறு 1960 சென்னை-20.

# FOREWORD

The publication of this book gives us yet another opportunity, of which I gratefully avail myself, to record the deep debt of gratitude under which Mahamahopadhyaya Dr. V. Swaminatha Aiyar has placed all those who love and cherish the rich heritage of Tamil. But for his labour of love this treatise might have been lost forever. While I cannot help regretting that Dr. Swaminatha Aiyar did not find the time to edit Manu Vignaneswariyam-possibly more verses might have been salvaged from the only available manuscript, had the work been taken up earlier, and certainly his comments would have been priceless.—I congratulate Sri R. Visvanatha Aiyar on the excellence of his work, a labour of love again, though it is but a fragment of the original work that could be made available. The author and the editor share our gratitude, separated though they are by five centuries.

The Mitakshara as it was understood in the fifteenth century in the land of the Tamils emerges again though in a truncated form at a time when the foundations of the Hindu Joint Family have been shaken by economic, social and political concepts of a resurgent independent nation moulding

its destiny, some of which have been reflected in the recent legislative changes. The book however is not merely of historical and literary interest. It illustrates, should such a lesson be needed, the ease with which spoken Tamil can be adapted as the language of law and courts. In that context the publication is well timed and welcome.

I deem it a privilege to be associated with the publication of this book, with all its associations with the past and its inspiring message for the future.

Mylapore, Madras, 2nd October 1960.

P. RAJAGOPALAN,
*Judge, High Court.*

---

உ

# நூன்முகம்

ஆதி யானை அமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை உணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே.

(*திருநாவுக்கரசர்*).

மநு விஞ்ஞானேசுவரீயம் என்பது விஞ்ஞானேசுவரர் என்றவ ரால் விளக்கிக் கூறப்பெற்ற மநுதரும சாஸ்திரம் என்னும் பொருள்பட அமைந்துள்ளது. சுவடியில் இப்பெயர் மநு விஞ்ஞானம் என்றும், மநு விஞ்ஞானேசுவரீய விருத்தம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

'இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடென்பன. அவற்றுள் அறமாவது மநு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்' என்று பரிமேலழகர் தம் திருக்குறள் உரைப்பாயிரத்தில் கூறியுள்ளபடி மநு முதலிப நூல்கள் மக்களின் நல் வாழ்க்கைகளுக்குரிய நெறியினை அமைப்பனவாகும். அத்தகைய நூல்களை ஸ்மிருதிகள் என்று வடமொழியில் வழங்குவர்; தரும சாஸ்திரங்கள் என்ற பெயரும் இவற்றிற்கு உண்டு.

அறிவுகளுக்கெல்லாம் மூலம் வேதம் என்பர். அவற்றுள் இலௌகிக வாழ்க்கைக்கு இன்றியமையாத நெறிகளை அமைத்துக் காட்டி மறுமைக்கும் உதவுவன ஸ்மிருதிகளாகும். ஸ்மிருதிகளுக்குள் மிகப் பழமையானதும், பின்வந்த எல்லா ஸ்மிருதி கர்த்தாக்களாலும் மிக வும் போற்றப்படுவதும், அவர்களால் புதுப்பிக்கப்படுவதுமானது, மநு என்ற முனிவர் இயற்றிய மநுஸ்மிருதியே யாகும். அது சமூகம், சம யம், ஒழுக்கம், வியவகாரம் போன்ற வாழ்க்கைக்குரிய பல துறைகளுக் கும் விதி விலக்குகளை முழுமையாக அமைத்து, வழிகாட்டியாய் விளங்கு வதாலும், அதன் பிற சிறப்புக்களாலும், அதன் ஆசிரியரின் பெயரான மநு, என்பது பிற்காலத்தில் அவர் இயற்றிய நீதி நூல் அல்லது தரும சாஸ்திரம் என்ற நூலுக்குப் பெயரானதோடு அமையாமல், பிறரால்

எழுதப்பெற்ற அத்தகைய நூல்களுக்கும் பொதுப் பெயராய் விளங்க லாயிற்று. ஆகவே, **மநு விஞ்ஞானேசுவரீயம்** என்ற தொடரிலும் **மநு** என்ற சொல் சிறப்புப் பொருளைக் கொடாமல், பொதுப்பொருளைக் கொண்டுள்ளமை காணத்தக்கது.

மநுவுக்கு அடுத்தபடியாய்ப் புகழ்கொண்டு விளங்கிய ஸ்மிருதி கர்த்தா **யாஞ்ஞவல்கியர்** என்ற முனிவர். இவருடைய காலத்தைப்பற்றிய கருத்துக்கள் பல. கி.மு. இரண்டாம் நூற்றுண்டை ஒட்டிய காலமே இம்முனிவர் காலமாகலாம் என்று ஒரு சாரார் கூறுவர். இம் முனிவர் இயற்றிய ஸ்மிருதியில், (1) ஆசாரம் அல்லது ஒழுக்கம், (2) வியவகாரம், (3) பிராயச்சித்தம் என்ற மூன்று பகுதிகள் உள்ளன. இந்நூலில் அமைந்த விதிகள் ஆர்யவர்த்தம் என்னப்படும், ஹிந்து இந்தியா முழுமைக்கும் பொதுவானவை. இன்று நாட்டில் வழங்கும் **வியவகார விசாரணைகளுக்கு** இந்நூலே மேற்கோளாகக் காட்டப்பெறுகிறது என்றுல், இதன் சிறப்பைப்பற்றி நாம் பிறிதொன்றும் கூறவேண்டுவதில்லை. இந்நூலுக்குப் பல வியாக்கியானங்கள் எழுந்துள்ளன. **ஜீமூதவாகனர், சூலபாணி, ரகுநந்தனர், ஸ்ரீ கிருஷ்ணர், தர்க்காலங்காரர்,** என்றவர்கள் **ஒரு முறையாகவும்; விசுவரூபர், விஞ்ஞானேசுவரர், அபரார்க்கர், வீரமித்ரோதயர்,** போன்றவர்கள் வேருெரு முறையாகவும் யாஞ்ஞவல்கிய ஸ்மிருதிக்கு உரை கண்டுள்ளனர் என்பர். இவ்விரண்டு முறைகளுள் முன்னதற்குத் **தாயபாக** வழி என்றும், பின்னதற்கு **மிதாக்ஷர** வழி என்றும் பெயர்கள் வழங்கலாயின, தாயபாக வழியை முதலில் வற்புறுத்தியவர் **ஜீமூதவாகனர்**; மிதாக்ஷர வழியை வகுத்தவர் **விஞ்ஞானேசுவரர்.** இவை இரண்டும், ஹிந்து இந்தியா முழுமையும், ஒவ்வொரு பகுதியில் ஒவ்வொரு முறை அதிகச் சிறப்பாகச் சொத்துரிமைக்கும் ,பாகப் பிரிவினைக்கும், பிற ஸிவில், கிரிமினல் வியவகாரங்களுக்கும் ஆணையிடும் சட்டங்களாக இன்று வரையில் வழக்கத்திலிருந்து வருகின்றன. இவற்றுள் **மிதாக்ஷர** முறையே சிறந்ததென்பது அறிஞர்கள் கருத்து.

**மிதாக்ஷரம்** என்பது **விஞ்ஞானேசுவரர்,** யாஞ்ஞவல்கிய ஸ்மிருதிக்கு இயற்றிய வியாக்கியானத்துக்குப் பெயராகும். இதுவே இந்த ஸ்மிருதியின் வியாக்கியானங்களுள் சிறந்ததென்று வியவகார உலகத்திற் கொண்டாடப்படுகிறது. கலியாணி என்ற நகரத்திலிருந்து ஆண்ட சாளுக்கிய இரண்டாம் விக்கிரமாதித்தர் (கி.பி. 1070-1100) காலத்தில் **விஞ்ஞானேசுவரர்** வாழ்ந்தவராவார் என்பர். இவருடைய

மிதாக்ஷரம் என்ற வியாக்கியானத்திற்கே உள் வியாக்கியானங்களாக, (1) விசுவேசுவர பட்டரால் எழுதப்பெற்ற ஸுபோதினி, (2) நந்த பண்டிதரால் இயற்றப்பெற்ற ப்ரமிதாக்ஷரம் (3) வைத்தியநாத பாயங்குண்டே என்றவரால் எழுதப்பெற்ற பாலம்பட்டி முதலிய உப வியாக்கியானங்களும், ஸ்மிருதிசந்திரிகா, ஸரஸ்வதி விலாஸம், வரதராஜீயம், ஸ்மிருதி முக்தாபலம், பராசரமாதவீயம் முதலான நிபந்தங்களும் இன்னும் பலவும் எழுந்துள்ளன.

இவற்றுள் ஸ்மிருதி முக்தாபலம் என்பது வைத்யநாத தீக்ஷிதீயம் என்ற பெயருடன் தமிழகத்தில் ஆணைநூலாக வழங்கும் நிபந்த நூலாகும். இது (1) வருணாச்ரம தர்மம், (2) ஆந்ஹிகம், (3) ஆசௌசம், (4) சிராத்தம் (5) திதிநிர்ணயம் (6) ப்ராயச்சித்தம் என்ற ஆறு காண்டங்களை உடையது. (கும்பகோணம், வேத தர்ம சாஸ்த்ர பரிபாலன ஸபையாரால் தமிழுரையுடன் வெளியிடப்பெற்றுள்ளது). இந்நூலின் பிரசுரம் பெற்ற காண்டங்களுள் வியவகார காண்டம் கிடைக்கப் பெருமை குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பிரசித்திபெற்ற மிதாக்ஷரத்தின் வியவகாரப் பகுதியின் சுருக்கமே மநு விஞ்ஞானேசுவரீயம் என்ற தமிழ்ச் சுவடியின் மூலமான வடமொழி நூலாகும் என்று காணக்கிடக்கின்றது. இத் தமிழ்மொழி பெயர்ப்பின் பாயிரத்தே, இந்நூல் எழுந்த வரலாற்றை, "இவ்வுலகம் தன் நிலையில் நிற்பதைக் கருதி, உலக வழக்கின்படி வடமொழியிலே முனிவர் இயற்றிய அந்நூலுக்கு மநு விஞ்ஞானேசுரம் (மநு விஞ்ஞானேசுவரீயம்) என்பது பெயர். அந்நூலை, திருநெல்வேலி நகரில் வாழ்ந்த, பரத்துவாச கோத்திரம், ஆபத்தம்ப சூத்திரம், வேங்கடகுருநாத சோதிடர் படித்துப் பொருள் சொல்ல, அழகின்பெருமாள் குமாரன் சங்கர தேசிகன் தமிழாக்கினன்" என்று கூறுவதிலிருந்து மநுவிஞ்ஞானேசுவரீயம் என்ற பெயருள்ள ஒரு வடமொழி வழிநூல் (நிபந்தம்) தமிழகத்திலே ஒரு காலத்தில் வழங்கி வந்தது என்பது புலனுகின்றது. நூலின் பெயரிலிருந்தும், பொருளடக்கத்திலிருந்தும் இது விஞ்ஞானேசுவரர் இயற்றிய மிதாக்ஷரத்தின், வியவகாரப் பகுதியின் வழிநூல் என்பது நன்கு தெரியவரும். (இவ்வாறே வரதராஜர் இயற்றிய வியவகார நிர்ணயம் என்ற ஒரு வடமொழி வழி நூல் தென்னுட்டில் வழங்கியுள்ளமையும் காண்க.) மநு விஞ்ஞானேசுவரீயம் மிதாக்ஷரத்தின் நேர்மொழிபெயர்ப்பா யமையாமல், அதனிலுள்ள பொருளைமட்டும், மேற்கோள்களை விலக்கி, அமைத்துச் சுருக்கமாகவும்

பொருட் செறிவுடனும் அமைந்துள்ளது என்பது இம்மொழிபெயர்ப்பு நூலால் தெரிவதாகும்.

இந்த நூல் மிதாக்ஷரத்தைப் பின்பற்றியுள்ளது என்பதற்குச் சான்று எதிர்பாராத மற்ளுரு வகையில் நமக்குக் கிடைப்பது இறும்பூது விளைப்பதாகின்றது. சளுக்கியர்களுக்குக் கணபதி வழிபடு தெய்வமென்பது, 'வாதாபி கணபதி' என்ற தொடரால் வலியுறுத்தப் படும். இத்தமிழ் மொழிபெயர்ப்பின் காப்புச் செய்யுள், 'விக்கிரம விநாயகருக்கு' உரியதாக அமைந்திருக்கிறது; இஃது, விஞ்ஞானேசுவர முனிவர் கலியாண் இரண்டாம் நகரில் விக்கிரமாதித்திய மன்னரால் போற்றப் பெற்றதைச் சூசிப்பதாகக் கொள்ளலாம் என்று தோன்று கிறது.

இந்நூல் காப்பு, பாயிரம், அவையடக்கம், நூலின் பொழிப்பு என்ற நாற்பகுதிகளைக் கொண்ட முகவுரையையும், லட்சணங்கள் என்ற பெயருடைய 49 நூற்பகுதிகளையும் கொண்டுள்ளது. அவற்றுள் விபவகாரம் இன்னதென்பதும், அது கேட்கும் முறையும், சொல்லும் முறையும், அதனைக் கேட்டு முடிவு கூறி நீதியை நிலைநிறுத்தும் அரசன், அதிகாரி, சபையோர், பிராட்டு விவாகன் முதலியோர் இலக் கணங்களும், முதல் 6 பகுதிகளில் கூறப்படுகின்றன. பிறகு விபவகார காரணங்களுள் தலை சிறந்ததான கடன் கோடலை ஒட்டிய பகுதிகள் 6ம், வியவகாரத்தில் உண்மை கண்டறிதற்குரிய மானிடப் பிரமாணம், தெய்வப் பிரமாணம் என்ற இரண்டுவகைப் பிரமாணங்களை விளக்கும் வகையில் பகுதிகள் 14ம், இதன் பின் சொத்துப் பிரிவினையை விளக்க மாகக் கூறும் பகுதிகள் 6ம், இறுதியில் எல்லைப்பிழை முதல் பிற கிரி மினல் குற்றங்கள் வரையில் ஒவ்வொரு தலைப்புக்கு ஒவ்வொரு பகுதி வீதம் பகுதிகள் 17ம் ஆக மொத்தம் 49 வியவகாரப் பகுதிகளைக் கொண்டதாக இந்நூல் அமைகின்றது.

இவற்றுள் தெய்வப் பிரமாணப் பகுதிகளும், சொத்துப் பிரிவினைப் பகுதிகளும் மிக விரிவாக இந்நூலில் அமைந்துள்ளன.

ஸ்மிருதி நூல்களை நாம் இக்காலத்தில் பார்க்கும்போது, அவை எழுதப்பெற்ற காலத்திலும், அவை பின்பற்றப்பெறும் காலங்களிலும் ஹிந்து சமூகம் நான்கு வருணப் பிரிவுகளிலும், கூட்டுக் குடும்ப முறை யிலும், சொத்துடைமையிலும், பெருமதிப்புக் கொண்டிருந்தது என் பதை உணர்கிறோம். மணவினை நல்ல மக்கட்பேற்றை உதவுவதையே

சிறந்த நோக்காகக் கொண்டிருந்தது என்பதும் புலனுகின்றது. இக் கருத்துக்கள் காலந்தோறும் மாறும் இயல்பினவாயினும், ஸ்மிருதிகள் அவ்வக் காலத்துக்குரியவற்றை விதிப்பனவாதலால், குறிக்கோள்கள் முற்றிலும் மாறிவரும் இக்காலத்தில் இங்குக் கூறப்பெற்றனவற்றை விருப்பு வெறுப்பு இல்லாமல் கால ஆராய்ச்சிக் கண்ணுடன் காண்பது நலமுடையதாகும். இவற்ருேடு மேலெழுந்த வாரியாகப் பார்ப்பவர்க்கும் நம் ஹிந்து சமூகத்தில் பண்டைக்காலம் முதல் காணப்பெற்றுவரும் பல வேற்றுமைகளுள் ஒளிரும் ஒற்றுமை புலப்படாமலிராது.

அன்றியும், இந்நூல்கள் நாட்டின் பண்பாடு, பொருளாதார நிலே, தொழில், வியாபார நிலேகள் முதலிய பல திறப்பட்ட சமூக அறிவு பெறுவதற்கும் பயன்படுகின்றன என்பதையும் உணர்வோமாக. இன்னும், அறத்தின்பால் நம் முன்னேர்கள் வைத்திருந்த பெருமதிப்பும் இவற்ருல் விளங்கும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலினே இந்நூல் நிலேயம் இப்பொழுது பிரசுரிக்க முன் வந்தமை திருவருட் குறிப்பே என்பதற்கு ஐயமில்லே. மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் வழக்காறற்று அழிந்துபோன இலக்கிய நூல்களேத் தேடிச் சேகரிப்பதிலேயே நாட்டமுடையவர்களாக இருந்தார்கள். அத்துறையில் அவர்கள் சாதித்துள்ளவற்றை உலகம் நன்கு அறியும். விரும்பியிருந்தால் நாட்டிலுள்ள பிறதுறை நூல்களேக் கொண்ட ஏடுகளேயும் அவர்கள் சேகரித்திருக்கக் கூடும். அவர்களுடைய முழு நோக்கமும் இலக்கியத்திலேயே பதிந்திருந்தமை யால், கிடைத்தவற்றை யெல்லாம் சேகரிக்க அவர்களின் மனம் இடங் கொடுக்கவில்லே போலும். எனினும், தாம் ஆராயும் இலக்கிய நூல் களுக்கு உதவியான சில பிற துறை நூல்களே அவர்கள் புறக்கணிக்கா மல் சேகரித்து வைத்திருந்தமை தமிழ் நாடுசெய்த தவப்பயனேயாகும்; அவ்வாறு அவர்கள் தொகுத்து வைத்தவற்றுள் இசை, நாட்டியம், வைத்தியம், சோதிடம், சிற்பம், மாந்திரீகம், வழக்கியல் ஆகியவற்றைக் கூறும் நூல்களின் சுவடிகள் சில அருகி அமைந்துள்ளன. அவற்றுள் கிடைத்த வழக்கியல் நூலின் ஒரே சுவடி இம் மநு விஞ்ஞானேசுவரீயம் ஆகும்.

இச்சுவடி (எண் 609) நூல் முழுமையையும் பெருது, அதன், 856ஆவது செய்யுளோடு முடிந்துவிட்டது; கிடைத்த ஏடுகளின் தொகை 145. இவ்வேடுகள் ஒவ்வொன்றும் பூச்சிகளால் அரிக்கப் பெற்றும், இடை முரிந்தும், இடையிடையே சில ஏடுகள் இல்லாமலும்

இருந்தமையால், பாடல்களை ஓர் உருவத்தில் கொண்டுவருவது மிகுந்த பிரயாசையாயிற்று. இழந்துபோன பகுதிகளை நிரப்புவதற்கு, வேறு சுவடி எங்கும் விசாரித்தும் கிடைக்கவில்லை. சென்னை, அரசியல் கீழ்த்திசைக் கையெழுத்து நூல் நிலையத்தில் இந்நூலின் வசன மொன்று காகிதப் பிரதியில் அமைந்திருப்பது அறிந்து, அந்நிலையத்தி லிருந்து அதைப் பெற்று ஒத்திட்டுப் பார்க்கும்போது, இச்சுவடியில் பூச்சி அரிப்புக்களால் சேதமடைந்த பகுதிகளிற் பல அங்கும் காணக் கிடைக்கவில்லை. ஆயினும், செய்யுள்கள் 856க்கு மேலுள்ளனவும், இச்சுவடியில் காணப் பெருதனவுமான பல விவரங்களை அறிவதற்கு அக்கையெழுத்துப் பிரதி பெரிதும் பயன்பட்டது. அதனையும், மிதாக்ஷரத்தின் வடமொழி மூலப் புத்தகத்தையும் துணைகொண்டு, விடுபட்ட பகுதிகளுக்கு ஒருவாறு வசனம் எழுதியும், முற்றிலும் அழிந்துபோன பகுதிகளை உரைநடையில் சுருக்கி அமைத்தும் இதனைப் பதிப்பிக்கலாயிற்று. இப்பொழுது கவனிக்கப்படாமல் விடப்பெற்றிருந் தால் இவ்வோரேடும் நாளடைவில் அருகி உலகுக்குப் பயன்படாமல் போய்விடக்கூடும்.

புறநானூறு 166ஆம் செய்யுளின் விசேடவுரையில் 'இருபத் தொரு கூறுபட்ட அருத்த நூல்' என்று குறித்திருப்பதாலும், திருக் குறள் பரிமேலழகர் உரையின் உரைப்பாயிரப் பகுதியில் ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்று அறங்களை மூவகைப்படுத்தி யிருத்தலாலும், வழக்கு வகைகள், கடன் கோடல் முதலிய பதினெட்டுப் பதத்தன என்ற குறிப்புக்கள் தமிழ் நூல்களிலே காணப்பெறுவதாலும் தமிழகத்தே விபவகார நூல்கள் பல பண்டைக் காலத்திலேயே நிலவியிருந்திருக்க வேண்டும் என்பது காணக்கிடக்கின்றது.

ஏரண முருவம் யோகம் இசைகணக் கிரதம் சாலம்
தாரண மறமே சந்தம் தம்பநீர் நிலமு லோகம்
மாரணம் பொருளென் றின்ன மானநூல் யாவும் வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரு மாள

என்ற பாடலிற் கூறியபடி அழிந்துபோன பல சிறந்த நூல்களுடன், விபவகார நூல்களும் பிறவும் பல மறைந்துபோயின போலும்.

இந்நூல் இயற்றப் பெற்ற காலத்தைக் குறித்து ஒன்றும் திட்ட மாக அறியக் கூடவில்லை. ஆனல் மேலே குறித்த, இதன் வசனங் கொண்டதும், சென்னை அரசியலார்க் கீழ்த்திசைக் கையெழுத்து நூல் நிலையத்திலிருந்து கிடைத்ததுமான காகிதப் பிரதியில் பின்வரும் ஒரு குறிப்பு காணக்கிடக்கிறது:

'மநு விஞ்ஞானேசுரமென்று நாமம் சாத்தி விவகாரங்களை அநேக ரிசிகளாக வடமொழியாற் சொல்லியிருந்தார். 664ஆம் வருஷம் சௌமியஞூ சித்திரைமீ 20உ பிரும்மவிருத்தபுரமென்னும் திருநெல் வேலிப் பெயருடைய தலத்தில்.........சங்கரமூர்த்தி தேசிகர் தமிழ் மொழியால் செய்த மநு விஞ்ஞானேசுரம்.'

இக்குறிப்பினின்று இத்தமிழ் மொழிபெயர்ப்பு நூல் கொல்லம் 664இல் எழுதப்பெற்றதென்று அறியலாம். அவ்வாறுனல், இன் றைக்கு ஏறக்குறைய 472 ஆண்டுகளுக்குமுன் (அதாவது கி. பி. 1488) இந்நூல் மொழிபெயர்க்கப் பெற்றிருத்தல் கூடும். தென்னுட் டில் மிகவும் பிரஸித்தி பெற்றதும். காஞ்சீபுரத்துக்கு அருகில் வாழ்ந்தவ ரான **வரதராஜர்** என்பவரால் இயற்றப் பெற்றதுமான விவகார நிர்ணயம் என்ற வடமொழி நிபந்த நூலின் காலம் கி. பி. 1456—1500 என்று பேராசிரியர் P. V. கேன் அவர்கள் கருதுகின்றனர். இவற்ருல் ஏறக்குறைய பதினைந்தாம் நூற்ருண்டில், வடமொழி நிபந்த நூல்கள் தமிழகத்தில் நன்கு கையாளப்பெற்று வந்தன என்பது தெளி வாகின்றது. **மநு விஞ்ஞானேசுவரீயம்** அல்லது **மநு விஞ்ஞானேசுவரம்** என்ற பெயருள்ள ஒரு வடமொழி நிபந்த நூலையே தாம் தமிழில் மொழிபெயர்த்ததாக அடிக்கடி ஆசிரியர் கூறுதலால், அப்பெயர் கொண்ட ஒரு வடமொழி நூல் கி. பி. பதினைந்தாம் நூற்ருண்டிலேயே தமிழகத்தில் வழங்கி வந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இஃது, ஆராயவேண்டிய ஒரு விஷயம் என்று மட்டும் கூறி நிறுத்திக் கொள்வோம்.

இந்நூல் லட்சணங்கள் என்ற பெயர் கொண்ட 49 பிரிவுகளைக் கொண்டுள்ளது என்பதைக் கூறினேம். இவற்றுள் 1-6 லட்சணங்கள் அரசன், நீதிபதிகள், பிராட்டுவிவாகன், விவகாரமும் அதனை விசாரித் தலும், கூறுதலுமாகிய பொதுவிஷயங்களைக் கொண்டவை; 7-12 லட்சணங்கள், கடன் முதலியவற்றைக் கொடுத்தல் வாங்குதலைப் பற்றியவை; 13-16 லட்சணங்கள் வழக்கு விசாரணைக்குரிய மூன்று வகைகளான மானிடப் பிரமாணங்களையும், 17-26 லட்சணங்கள் ஒன்பது வகைகளான தெய்வப் பிரமாணங்களையும் விளக்குவன; 27-32 லட்சணங்கள் சொத்துப் பிரிவினையைப்பற்றி மிதாக்ஷர விதி களைக் கூறும்; பிறகு, 33 எல்லை வழக்கு; 34 விலங்கு வழக்கு: 35 அசுவாமிவிக்கிரயம்; 36-37 கொடுத்ததைத் திரும்பக் கேட்டல்; 38 சேதாரம்: 39 அடிமையை வேலைகொள்ளுதல்; 40-41 கூலி முதலிய

வற்றைப் பற்றிய வழக்கு விசாரணைகளையும் சட்டங்களையும் அமைக் கின்றன. [இவற்றுடன் செய்யுட் பகுதி, (ஏடுகள் இழந்தமையால்) முற்றுப்பெறுகிறது ; இதன்மேல் வருவன உரைநடை]. அப்பகுதியில் 42, வண்ணான், 43, சூதாடல், 44, வியாபாரம், 45, திட்டுதல், 46, அடித்தல், 47, களவு, 48, பெண் குற்றம், 49, பிற என்று கிரிமினல் வழக்குக்களைப் பற்றிக் கூறும்.

இவ்வாறு ஸிவில், கிரிமினல் என்ற இரு பகுதிகளையும் பற்றிச் சட்டங்களையும், வழக்கு விசாரணை முடிவுகளையும், அரசன் கடமை முதலியவற்றையும் இந்நூல் விளக்கமாகக் கூறுகிறது. வடமொழியி லுள்ள மிதாக்ஷரத்தையே இது சொல்லுக்குச் சொல் பின்பற்றியிருந் தாலும், அதனில் காட்டபபெறும் மேற்கோள்கள், உதாரணங்கள், வாதங்கள் முதலியவற்றை அறவே நீக்கி ஒரு ஸ்மிருதி போல வேண் டிய விஷயங்களை மட்டும் நிரல்படத் தொகுத்துக் காட்டும் சிறபபு இந் நூலுக்கு உண்டு. மிதாக்ஷரத்தின் இன்றியமையாச் சுருக்கமென்று இதனைக் கூறலாம். இப்பதிப்பின் காரணமாக இதன் மூலமான வட மொழி விஞ்ஞானேசுவரீயமும் நாடி அடையப் பெறலாம் என்ற நம்பிக் கையும் தோன்றுகின்றது.

கிடைத்த ஒரே சுவடியின் நிலையைப் பற்றி மேலே கூறினேம். மிகவும் சிதிலமான அச் சுவடியைப் பெயர்த்துச் செய்யுளுருவம் கண்டு எழுதுவது சொல்லொணுத் துயரத்தைக் கொடுத்துவிட்டது. இப் பணியை மிகுந்த ஊக்கத்துடன் செய்து உதவியவர் இந்நூல் நிலையப் பண்டிதரான வித்துவான் அ. குப்புசாமிப் பிள்ளை அவர்கள். பாடல்களைச் சீர்ப்படுத்தவும், அச்சுவேலையில் ப்ரூப் முதலியவற்றைக் கருத்துடன் பார்த்துச் செப்பனிடவும் அவர்கள் அளித்த உதவி மிக அதிகம். அவரே இவ்வெளியீட்டின் துணைப்பதிப்பாசிரியர் ஆவர்.

பாடல்கள் மிக எளிய நடையில் அமைந்துள்ளன. மொழிபெயர்ப் பாசிரியர் சந்தம் விளங்க விருத்தப்பா அமைப்பதில் வல்லுநரே எனி னும், தமிழறிவு சிறக்க அமைந்தவர் என்று கூறுதற்கில்லை. அவர் பல கிராமியச் சொற்களை அவ்வவ்வாறே பாடல்களில் புகுத்திவிடுவார். எதுகை நயத்திற்காக ர, ற வேற்றுமைகளைப் புறக்கணித்துவிடுவார், வடமொழிச் சொற்களைப் பெரும்பாலும் அவ்வாறே கொண்டும், எழுதும்போது பிழைபட எழுதியும் பாடலை முடித்துவிடுவார். இவற் ருேடு சுவடி எழுதினவரால் நேர்ந்த பிழைகளுக்கும் கணக்கே இல்லை. இவற்றையெல்லாம் முடிந்தவரையில் மூல வடமொழி நூல்களைக்

கொண்டு கலைச்சொற்களின் உண்மை உருவைக் கண்டும், வல்லார் வாய் கேட்டும், யூகத்தினுல் வழுக்களைக் களைந்தும் ஒருவாறு இதனைப் பிரசுரித்துள்ளோம். வழக்குமுறைகளின் அறிவும், வடமொழி அறிவும் பெற்றுள்ள அன்பர்கள் முதன்முதலாகத் தமிழில் வெளிவரும் இவ் வியவகார நூலில் காணும் பிழைகளை அன்புடனும் பொறுமையுடனும் திருத்தி உதவுவார்களானுல் அவர்களிடம் என்றும் மறவா நன்றியுடையவர்களாவோம்.

முடிந்தவரையில் பாடல்களுக்குத் தலைப்புக்கள் இட்டும், முக்கியமான சொற்களைத் தடித்த எழுத்துக்களில் அச்சிட்டும், சிதைந்துபோன செய்யுட்களின் பொருளமைதியை ஏற்றபெற்றி மூல வடமொழி நூலினின்றும், கிடைத்த உரைநடைக் காகிதப்பிரதியினின்றும் அறிந்து எழுதியும் இதனை வெளியிடுகின்றோம். படிக்கிறவர்களுக்கு உபயோகமாகும்படி ஒவ்வொரு லட்சணத்திலும் கூறப்பெறும் பொருளைச் சுருக்கமாக அந்த அந்தப் பகுதியின் தலைப்பில் அமைத்தும், நூலின் இறுதியில் தமிழ்ப்பாடல் பலவற்றிற்கு நேர் வடமொழிச் சுலோகங்களை எடுத்துக் காட்டும் ஓர் அநுபந்தமாகவும், இந்நூலின் பொருள்களையும் அரிய பிரயோகங்களையும் தொகுத்த அகராதி ஒன்றனை மற்றோர் அநுபந்தமாகவும் தொகுத்தும் அமைத்துள்ளோம், இவை, படிப்பவர்க்கு உதவியாகும் என்று நம்புகிறோம்.

வடமொழிச் சுலோகங்களை அன்புடன் தொகுத்துதவிய அன்பர் சிரோமணி, வித்துவான் **பிரதிவாதி பயங்கர ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமிகளா**வர். அவர்களுடைய இருமொழிப் புலமையும், ஆராய்ச்சி வன்மையும், எளிமைக் குணமும், அன்பும் உணர்ந்து மிகவும் போற்றற்குரியன. அவர்களுடைய அன்புதவியை இந்நிலையம் என்றென்றும் போற்றும்.

சென்னை, அரசியல் கீழ்த்திசை கையெழுத்து நூல் நிலைய அதிகாரியான ஸ்ரீ T. சந்திரசேகர தீக்ஷிதர், M. A., L. T., அவர்கள் மிக அன்புடன் தம் நூல் நிலையத்திலிருந்து இந்நூலின் வசனமமைந்த பிரதியை எமக்கு இரவலளித்தும், அதனின்று வேண்டியவற்றை எடுத்துக்கொள்ள அநுமதியளித்தும் உதவியதற்கு அவர்பால் எம் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்திய மத்திய அரசியல் கல்வி அமைச்சருக்கு இந்நூலின் அருமையைக் கூறி இதன் வெளியீட்டுக்குப் பணவுதவி வேண்டுமென்று இங்கிருந்து விண்ணப்பித்துக்கொள்ள, அவர்கள் இதன் பதிப்புச் செல

வில் பாதி அருளி அன்புடன் ஊக்கினமைக்கு இந்நிலேயம் பெரிதும் தன் கடப்பாட்டைத் தெரிவித்துக்கொள்கிறது. இவ்வுதவி கிடைத்திரா விடின், இப்பதிப்பு வெளிவர இயலாதென்பதையும் தெரிவித்துக் கொள்கிருேம்.

சென்னே, ஹைகோர்ட்டு நீதிபதி உயர்திருவாளர் P. இராஜ கோபாலன், M.A., I.C.S., அவர்கள் இவ் வெளியீட்டினே அன்புடன் பார்வையிட்டு, இதற்கு அரியதொரு முன்னுரை எழுதி, எம்மை ஊக்கியும் இந்நூல் நிலேயத்தை வாழ்த்தியும் அருளிய பேருதவி எம்மால் என்றென்றும் கருதப்படுவதாகும். அப்பெரியார்க்கு எம் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

வழக்கம்போல் இதனே அழகுற அச்சிட்டு உதவிய இரத்தினம் பிரஸ் (பிராஞ்சு) மானேஜருக்கும் எம் நன்றி உரித்து.

பழமையில் எழுந்து, செய்யுள் வடிவில் அமைந்த வியவஹார நூல் வேறு எதுவும் தமிழில்கிடைப்பதாகத் தெரியவில்லே. இந்நிலேயில் இந்த அளவிலேனும் இந்நூல் கிடைத்தமைக்கு மகிழ்கின்ருேம். ஸ்ரீ ஐய ரவர்கள் இந்தக் குறைச் சுவடியையும் இகழாமல் தம் பொக்கிஷத்தில் சேர்த்து வைத்ததனுலன்ருே, 'தமிழ், வியவகார மொழியாகக் கூடுமா ?' என்று அன்பர்கள் ஆய்ந்துவரும் இக்காலத்தில், 'கூடும் என்பது மட்டு மன்று ; கூடி யிருந்தது' என்று காட்ட இந்நூல் இன்று வெளிவரு கின்றது ? அப் பெரியார்தம் தீர்க்கதரிசனத்தையும், உழைப்பையும், அன்பையும் நாம் என்றும் போற்றுவோமாக.

மகாமகோபாத்யாய ஐயரவர்களின் தமிழ்த்தொண்டு மேன்மேலும் செழித்தோங்க வேண்டுமென்பதே இந்நிலேயத்தின் நோக்கும் விருப்ப மும் ஆகும். அவை செவ்வனே நிறைவேற எல்லாம் வல்ல இறைவன் வழிகாட்டி, உதவிகளேயும் இதற்கு அளித்துக் கருணேபுரிய வேண்டு மென்று அவன் திருவடிகளில் இறைஞ்சுகின்ருேம்.

19—10—60.

---

உ

# மிதாக்ஷரம்

உலகம் தருமத்தை வேராக உடையது என்பர். வேதம் முதலியன தருமங் கூறும் நூல்களேயானாலும், மானிட வாழ்க்கையில் பல்வேறு நிலைகளில் நிற்பார்க்கு ஏற்றவாறு ஒழுக்கங்களை விதி விலக்குக்களால் அமைத்துக் காட்டும் அவ்வேதத்தைப் பின் பற்றிய தனி நூல்கள் பிற் காலத்தில் எழலாயின. அவற்றிற்குத் **தர்ம சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள்** என்ற பெயர்கள் இடப்பெற்றன. அத்தகைய நூல்களுள் மிகப் பிரஸித்தி பெற்றவை மநுஸ்மிருதி, யாஞ்ஞவல்கிய ஸ்மிருதி என் பனவேயாம். இவற்றுள் மநுஸ்மிருதியே காலத்தால் பழையது. அதற் குப் பல வியாக்கியானங்கள் எழுந்தன. அவை ஒவ்வொன்றும் காலத் துக்கும் இடத்துக்கும் ஏற்ப அந்த அந்த உரையாசிரியர் மதமாக எழுந் தனவாகும். இவ்வாறு தோன்றின பல வியாக்கியானங்களுள் ஒருசார் மதத்தைப் பின்பற்றி, எழுந்ததே **யாஞ்ஞவல்கியரின் ஸ்மிருதி** என்பர். அதுவே பிற்காலத்தில் மநுஸ்மிருதியினும் சிறந்ததாகக் கொள்ளப் பெற்று இந்து-இந்தியா முழுமைக்கும் சட்ட நூலாக அமையலாயிற்று.

யாஞ்ஞவல்கியர் என்பவரைப்பற்றித் திட்டமாக வரலாறு ஒன்றும் கூற இயலவில்லை. இப்பெயருடைய முனிவர்கள் பண்டை ஆரிய நாட்டிலே ஒருவர்க்கு மேம்பட்டவர் இருந்தனரெனத் தெரியவருகிறது. வேதங்களை வகுத்த வியாஸ பகவானின் நான்கு சீடர்களுள் ஒருவரான வைசம்பாயனரின் சகோதரியின் குமாரராக ஒரு யாஞ்ஞவல்கியர் தோன்றினர். அவருடைய தந்தையார் பிரும்மநாதர் என்றும், தேவ நாதர் என்றும் அழைக்கப்பெற்ற முனிவராவார். அவரே இந்த ஸ்மிரு தியின் ஆசிரியராவர் என்று கருதப்பெறுகிறார். யாஞ்ஞவல்கியர் இளமையிலே தம் தாய்மாமன் ஆச்ரமத்தில் வேதங்களைப் பயின்றார். பிறகு பல சிறந்த முனிவர்களிடமிருந்து அவர் மந்திர வித்தை, யோக வித்தை, பிரும வித்தை, முதலியவற்றைக் கற்றுப் பேரறிஞராய் விளங்கினர். சுக்ல யஜுர் வேதத்தை உலகில் தோற்றுவித்தவர் அவரே என்பர்.

யாஞ்ஞவல்கியரின் புகழ் நாடெங்கும் பரந்தது. அவருடைய காலத்தில் மநுஸ்மிருதியோடு, வேறு சில ஸ்மிருதிகளும் வழக்கத்தில் இருந்துவர, அவருடைய மாணவர்கள் மயங்கித் தம் ஆசிரியரை யாவ ரும் ஒப்புக்கொள்ளத்தக்க ஒரு ஸ்மிருதி இயற்றியருள வேண்டுமென்று

விண்ணப்பிக்க, அவ்வாறு அவர் அருளியதே **யாஞ்ஞுவல்கிய ஸ்மிருதி** ஆகும் என்பர். இந்நூலில், (1) ஆசாரம், (2) வியவகாரம், (3) பிராயச்சித்தம் என்ற மூன்று பகுதிகள் உண்டு. இதுவே மநுவின் நூலை விஞ்சிக்கொண்டு பிற்காலத்தில் ஆரியவர்த்தம் முழுமையும் ஆணைநூலாகக் கொள்ளப்பெறலாயிற்று.

இன்று, சொத்துரிமையைப்பற்றி சாஸ்திரத்தை ஒட்டி நாட்டில் இருவிதமான கொள்கைகள் விளங்கி வருகின்றன, ஒன்று **தாயபாக முறை** என்றும், மற்றது **மிதாக்ஷர முறை** என்றும் பெயர் பெறுகின்றன. இவை ஒன்றிலிருந்து மற்றது வேருனது. இவ்வாறு வேறுபட்ட இவை இரண்டும் யாஞ்ஞுவல்கிய ஸ்ம்ருதியையே மூலமாகக் கொண்டவை. இவ்வாறு ஒரே மூலத்தினின்று இரண்டு கிளைகள் தோன்றினமைக்குக் காரணம், அந்த ஸ்மிருதிக்கு வியாக்கியானம் எழுதிய பலரும் இருவகையினராகப் பிரிந்து, ஒரு வகையினர் ஒரு கொள்கையையும் மற்றவர் பிறிதொரு கொள்கையையும் கொண்டிருந்தமையே யாகும்.

**தாயபாக முறை,** குடும்பச் சொத்தை, ஒரு குறித்த முறைப்படி வார்சுகளுக்கு அமைத்து அதைச் சிதருமல் பாதுகாப்பதாகும். இந்த முறையைக் கைக்கொண்டு யாஞ்ஞுவல்கிய ஸ்மிருதிக்கு வியாக்கியானம் எழுதியவர்கள் ஜிமூதவாகனர், சூலபாணி, ரகுநந்தனர், ஸ்ரீ கிருஷ்ண தர்க்காலங்காரர் ஆகியோர், இவர்களுள் ஜிமூதவாகனர் எழுதிய **தரும தத்துவம்** என்ற பெயருள்ள வியாக்கியானமே சிறந்தது என்பர். அதற்குப் பல உப வியாக்கியானங்களும் உண்டு. தாயபாக மத ரீதியாய் எழுந்த மற்ருெரு வியாக்கியானம் சூலபாணி என்றவர் இயற்றிய **தீபகலிகா** என்பது. இவ்வியாக்கியானம் வங்காளத்தில் அதிகச் சலுகை பெற்று விளங்குகிறது. இவ்வாறே யாஞ்ஞுவல்கிய ஸ்மிருதிக்குத் தாயபாக முறையை வற்புறுத்திப் பல வியாக்கியானங்கள் எழுந்தன.

**மிதாக்ஷர முறை,** சொத்துப் பிரிவினையில் தாயபாக முறையைப் பின்பற்ருமல், மனைவியர், மக்கள், உறவினர் முதலியோருக்கு இன்ன இன்ன பாகம் உண்டு என்று கூறுவதில் வேறு முறையைப் பின்பற்றுவதாகும்.

**மிதாக்ஷரம்** என்பது **விஞ்ஞானேசுவர்** என்றவர் யாஞ்ஞுவல்கிய ஸ்மிருதிக்கு எழுதிய வியாக்கியானமாகும். இது, ஷை ஸ்மிருதிக்கு உண்டான வியாக்கியானங்களுக்குள் மிகப் பெரியதும் சிறந்ததும் ஆகும் என்பர். விஞ்ஞானேசுவரர், மேலைச் சாளுக்கிய மன்னர் விக்கிர

மாதித்தியர் II ஆட்சிக் காலத்தில் அந்நாட்டின் தலைநகரான கல்யாணியில் வாழ்ந்து வந்தார். ஆகவே அவருடைய காலம் 1070-1100 என்னலாம்.

யாஞ்ஞவல்கிய முனிவர் தம் ஸ்மிருதியை எழுதிய காலம் முதல், கி. பி. 11-ஆம் நூற்றுண்டு வரையில் வளர்ந்துள்ள வைதிகக் கருத்துக்களையும், வியவகாரக் கருத்துக்களையும் நன்கு அறிந்து, அவற்றின் அடிப்படையில் மிகுந்த ஆராய்ச்சியுடன் விஞ்ஞானேசுவரர் தம் வியாக்கியானத்தை இயற்றினதால், அஃது அளவில் மிகப் பெரியதாயிற்று. அவர் ஏற்றுக்கொண்டனவும் தள்ளினவுமான மேற்கோள்கள் அதனில் அதிகம் இடம் பெற்றுவிட்டன. மேலும் இவ்வியாக்கியானம் எழுந்த பிறகு இதுவே இந்தியா முழுமையும் ஏற்றுக்கொள்ளப்பெற்ற நூலாகப் பரிணமித்து விட்டபடியால், அந்த அந்தப் பிராந்தியத்திற்கே உரிய சிற்சில ஒழுக்கங்களும், பழக்க வழக்கங்களும், வியவகார முறைகளும் கொண்டு, பிரதேசவாரியாகப் பல உப வியாக்கியானங்கள் இதற்கு எழலாயின. இவற்றுள் **சுபோதினி, பிரமிதாக்ஷரம், பாலம்பட்டி** என்ற மிதாக்ஷர வியாக்கியானங்கள் குறிக்கப்படலாம். இவற்றையன்றி பிரதேச வாரியாக மிதாக்ஷரத்தைப் பின்பற்றி எழுந்த வழி நூல்கள் பலவாகும். இவற்றுள் நம் தமிழகத்தில் (1) ஸ்மிருதிசந்திரிகா (2) ஸரஸ்வதி விலாஸம், (3) வியவகார நிர்ணயம் (4) வியவகார மாதவீயம் (5) ஸ்ம்ருதி முக்தாபலம் என்னும் வைத்தியநாத தீக்ஷிதீயம் (6) மநுவிஞ்ஞானேசுவரீயம் என்பனவற்றைச் சிறந்தனவாகக் குறிக்கலாம். இவ்விதமே, பம்பாய், காசி, மிதிலா முதலான பிரதேசங்களிலும் மிதாக்ஷரத்தின் வழிநூல்களாக எழுந்த நிபந்தங்கள் பற்பலவாம்.

---

# பொருளடக்கம்

அநுபந்தங்கள்

உ

கணபதி துணை

அழகின் பெருமாள் பாடிய

# மநு விஞ்ஞானேசுவரீயம்

---

காப்பு

*பொங்குமநு விஞ்ஞானம் பூதலத்தி லேதமிழால்*
*எங்கும் விளங்க வியம்புதற்குப்—பங்கயமாம்*
*செங்கையினால் விக்கிரமா தித்த விநாயகராம்*
*ஐங்கரனைப் போற்றுவனன் பாய்.*

குறிப்பு :—இந்நூலின் பெயர், மநுவிஞ்ஞானம் என்றும், ' மநுவிஞ்ஞானேசுவரம் ' என்றும் இதன் செய்யுள்களில் காணப்படுகின்றது. '' விக்கிரமாதித்த விநாயகர் '' என்பதில், ' விக்கிரமாதித்த' என்னும் அடைமொழி, உரையாசிரியர் விஞ்ஞானேசுவரர், சளுக்கிய நாட்டில் கலியாணபுரத்தில் இரண்டாவது விக்கிரமாதித்தன் காலத்தில் வாழ்ந்துவந்ததைக் குறிப்பதாகலாம். கையினாற்பெறும் பயன், விநாயகக் கடவுளைத் துதித்தலேயாகும் என்பது பெறும்பொருட்டுத் தன் கைக்குப் ' பங்கயமாம் ' செங்கையினால் என்னும் அடைகொடுத்துச் சிறப்பித்தார்.

---

பாயிரம்

*பூதலத் துள்ள வழக்கினை நற்புகழ் வடமொழியால்*
*காத லுற்றுமா முனிவ ரியற்றிய விந்நூலுக்*
*கேத மற்றபேர் மநுவிஞ் ஞானே சுரமென்றார்*
*நீத மிப்புவி தன்னிலே நிகழ்வகை நினைத்தே.* 1

நெல்லை யாம்பிர மவிருத்த புரநிலத்தில்
செல்வர் சந்திவி நாயகர் முன்வட சிறகில்
இல்ல மேவிய வேதரில் இளம்புகழ் பெறுவோன்
சொல்ல வேபரத்துவாசசற் கோத்திரத்தில் வந்துதித்து, 2

பயன்கொளு மாபத் தம்பசூத் திரத்தில் வரும்பழையோன்
வயங்கொள் காந்தி மதிவல்ல வன்னருள் மதலை
சயங்கொள் வேங்கட குருநாத சோசிய ராஞ்செல்வன்
நயங்கொள் வாக்கினு லவ்வட மொழியினை நவில, 3

மன்னர் போற்றவே சீகிட்டி ணையம்பதி வாழும்
தென்னவன் அழகின் பெருமா ளருள்தேவன்
இன்ன மென்குரு சங்கர தேசிகர் எளிதாய்ப்
பொன்னி நாடரும் புகழ்தமி ழாக்கியே புகன்றார். 4

(இவற்றின் பொருள்). முனிவரால் வடமொழியிலியற்றப் பட்ட இந்நூலுக்கு, " மநுவிஞ்ஞானேசுவரம் " என்பது பெயர் ; (மநு தர்மத்தைக் கூறும் இந்நூலுக்கு, விஞ்ஞானேசுவரரால் உரை எழுதப் பட்டதனுல், " மநுவிஞ்ஞானேசுவரீயம் " என்று இந்நூல் பெயர் பெறுவதாயிற்று என்பர்.)

வடமொழியிலுள்ள இந்நூலை, திருநெல்வேலி யென்ற பிரம விருத்தபுரத்தில், சந்தி விநாயகர் ஆலயத்தின் சந்நிதியில் வடசிறகி லுள்ள இல்லத்தின்கண் வாழ்ந்தவரும், மிக்க செல்வமுடையவரும், வேதியர் குலத்திற் பரத்துவாச கோத்திரத்தில் ஆபத்தம்ப சூத்திரத்தில் தோன்றியவரும், பழைய குலவொழுக்கமுடையவரும் ஆகிய 'காந்திமதி வல்லவன்' என்பவருடைய புதல்வராகிய " வேங்கடகுருநாதசோசியர் " சொல்ல, இதனைத் தமிழில் எளிதாக உரைநடையில் மொழி பெயர்த்துக் கூறியவர், " ஸ்ரீ கிருஷ்ணை " என்னும் ஊரில் வாழ்ந்தவ ரான " தென்னவன் அழகின்பெருமாள் " என்பவரின் புதல்வரும், இந்நூலாசிரியராகிய " அழகின் பெருமாள் " என்பவரின் தந்தையும், குருவுமாகிய " சங்கரதேசிகர் " என்பவராவார்.

இதனை விருத்தத்தினுல் இயற்றியவர் மேற்கூறிய சங்கரதேசிகர் என்பவரது புதல்வரும் மாணுக்கருமாகிய " அழகின் பெருமாள் " என்பவர் ஆவார்,

### அவையடக்கம்

புகன்ற சொல்லினை யவர்தரும் புதல்வரிற் பொறையே
அகங்கொ ளாவடி யேனழ கின்பெரு மாள்யான்
செகங்கொ ளச்செய்து கவிஞர்மு னுரைப்பது தேரிலச்
சுகங்கள் முன்வலி யான்மொழி சொல்லுவ போலும். 5

காற்றி யாவையு நாங்கூ ழுண்பே னெனக் கருதிச்
சீற்ற மாகவாய் திறந்தது போலுங்கண் டெரியான்
மாற்றி லாவிரத் தினம்விலை மதிக்கவே துணிந்தங்
கூற்ற மாகவே ரத்தின மெடுப்பது முவமை. 6

---

### நூல் வரலாறு

மன்னர் செய்தியு [1] மவர்வைத்த பெரியவர் மரபும்,[2]
பின்னர் வைத்தபி ராட்டுவி வாகன் செய் பெரிதும்,[3]
அன்ன மே! விவ காரத்தின் லட்சணமு, [4] மதனைச்
தன்ன றிவினுற் கேட்டறி கின்றலட் சணமும்,[5] 7

தன்ம மாய்விவ காரஞ்சொல் லுகின்றலட் சணமும்,[6]
இன்ன முங்கடன் கொடுத்தல்[7] வாங்குதலி[8] றுத்தல்,[9]
பின்ன மாகிய வன்பிணை[10] அடகினைப் பிடித்தல்,[11]
பொன்ன னய்! நிதி நிட்சேபம்,[12] லிகிதம், [13] புத்திகளும்,[14] 8

சாட்சியு,[15] மதைக் கேட்கின்ற லட்சணந் தானும்,[16]
காட்சி போன்றதெய் வப்பிர மாணத்தின் கருத்தும்,[17]
நீட்சி யாகிய, விஷ[18]மமு[19] வுழுந்தினல் நெய்யும்,[20]
வாட்கண் ணீ! சலந்[21] துலைவரு[22] கோசம[23] ரிசியும்,[24] 9

பதுமை,[25] முன்வச னத்தினல்,[26] இங்ஙனம் பகர்ந்த
புதுவி ஷத்தினை யாதியோன் பதுசத் தியப்பொருளும்,
எதுகரு மத்தும் சம்மதி கேட்கவேண் டியதும்,[27]
சதுமு கனவ னும்பிரி யாதலட் சணமும்,[28] 10

தாய மாதியாம் பொருளுக்கு லட்சணந் தானும்,[29]
ஏய வேயதைப் பிரித்திட வேண்டிய வியல்பும்,[30]
ஞாய மாகவே தாய்சொத் தைப்பிரிக்க நல்வழியும்,[31]
நேய மாம்பிள்ளை யற்றசொத் தினுக்குச் செய்ந்நெறியும்,[32] 11

எல்லை லட்சணம்,[33] மிருகத்தின் லட்சணத் தியல்பும்,[34]
குல்ல னுமசு வாமிவிற் கிரையம்,[35] நன் கொடையும்,[36]
செல்லு மென்னவே வாங்கின தைக்கொடுத் திடலும்,[37]
மெல்ல யாதுசே தாரத்தினி லட்சண விதியும்,[38] 12

வேலை கொள் கின்ற தும்,[39] சம் பளங்களி விதமும்,[40]
சால வேகொடுத்த சம்பளம் வாங்குதல் தானும்,[41]
பாலை............முபவர்க்கு வண்ணன்செய் பண்பும்,[42]
கோல மாகிய சொக்கட்டா னுதியுங் கோழி, 13

ஆதி யாம்விளை யாட்டும்,[43] வியாபாரத்தி னடைவும்,[44]
கோதின் பேச்சுக்கும்,[45] அடித்துக்கொண் டார்க்குங்கள்[46]
[ளனுக்கும்,[47]
பேதை யையழித் தவனுக்கும்,[48] தண்டினைப் பிரித்தும்
காதலாய் மற்ற குற்றங்கட் கேற்ற கண்டனையும்,[49] 14

ஆக நாற்பத்தோன் பாலிலட் சணமும்வி தியுமினி யடைவே
தாக மாய்ச்சொலத் தொடங்கிமுன் னுகவே தரணி
மோக மாய்க்கொளும் மன்னவன் முறைமநு முறையைச்
சோக மின்றியே தமிழ்மொழி யிற்சொலத் தொடுத்தேன். 15

நூல் வரலாறு முற்றும்.

---

# நூல்

## 1. இராச லட்சணம்

அரசர் கடன் மக்களை வளர்த்தல்; அதற்கு வழி துட்டரை வெல்லல் ஆம்; துட்டரை அறிவதற்கு விவகார உணர்வுடைய பெரியவர் துணை வேண்டும். அரசன் தன்மசாத்திரத்தின் வழி நடப்பவனுகவும், கோபம் ஆசை பொருமை முதலியன அற்றவனுகவும், தனக்கு வரும் இன்னலைக் கருதாதவனுகவும் இருத்தல் வேண்டும். அரசநீதி, தெய்வநீதி, தேசாசாரம், இவற்றைக் கடைப்பிடித்து நாட்டில் குற்றங்களை நீக்கி அவன் ஆளவேண்டும். சாதுவைத் தண்டித்துக் குற்றமுள்ளவனைத் தண்டியாமல் ஆளும் அரசன் நரகமடைவான். வியவகாரம் கொண்டு வருகிறவர் இயல்பு, அவரின் குலாசாரம் இவற்றை அறிந்தே அவன் அதனைத் தீர்க்கவேண்டும். அவ்வாறு செய்யா மன்னன் பழியையும் நரகையும் அடைவான்.

சபையோர், பிராட்டுவிவாகன் ஆகியோர்களை அவர்களின் தகுதியறிந்து அரசன் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கேற்ற பொருள் கொடுத்துக் காத்து வரவேண்டும். அரசன் தானே நேரில் வியவகாரத்தை ஆராய முடியாமற் போம்போது சபையினரைக் கொண்டு, விசாரணைசெய்து, குற்றத்திற்கேற்ற சிட்சை முதலியன செய்திடும் அதிகாரத்தை அவர்களுக்கு ஈயவேண்டும். சபையில் நால்வர் பெரியவர்களை அமைத்து, அவர்களின் உதவிகொண்டு பிராட்டு விவாகன் எந்நேரத்திலும் வழக்கினைப் பல தகுதிகளால் விசாரித்து முடிவு செய்தலையும் அரசன் செய்யவேண்டும். நீதி செலுத்துவோர் பரிவு சிறிதுமின்றி, நீதி நெறிப்படியே நின்று, அழிவழக்கு முதலியவற்றை அறிந்து, தண்டனைக்குரியவரைத் தண்டிக்கவேண்டும். இம்முறையில் ஆட்சி செய்பவனே நல்லரசனுவான்.

---

மன்னர் மாண்பும் கடனும்

*மன்ன ரானவர்க் கேகடன் சனங்களை வளர்த்தல்;*
*பின்ன தற்குத் துட் டரைச்செயம் பண்ணலே பெரிதாம்;*
*சொன்ன துட்டரை யறியவே பெரியவர் துணையாய்*
*உன்னி யேவிவ காரத்தை யுணர்வதே யுரிமை.* 16

தன்ம சாத்திரத் தின்வழி நடக்கின்ற தரத்தால்
உன்னு கோபமு மாசைபொ ருமையு மொருவி
இன்னல் வந்திடி னும்மதை யெண்ணியி ராமல்
அன்ன மே!என்றுஞ் சனங்களைக் காத்தவன் அரசு. 17

ராச சாத்திரத் தைத்தவ ருமல்நே ராயும்
ஈசர் நேர்...தன்ம சாத்தி ரத்தினுக் கிணங்க
நேச மாய்க்கொளுந் தேசவா சாரத்தி னையும்
ஆச கற்றியே பூமியாள் கின்றவன் அரசு. 18

சாத்தி ரந்தப்பி யேவிவ காரந்தீர்ப் பதனல்
காத்தி டுமன்னன் குற்றமில் லானைக் கண்டித்தும்
நோத்த குற்றமுள் ளவனையே....தண்டினை
நீத்தும் காத்தல்செய் தமன்னிகழ் நரகமு
[மடைவான். 19

எச்ச மயத்தோ ரெனினவ ரியல்புதப் பாமல்
நிச்ச யக்குலா சாரத்தி னெறியுந்தப் பாமல்
வச்ச க....ழிரந்தர சுசெயத் தேவரு மன்னை
முச்ச கங்களும் புகழுமென் றேமநு மொழிந்தார். 20

நீதி ஆள்வோர்

பேத மாய்விவ காரத்தைப் பிரித்தறி பெரியோர்
காத லற்றவர்க் கேற்றபி ராட்டுவிவா கனைப்
பூத லத்திலே யிவர்கட்கு வேண்டிய பொருளீந்
தாத ரித்துவைத் தறிந்தவ னேபுவிகா வலன். 21

மன்னன் றன்றிரு முன்பெரி யோர்களை வருவித்து
உன்ன றன்னையு மோர்கின்ற பிராட்டுவி வாகன்
தன்னை யும்வைத்து வரும்விவ காரத்தைச் சலியா
தின்ன தென்றறி கின்றவ னேபுவிக் கிறையோன். 22

அரசன் தானிருந் தேவிவ காரத்தை யாய்ந்து
தரம றிந்திட வேளைகூ டாவிடிற் றன்போல்
திறம றிந்திடச் சத்தியுள் ளவனுக்குச் சகத்துள்
நரர்களைச்சிட்சை ரட்சைசெய் திடும்திறம் நல்கி. 23

நல்கி ஞேனுடன் பெரியவர் நால்வரை யமைத்து
வல்ல பஞ்செய் பிராட்டுளி வாகன்றன் வழியால்
அல்லு மேற்பகற் பொழுதினும் வரும்வழக் கறிந்து
சொல்ல நேமித்து வைத்தவன் புவிதொழு மரசன். 24

பெரியர் கூடியே யன்பினுற் பயத்தினுற் பெரிதாய்த்
தெரிப ணத்தினுல் வழக்கழி வுரைய கத்துத் தேர்ந்தால்
பரிவை விட்டவர் பழிப்புறச் செய்துமேற் பரிந்தங்
கரிமை யிட்டவ னேயிந்தப் புவிதொழு மரசு. 25

அரசன் றன்னியல் பனைத்தையு முரைத்தன மவனே
தரம றிந்துநே மிக்கின்ற பெரியவர் தன்மை
நரர றிந்திட மநுவிஞ் ஞானேசுரம் நவின்ற
விரக றிந்துமேற் சொல்லலுற் றேன்புவி விளங்க. 26

இராச லட்சணம் முற்றும்.

---

## 2. பெரியோர் லட்சணம்

பின்வரும் குற்றமுடையவர் நியாய சபைக்குரியராகார்:—

வியவகாரி சொல்வதை விட்டு வேறொன்று நினைப்பவர்; முன் பகை கொண்டவர்; சபைக்கு வர அழைத்தபோது ஒளிபவர்; சபையில் கவனம் செலுத்தாமல் விசாரணை நடக்கும்போது வெளியேறுகிறவர்; அன்பு, பணம், பயம், இவை காரணமாகப் பொய்வழக்கை மெய்வழக்கு என்று கூறுபவர்.

சபைக்குரியவராவோர்:—

வேத சாத்திரம், தரும சாத்திரம், அரச நீதி இவற்றை அறிந்து, பிறருயிரைத் தம்முயிர்போல் கருதுபவர்; மெய்பேசல், கோபமின்மை, சத்துருவிடம் ஐயம் ஏற்படும்போது அவனை நல்லவனென்றே கருதுதல்; தாமே உய்யவேண்டும் என்ற கருத்தைக் கொள்ளாமை; ஞானம், நற்குலம், நடுநிலைமை, நன்மதி, மானம், விரையாமை, இனிய சொல், நிதானச் செயல், உடலில் அபிமானமின்மை, திடமதி, நரகுக்கு அச்சம், சுவர்க்க வாழ்வில் விருப்பு, இவ்வுடலின் நிலையாமையை உணர்தல் ஆகியவற்றைப் பெற்றவர்.

இத்தகைய நற்குணம் பெற்றவர்களாக 7 அல்லது 5 அல்லது 3 பேர்களை அரசன் சபையினராக நியமித்தல் வேண்டும். இவ்வாறு நியமிக்கப்படாத அந்நியனொருவன் சபைக்குள் வந்து அழிவழக்குப் பேசினால், அவன் தகுதிக்கேற்ற அபராதம், தண்டனை விதித்துத் தள்ளிவிடவேண்டும். நியமிக்கப்பட்டவர்க்கு விரோதமாய், அரசர்க்குத் தெரிந்தவரென்றும், சபையினர் ஒருவருக்கு நண்பரென்றும், ஒருவர் வந்து வழக்கை அழிவழக்கென்று கூறினால், அரசன் அவரையும் விலக்கிவிடவேண்டும். வழக்கின் உண்மையைச் சபையோர் கண்டறிந்து கூறத் தான் செய்தது பிழை என்று வழக்காளியே உண்மையை ஒப்புக்கொள்ளச் செய்யும் அச்சபையோருக்கு அரசன் வெகுமதிகள் அளித்து அவர்களின் புகழைப் பரப்பவேண்டும்.

---

வழக்கறிதற்குரியர் ஆகாதவர்

*வழக்கு ரைக்கவே நேமிக்கும் பெரியவர் தன்மை*
*பழக்க மாய்விவ காரிசொல் மொழிப்பயன் விட்டுக்*
*குழப்பி வேறொன்றைக் கேட்பவர் முன்பகை கொண்டோர்*
*அழைத்த போதொளிக் கின்றவ ரிவர்களு மாகார்.* 27

நாலு பேர்முனம் வந்திருந் தால்மொழி நவிலார்
ஏது மென்றுவந் தவ்விவ காரத்தை யியம்பில்
மேலு மோர்கரு மத்தினர் போல்வெளிப் போவார்
ஆலம் நேர்விழி யன்னமே! இவர்களு மாகார். 28

அன்பி னாலேனுந் திரவியத் தாலேனு மல்லால்
வன்பு செய்பவ னெனப்பயந் தோரும்பொய் வழக்கை
முன்பு நால்வர்முன் மெய்வழக் கென்னவே மொழிவோர்
இன்ப மேவிடார் வழக்கினுக் கிவர்களு மாகார். 29

வழக்கினை அறிதற்கு அருகராவோர்

வேத் சாத்திரந் தன்ம சாத்திரம் புவிவேந்தர்
காத லாய்க்கொளும் ராசசாத் திரத்தையுங் கருதி
ஓதல் பெற்றுப்பிற ருயிரையுந் தனதுயிர் போல
ஆத ரிப்பவன் வழக்கினை யறிவதற் கருகன். 30

மெய்யை யேசொல்லு கின்றவன் கோபத்தை விடுத்தோன்
அய்ய மேவுசத் துருவைமித் துருவென வறிந்தோன்
வய்யம் போற்றிய வரசர்கள் வழங்குத லாலே
உய்வை யேநினை யானிவர் வழக்கினுக் குரியோர். 31

ஞானி நற்குலன் மத்யஸ்த முடையகன் மதியோன்
மானி யெக்கரு மத்தையும் படபட வாமல்
சீனி யொத்தசொல் லாய்! பகர்ந் தாற்றலாய்ச் செய்வோன்
ஊனி டத்தின்மா லொழிந்தவன் வழக்கினுக் குரியோர். 32

மலைத்தி டாமதி யுள்ளவன் நரகுறு வழியைத்
தொலைப்ப னேவெனப் பயந்தவன் சொர்க்கத்தின் சுகத்தை
நிலைக்க வேபெற வேண்டுமென் றேநினைத் துடலை
உலைக்கு மேலவன் இவர்களே வழக்கினுக் குரியோர். 33

சபையோரின் எண்ணிக்கை

இன்ன நற்குணம் யாவையு முடையரி லெழுபேர்
அன்ன மே! அல தஞ்சுபேர் மூன்றுபே ராக
மன்ன னேமித்த தலத்திருந் தேவரும் வழக்கை
முன்ன மேமநு நூன்முறை மொழிந்ததை மொழியே. 34

வெளியார் வந்து அழிவழக்குரைத்தலைத் தடுத்தல்

அரசு நேயியா தப்புறத் திருந்தவ ணடைந்து
விரவி னல்வழக் கழிவுரை விளம்பினு னாகில்
தரம றிந்தப ராதந் தண்டினைச் செய்து தள்ளி
உரமி கும்பெரி யோர்வழக் கினையுணர்ந் துரையே. 35

நேம கஞ்செய்த பெரியவர்க் கெதிர்த்துநின் றரசர்
தாம றிந்தேனும் பெரியரி லொருவர்ச காவா
யேம றந்தேனும் வழக்கினை யழிவழக் கென்றால்
கோம யங்கினீ ரெனமறுத் தெதிர்மொழி கூறி, 36

நிசவ ழக்கைமற் றையபெரி யோர்சொலி நிறுத்திப்
பிசகெ னச்சொன்ன வாயினல் நிசமென்று பேசும்
வசமு ரைத்தர சன்கையால் வெகுமதி வாங்கித்
திசைய னைத்திலும் புகழ்பெறு வாரவர் தெரிந்தோர். 37

வரும் வழக்கினைத் தீர்க்க நேமிப்ப வர்மனப்
பொரு தமிழ்க்கவி யாலுரைத் தேனினி யுயர்ந்தவர்
கருது மூத்தம ஞனபி ராட்டுவி வாகன்
பெருமை யிப்புவி யறிந்திடப் பேசுவன் பெரிதாய். 38

பெரியோர் லட்சணம் முற்றும்.

---

## 3. பிராட்விவாகன் லட்சணம்.

---

பிராட்விவாகன் என்பவன் நீதிபதி. அவன் வழக்கினை ஊன்றிக் கேட்டு, உரைகளையும் தடையுரைகளையும் அவை வரும் வழிகளையும் ஆராய்ந்து, தன் அறிவினுல் உண்மை, பொய்மைகளை அறியும் வல்லமை பெற்றிருத்தல் வேண்டும். வழக்கைக் கொண்டு வருபவன் தொடரி; அவனே துபராளி எனவும் சொல்லப்படுவான். அவன் எதிர் நிற்பவன் எதிரி; அல்லது எதிராளி. பிராட்விவாகன் தொடரியின் வாக்கு மூலத்தை எழுதிக்கொண்டு, பின் எதிரி கூறுவனவற்றையும் எழுதி, தொடரியை மற்றொரு முறை தன் வழக்கைக் கூறக் கேட்டு எழுதிக்கொண்டு, இரு வாக்கு மூலங்களுக்கும் இடையே உள்ள வேற்றுமைகளை அறிந்து, உண்மையைக் கண்டு எவர்க்கும் வெறுப்புத் தோற்ருதபடி தீர்ப்புக் கூறவேண்டும். லிகித லக்ஷணப்படி எழுதும் பிராட்விவாகன் புகழ் எங்கும் பரவும்.

" நீதிபதிக்கும் ' பிராட் விவாகன் ' என்பது பெயர். வழக்குரைப் போரை விஞவுதல் பற்றிப் ' பிராட் ' என்றும், வழக்குக்களை விரித்து விளக்கி ஒழுங்குபடக் கூறுதலானுதல், அரசன் இல்லாத பொழுது நீதி மன்றத்தவரோடு கூடி நியாய அநியாயங்களை விசாரித்து உணர வல்லவனுதல், விசேடமாக எடுத்துரைப்பவனுதல் பற்றி ' விவாக ' எனவுங் கொண்டு அச் சொற்குப் பொருளுணரப்படும் " (சுக்ரநீதி பக்கம் 258.)

---

*வரும் வழக்கினைக் கேட்டறிந் துரைக்குரை மறுத்துமிக*
*ஒருவ னுக்கொரு வன்சொலும் வழிகளை யோர்ந்து*
*பெருகு புத்தியால் நிசமவத் தங்களைப் பிரித்துக்*
*கருதி டத்திற முள்ளவன் பிராட்டுவி வாகன்.* 39

*முன்ன மேவந்து சொலுந்துய ராளிதன் மொழியைப்*
*பின்ன மின்றியே யெழுதிக்கொண் டதற்குப்பின் வந்தங்*
*கின்ன காரிய மெனச்சொலத் தொடரெதி ராளி*
*தன்னை நேர்வைத்துத் தொடரிமுன் சொலுமொழி தனையே.* 40

மறுத்துஞ் சொல்லெனக் கேட்டவன் சொல்வதை வரைந்து
நிறுத்தி முன்னெழு தும்மொழிக் கிம்மொழி நிறுத்துச்
சிறுத்த தும்பெருத் ததுமறிந் ததில்நிசந் தெரிந்தோன்
வெறுப்பை யார்க்குங் கொடாதபி ராட்டுவி வாகன். 41

இசைய வாய்மொழி யாதியா யெழுதிய லிகிதத்
தசைவு றுமலே லிகித லட்சணப்படி யமைத்துத்
திசைக ளெங்கணும் புகழ்வழி யெழுதிடத் தெரிந்தோன்
விசைய மும்புக ழுங்கொள் பிராட்டுவி வாகன். 42

சத்தி யஞ்சொல் பிராட்டுவி வாகன்லட் சணத்தை
எத்தி சையும்புகழ்ந் திடவுரைத் தனமினிமேற்
சித்தம் நேர்படா வரும் விவகாரத்தின் செய்திமேல்
அத்தமிழ்க்கவி யாலுரை செய்குவென் விளங்க. 43

பிராட்விவாகன் லட்சணம் முற்றும்.

---

# 4. வியவகார லட்சணம்

---

வழக்குக்கள் தோன்றும் காரணங்கள் பத்து என்றும், அவற்றின் வகைகள் நாற்பத்திரண்டு என்றும் கூறப்படுகின்றன.

*ஒருவ னுக்குவ ரும்விவ காரத்தை யோரில்*
*பொருசப் தத்தாற்*[1] *பேச்சுவித் யாசத்தால்* [2]*புத்தி*
*மருவு மையத்தாற்* [3]*பலபல வேதுவா* [4]*லொருவன்*
*தருவ சனத்தாற்* [5]*ருனறிங் திருந்தது தன்னல்,*[6] 44

*அளவின* [7]*னிறை யா*[8]*லெண்ணி ன*[9]*விலா பத்தால்*[10]
*வளரு மிப்பரி சீரைந் தாதியில் வரும் வழக்குப்*
*பழகிடா வெதி ரிக்குவி ரோதமாய்ப் பகைத்துக்*
*குழைவி லாததொ டரிக்கின்ப மாகிய குணமாய்,* 45

*இருக்கு மேயது கடனிடு மிலட்சண மாதி*
*பெருத்த நாற்பத்தி ரண்டிலட் சணங்களாய்ப் பிரியும் ;*
*அருத்தி யாலிதி லோர்வழக் காலொரு வரினல்*
*வருத்த முற்றவன் வாயினல் வரும்பொருள் வழக்கு.* 46

*இங்கி யான்விவ காரத்தி னிலட்சண மியம்பிச்*
*சங்கை யாய்விவ காரத்தைக் கேட்குமிலட் சணத்தைத்*
*துங்க மாயினி மேற்கவி யாற்சொலத் தொடுத்தேன்*
*பொங்கு போதத்தர் இதன்பிழை யாவையும் பொறுப்பார்.* 47

வியவகார லட்சணம் முற்றும்.

---

# 5. வியவகாரம் கேட்கும் லட்சணம்

---

வாதி பிரதிவாதிகளுக்குரிய வியவகாரங்களை அவர்களே கூற வேண்டும். வெகு சன விரோதி கொண்டுவரும் வழக்கையும், கணவன் மீது மனைவி, உடையவனுக்கெதிர் அடிமை, பெற்றோர்க்கெதிர் பிள்ளை, பிறனுக்காக உத்தரவின்றிவரும் ஒருவன், இவர்கள் கொண்டு வரும் வழக்குக்களையும் கேட்கலாகாது. ஒருவர் வழக்குரைக்கும்போது, அது அழிவழக்கென்று சபையோர் கண்டால் அவரிடம் அவ்வாறு சொல்லி அவரை நீக்க வேண்டும். மன்றினுள் (எதிரியாகவோ, சாட்சியாகவோ) இழுத்துவரப்படாதவர் இருபத்துநால்வர் என்று கூறப்படுகின்றனர்.

வாதி தன் வழக்கைக் கூறினவுடன் பிரதிவாதியை அழைக்கும் முறை 57-58 ஆவது செய்யுட்களில் கூறப்படுகின்றது, 59-61 வரை பெண்பாலருள் வழக்கு மன்றத்துக்கு வரக்கூடியவர் இன்னார் என்றும், வரக்கூடாதவர் இன்னார் என்றும் குறிக்கப்படுகின்றது. எதிரி வந்த பிறகு மற்றொரு முறை வாதியின் வழக்கைச் சொல்லச் செய்யவேண்டும். வாதி பிரதிவாதிகளைத் தலைமுதற் கால்வரை நன்றாக உற்றுப் பார்த்து, இருவர் சொல்வதையும், வருடம் ருது, மாதம், பட்சம், தேதி, இரவு, பகல் முதலிய குறிப்புக்களுடன் எழுதிக்கொள்ள வேண்டும். வழக்கிற்குரிய திரவியத்தின் அடையாளங்களையும் வாதி, பிரதிவாதி, சாட்சி இவர்கள் பெயர்களையும் மற்றும் பல நுட்பமான செயல்களையும் பிராட்விவாகன் எழுதிக்கொள்ளவேண்டும். வழக்கு அழிவழக்கு என்று கண்டால் அதனைத் தள்ளிவிட வேண்டும். (பிரதிவாதி வர முடியாதபடி உடல் நலம் குன்றியிருப்பின் அவன் மகன் அல்லது வேறு உத்தரவுபெற்ற உறவினர் அவனுக்காக வரலாம் என்றும் கூறும் பகுதி ஏட்டில் சிதைந்துள்ளது.)

பணம் பெற்றுக்கொண்டு வழக்கைத் தள்ளி விடுதலால் நீதிபதிகட்கு நரகே கிடைக்கும், ஒருவன் மீது பல வழக்குக்கள் இருந்தால் அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக விசாரிக்கவேண்டும்.

அகாரிய வழக்குக்கள் என்ற அறுவகை வழக்குக்கள் உதாரணங்களுடன் விளக்கப்பட்டுள்ளன, இன்னும் நல் வழக்குக்கள், தீய வழக்குக்கள், பல்வழக்கொரு வழக்கு, ஒருவர்மீது பல வழக்குக்கள் போன்றவற்றை விசாரித்து உண்மை யுணரும் முறையும் கூறப்பட்டுள்ளன.

வழக்குரைப்பவர் வாதி பிரதிவாதிகளே.

துயரி தானல தெதிரி தானிவர் சொல்லும் பணியைப்
பயமு டன்புரி மனுடன் ஞன் காரணர் பலர்தான்
வயம்வி ரும்பியே விழைவிவ காரத்தை வந்து
நயமுடன் சொன்னூற் கேட்ட்வன் மொழியினை நாடிலர். 48

வழக்கு சொல்லத் தகாதவர்

வெகு சனத்தினுக் கேபகைத் திருக்கினு[1] மேவத்
தகுபு ருடன்மேல் மனைவிகொள் வழக்கினுந்[2] தரணி
நகும் விலைப்பட்டோன் நாயனுக் கெதிர்நவின் ரூலும்[3]
புகுமன் புற்றதாய் தந்தைமேல் மகன்புகன் ரூலும்,[4] 49

ஒருவற் கேற்றவ னுத்தர வின்றியே யொருவன்
மருவித் தான்வழக் குரைத்தனை யுரைக்கவந் தாலும்[5]
வெருவிப் போம்வழி யுரையிந்த ஐவரை விட்டுக்
கருமத் திற்குடை யவன்வந்து வழக்கினைக் கழறில், 50

அழிவழக்கைத் தள்ளிவிடவேண்டும்

அவனு ரைக்கிலே யழிவழக் கீதென வறிந்தால்
கவனம் வைத்திடா யிவ்வழக் கினிலெனக் கழறி
உவமை யோதிடாப் பெரியவர் ஒழித்தலே ஒழுங்கு
புவனி யொப்பவே நிசவழக் கெனமனம் பூண்டால், 51

மன்றத்தில் வரக் கட்டாயப்படுத்தப்படாத இருபத்து நால்வர்

எதிரி யானவன் குழந்தை[1]மா விருத்தன்[2]வந் திடுக்கண்
அதிக மேவுவான்[3] ஒருவனுக் குதவியில் மறவான்[4]
மதியி ராசர்தம் கருமத்தை [5]மணக்கரு மத்தைப்
பதிவுடன் செய்வான்[6] அதிக விசாரத்துடன் பதிந்தான்,[7] 52

பயித்திய[8] மன்றிப்பேய் கொண்டோன்[9] சேவகப் [பணியோன்[10]
செயிக்க லாகுமோ தோற்குமோ யெனும்வழி தெரியான்[11]
மயக்க மின்றியே செய்வழக் குள்ளவன்[12] மற்றேன்
றுயர்ச்சி யாலவன் மறியனுக் குள்ளுறுந் துயரோன்.[13] 53

அன்னி யங்களாந் தேசத்தி விருந்துவந் தடைந்தோன் [14]
உன்னும் நீருறு மாற்றினுக் குள்ளுறு வோனும் [15]
பின்னலா மானியி னுள்ளம் பெற்றவன் [16] பேண
மன்ன னுற்றுய ருறுபவன் [17] தரிப்பின்றி மலேவோன், [18] 54

நோயன் [19] தன்மதி யாக்விப் பெரியரை நோக்கி
ஞாயங் கேட்கவே வருபவன் [20] ஒருவனே நாடி
நேய மின்றிவாய்ப் போக்கிக்கொண் டிருப்பவன் [21] நீண்ட
வாய மின்றேனும் தனிப்பசு மேய்த்துக் கொண்டமர்ந்
தோன், [22] 55

பயிரைக் காத்துக்கொண் டிருப்பவ [23] னொருவன்மேற்
[பகைத்து
வயிரத் தாயுத பாணியாய்ப் போமவன் [24] வருமிங்
குயிரிற் சொக்கு மெண்மூ வரி லொரு வன்னென் றோர்ந்தால்
குயிலுக் கேங்க ராய்! மறித் திழுத்திடக் கூடா. 56

எதிரியை மன்றத்தழைத்தல்

கால மாவது வாகன மாவது கண்பார்த்
தேல வேகொடுத் தழைத்திடல் விதியெதி ரிக்குச்
சால வேவரச் செயலிலே யேலவன் றந்தை
தூல மாமுட னறைந்தவ னுபிரத்து........பாக, 57

வருஞ்சி னேகிதன்ம தலேகளிறந்த நால்வரிலே
பொருந்து நெஞ்சின னுமவன் றன் னேவரப் புகலெனக்
கரும்பு விக்கறிங் திடச்சொலி யெதிரிசொன் னவனேத்
திருந்த முன்னுயர்ந் தவனேவிட் டழைப்பதே செம்மை. 58

பெண்களில் சபையோர்முன் பேசற்குரியவர்

வந்த வன்வழக் கினுக்கெதி ராளிமா தாகில்
அந்த மாதினுக் குடையவாண் பால்களே யழைக்க;
முந்த யாவரு மற்றவள் விருத்தையாம் மூத்தால்
வந்து பேசலாம் பெரியவர் திருமுனவ் வழக்கை. 59

நாய னற்றவள் தேவடி யாள்பொருள் நாடிப்
பாய விற்பலர் புணர்வதே யிதமெனப் பரிவாள்
நேய மற்றுற வின்முறைத் தலைவனை நீத்தாள்
மாய முற்றவிந் நால்வருஞ் சபையர்முன் வரலாம். 60

வழக்கு மன்றத்துக்கு வரத் தகாத பெண்டிர்

ஆரு மற்றதிற் சிறுவய தானவள் அதிகச்
சீரு முற்றவீட் டினிலுறுஞ் சேயினள் திரளாள்
நேரு டற்பெரு மகவைப்பெற் றறையினில் நிற்பாள்
பாரு ளித்திற நால்வர் பெண் பாலையும் பதரு, 61

..............................................................

இரும்பு விக்குளிவ்வைந்து..............................
கரும்பை யொத்தசொற் பெ......வர வழக்கினைக் காதால்தேர்
விரும்பியுங் கேளா தகற்றலா மிதுமநு விதியே. 62

எதிரியைத் தடுத்து மன்றத்துக்கு வற்புறுத்தி அழைத்தல்

சொன்ன விப்பரி செதிரியை மறிக்கின்ற தொப்பரிது
தன்னை மற்றொரு வன்தடுத் தற்குளாந் தருணம்
முன்னெ திதிர்த்ததன் னெதிரியில் லாவிட முனமவனை
.............மூக்குளர் பொழுதிது மறித்திடாக் காலம். 63

தொடரி வழக்கு மன்றத்தில் முறையிடுதல்

தொடர்ந்து வந்துமுன் சொன்னவ னைமுனம்வரச் சொல்லிப்
படர்ந்த வன்பத முதற்றலை வரையினும் பார்த்துத்
திடங்கொண் டுன்மொழி சொல்லெனக் கேட்டெழு திக்கொண்
டிடங்கண்...............................பெல மெண்ணி, 64

பிரதிவாதியை அழைத்து அவன்முன் பிராதைச் சொல்லச் செய்தல்

வந்து சொன்னவத் தொடரிவாய் மொழியினுல் வருத்தப்
பிந்தி யவ்வெதி ராளிவா ராவிடிற் பெரியோர்
தந்த வாணையால் விசித்ததா னைச்சேவகர் தம்மால்
முந்தி வந்தவ னெதிரியை யழைப்பது முறைமை, 65

கூட்டி வந்தவவ் வெதிரியை முன்வரக் கூறி
நாட்ட மங்ஙனம் பதமுதல் தலைவரை நாடித்
தீட்ட முன்சொன்ன மொழியையவ் வெதிரிக்குந் தெரிய
மீட்டி வந்தவத் தொடரியை விளம்பென விளம்பி, 66

பிராட்டு விவாகன் இலிகிதத்தில் எழுதவேண்டிய விடயங்கள்
முப்பத்திரண்டு

பின்னுஞ் சொன்னதை வரைகின்ற லிகிதத்துப் பிரித்தே
இன்ன தர்ம்வரு டம்[1]ருது [2]மாதங்க [3]ளிதிலே
சொன்ன பட்சமு [4]ந்தெய்தி [5]யிராப்பகல தொன்றே[6]
மன்னு தேசந் [7]தீ ரங்களூர்ப்[8]பேராதி வாசம்,[9] 67

இடங்க ளெல் [10] லைகைகள் [11] சேத்திர [12]நாமங்கள் [13]இதனின்
தொடங்கி யேயள வும் [14]நிறை [15]யெண்களுந் [16]தொகுத்துத்
தடங்கொ ளும்பரு மங்களும் [17] நீளந்தன் [18] னகலம் [19]
அடங்கு கின்றவத் திரவியப் பேரி[20]றை யவன்பேர்;[21] 68

தொடுத்தி டுந்தொட ராளிபேர் [22] எதிரிபே [23] ரிவர்சொல் [24]
அடுத்த சாட்சிக்கா ரன்பெயர் [25] வங்கிஸத் தவர்பேர் [26]
இடுக்க வைக்குத வுஞ்சகோ தரன்பெய [27] ரிதனுள்
தடுத்தி டும்பொரு ளுக்குடை யவன்பெயர் [28] சாதி,[29] 69

பாஷை யும்[30]வய சும் [31] அடை யாளமும் [32] பகர்ந்த
ஆசறு மிந்த நாலெட்டுக் கருமத்தி லடுத்துப்
பேசவே வரும் வழக்கினுக் கிணங்கின பிரித்துத்
தேச மெங்கணுந் தெரிந்திட வழைத்தவர் திறத்தால், 70

இலிகிதத்தில் எழுதவேண்டிய பிற

நடந்த வார்த்தையும் முன்னிடுக் கத்தினல் நலிந்து
தொடங்கிச் செய்ததென் றும்முறை யுள்ளசொல் லாயும்
அடங்க வேயெடுத் திடுமொழிக் கேதுறை வற்றும்
முடங்கி டாவிவ காரத்திற் கேற்றிடு மொழியும், 71

நாலு பேருக்கும் தெரிவதா யிணக்கமாய் நகையா
தேல வேயி திப்படி நடக்குமென வெண்ணத்
தால மீதினிற் கேள்விக்கும் உத்தரங் களுமாகக்
கால தேசத்திற் கிணங்கிய மொழிகளே யென்று, 72

அறுவகை அகாரிய வழக்குக்கள்

பொருள் விரிந்துசொற் சுருக்கமாய்ப் புரையற எழுதிக்
கருதி வைத்திட .................. பிராட்டுவி வாகன்
வருப வனிந்தப் படியுரைத் தாலுமவ் வழக்கில்
ஒருவ னென்முயற் கொம்புகொண் டானென வோதும், 73

வழக்கி லாமை ஒன்றிவ[1] னெனதிவ்வில்................
விளக்கின் சோதியால் நாட்கழித் தானென விளம்பும்
அளக்கிற் றுன்பமில் லாமையொன்[2] றதுவலா லொருவன்
துழக்கி...... சபதப செப்படவெனத் துணிந்தே, 74

உரைத்துப் போயினு னெனச்சொலும் உரையின்மை யொன்
இரைத்தங் கென்னிலுக் கெதிரிவ னிருந்துபாட் டினேயே [றும்[3]
நிரைத்துப் பாடினு னெனுமிப்பயனின்மை யொன்றே[4] ; நேர்
வரிற்சற் றேயிவன் நுதலசைத் தகசித் துவந்தான், 75

என்று சொல்லுந்தீ ராமை யொன்று[5] ; உண்மையங் கென்னே
அன்று வைதன னெனப்புகல் பகைமையொன் றுக[6]
மன்று ளேயிந்த அறுவகை போல்வரும் வழக்கை
வென்றி டாதவ காரிய மெனத்தள்ள வேண்டும். 76

இன்னும் கேட்கப்படும் வழக்குக்களும் கேட்கலாகா வழக்குக்களும்

இந்த வாறைவிட் டேவரும் வழக்குக ளிறையோன்
முந்தி யேசெயும் கருமமூர் தேசங்கள், முறையாய்
வந்த பல்லுயி ரதற்குப காரமாம் கருமம் ;
நிந்தை யற்றவிக் கருமத்தை யழித்திடா நெறியேல், 77

செவியிற் கேட்க வரந்தீர்க்க வரந்தெரிந் தொருவழக்கைப்
புவியிற் பேசிற் பலவலுக் கட்டியே புகன்றலும்,
நவியுற் றுய்அழி வழக்கென வறிந்திடில் நடுவாய்
தவிசிற் றேன்றுமன் னும்பெரி யவர்களுந் தள்ளுவார். 78

பணங்கள் பொன்க ளென்வெள்ளிகள் முதற்பல பொருளே
இணங்கி யேயிவன் எடுத்துக்கொண் டானெ னும் வழக்கைக்
குணங்கொண் டாய்ந்திடி லழிவழக் கெனமனங் கொண்டால்
கணங்க ளாம்பெரி யோரதைக் கழித்தலே கருமம். 79

இப்ப டிக்கழி யாதந்தப் பொருள்களை யெல்லாம்
தப்பெ னத்தள்ள லாகுமா வெனமனத் தவறலால்
ஒப்ப வேயுரைத் தேதேனும் வாங்கியே யுதவும்
அப்பெ ரியவர் தமக் கென்னவே நரகினை யமைத்தார். 80

பலர் ஒருவர்மீது கொணரும் வழக்குக்களுள் விசாரிக்குமுறை

ஒருவன் மேற்பல பேர்வழக் குண்டென வுரைத்து
வரும தற்கதைக் கேட்டுமுன் வழக்கைமுன் வருத்தித்
தெருள றப்பிந்தும் வழக்கைப்பின் வருத்தியே தெரிந்து
கருதி மத்தியஸ் தமாகவே தீர்ப்பது கருமம். 81

மன்ன னுவது பெரியபி ராட்டுவி வாகன்
பின் னு மற்றுள ராவது வழக்கினைப் பேசென்
றென்ன வாற்றிலும் வலுக்கொடுத் துக்கெடுத்துவிட் டானேல்
அன்ன மே! அவன் வங்கிசம் வழக்கினு லிலையும். 82

வரும்வ ழக்கினைக் கேட்குமி லட்சணமிங்கு வழுத்தித்
தெரு ளுறுத்திட லேவிவ காரங்கள் செப்பும்
கரும லட்சண மேலுரை செய்குவேன் கருத்திற்
பொருள் மிகுத்தறி கின்றவ ரிதன்பிழை பொறுப்பார். 83

வியவகாரம் கேட்கும் லட்சணம் முற்றும்.

---

# 6. வியவகாரம் சொல்லுகின்ற லட்சணம்

வாதி கூறும் குற்றத்திற்குப் பிரதிவாதி சொல்லும் கூற்றுக்களின் வகைகள் சில தலைப்புக்களில் உதாரணங்களுடன் இப்பகுதியில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அவை உண்மை யென்று ஒப்புக் கொள்வனவும், குழப்பமுள்ளனவும், பொய்யென்று வாதிப்பனவுமாக இருக்கும். இவற்றிற்கெல்லாம் உதாரணங்கள் கூறப்படுகின்றன.

100-102 செய்யுட்களில் அழிவழக்காடுபவன் வாதாடும்போது அவன் உடலில் தோன்றும் மெய்ப்பாடுகள் கூறப்படுகின்றன. இரக்ஷண புருஷனிடம் விவகார சொத்தை அடைத்து வைத்தல், சில வகைப் பண வழக்குக்களில் முடிவு கூறுதல், மூன்று வகை மானிடப் பிரமாணங்கள், பலவகை தெய்வப்பிரமாணங்கள், பிரமாணங்களைத் தேர்ந்தெடுக்கும் முறை, ஐவகைத் தண்டனை முறைகள், பெண்ணுக்குச் செய்த குற்றத்திற்குத் தண்டனை ஆகியவை இப்பகுதியில் பிறகு கூறப்படும் செய்திகளாகும். இப்பகுதியில் வியவகாரக் கலைச்சொற்கள் பல நிறைந்துள்ளன. வடமொழி மூலத்தோடு ஒப்பிட்டு உணர்தல் பயன் தருவதாகும்.

வியவகாரத்தில் எதிரிபேசும் வகைகள்

*வரும்விவ காரி சொல்லும் வாய்மொழி வரவு பார்த்தால்*
*செருவிய வெதிரி சொல்லைத் தள்ளியும் வரும தன்பேர்*
*வெருவுறு துரைக்கும்* பட்ச வியாபக *மொன்றி லல்லால்*
*இருமையாய் ஞாய மாக விருக்கின்ற* சார *மொன்று ;* 84

*அய்யமில் லாதிருக்கும்* அசந்தித்தம் *ஒன்று ; முன்சொல்*
*பெய்தற்குப் பின்சொல் நேரேற் பெயரனு குலமொன் றாகும் ;*
*பொய்யொன்றே டொன்று சேராப் புரையுள்ள சொல்நா [மாகப்*
*பையவே தேடி யர்த்தம் பண்ணிக்கொள் ளுவதாஞ் சொல்லும்,*

பாடைச்சொற் *புலம்ப விங்கே பகர்ந்தவிவ்* வைந்திற்கும்பேர்
*கேடற்ற* அவ்வி யாக்கிய கெம்மியம் *பெயர்க்கொண் டிங்கே*
*நாடற்கு வருமா* றைந்தில் *நலிந்தவன் புகலு மாற்றைக்*
*கூடப்பே சிடிலே புத்தி கொண்டறிந்து கொள்ள* வேண்டும்.

தொடரிமுன் னெதிர்த்து வந்தோன் சொலுமொழி யதனைப்
[பார்த்தால்
அட.ரெனக் கிவனிரண்டா மைம்பது ரூபாய் முன்னே
கடனென வாங்கி யீயா னெனக்கட னுளது நானே
இடவழி செய்கே னிப்போழ் தென்னுஞ்சொல் பிரிதி பத்தி. 87

அப்படிச்சொல்வ தற்கு ளகப்பட்டுக் கொண்டு தன்மேல்
எப்படி யும்வாராம லிருக்கவேண்டுமென் றெண்ணிக் கொண்டு
அப்பரி சுள்ள ரூபா யதற்குக்கா ரணம்நா னல்லன்
செப்பினே னென்னுஞ் சொற்குப் பேர்செப்பினர் மித்தி
[யோக்தம். 88

உதாரணங்கள்

இந்தவா றிரண்டா மீதி லியம்புமித் தியோக்தந் தான்
அந்தவா றிவனெனக்கே யளித்திட வேண்டு மென்னில்,
முந்தியே யிவன்பொய் யாக மொழிந்தன னென்று மிங்கே
வந்தவா றறியே னென்றும் வாங்கிலனு னில்லை யென்றும்,

பேச்செல்லாம் பொய்த்தான்நான் பிறக்கவு மில்லையென்றும்
கூச்சமாய்க் கடன்கொண் டப்போ கொடுத்துவிட் டேனு
[னென்றும்
மாச்சுவா யெனக்குத் தான மாகத்தந்து விட்டா னென்றும்
ஏச்சுடன் பேசி ரூபா யிவர்தர வேண்டு மென்றும், 90

மறித்தென்னை நால்வர் முன்னே வருத்தினு னவர்கள் கேட்டுக்
குறித்திவன் சொல்லும் ரூபாய் கொடுத்திட வேண்டா
[மென்றங்
கறிக்கையுள் ளவர்கள் தீர்த்தா ரையரே யென்று முன்னே
பொறித்திடுந் தொடரி னின்று புகல்வழி விட்டு வேறே, 91

ஒருவழி யான சொல்லு மொட்டிலா திருக்குஞ் சொல்லும்
பொருள்வர லாறும் நெஞ்சம் புகுந்திடா வழியாஞ் சொல்லும்
கருதிமாச் சலினு லர்த்தங் காணுரை யில்லாச் சொல்லும்
பெரு.........நூறு பொன்னைத் தன்பாற் பெற்றவ னெனை
[யென்றுனே. 92

அதுபொன்னோ பணமோ வென்று மதுநிசந் தானென்
[றேட்டில்
பொதுமையா..........நீங்கள் சற்றே பொறித்துவாங் குங்கோ
[ளென்றும்
இதுவல்லா லதுநான் தானு வீந்திட வேண்டு மென்றும்
முதுமைக ளுணர்ந்த நீங்கள் மொழிந்தறி யுங்கோ ளென்றும்,

முற்சொ லுக் குப்பின் வந்த மொழிகளொட் டில்லா தாயும்
தற்கமிட் டெண்ணிநீயே தரககொண்டே னதுநிசந்தான்
மற்றதிற் சற்றும் நானே வைத்துக்கொள் ளவிலை யென்றும்
உற்றபா டையினுற் கேட்ப தொழித்தறி யாதிருக்கும், 94

பாடையால் மருது சொத்தைப் பகர்வதும் தகப்பன்சொல்ல
நாடறிந் திடநான் வாங்கி யிதுநர.......றே கென்றந்தை
நீடவைத் திடுவ தில்லை நின்றதும் வந்த வாறும்
கூடநா னிருந்த றிந்து கொள்ளவு மில்லை யென்றும், 95

வட்டியி னுடனே யீந்தேன் வாங்கின திவன்ரு னென்றுங்
கட்டுடன் பொய்யு மெய்யுங் கலந்திடுஞ் சொற்க ளாயும்
இட்டவத் தொடரி முன்ன மிவன்சில ரூபாய் சொன்னம்
பட்டெனப் புடவை யென்றன் பாற்கொண்டா னீயா னென்ன

இங்கிதி லொன்று நானே யீந்திட வேண்டு மற்றிங்
கங்கமாய்ச் சொனவி ரண்டு மளிக்கவேண் டியதே வில்லை
துங்கரே யென்று முந்தித் தொடுத்திவன் வீட்டில் நின்று
பொங்கிய மாடென் மாடு போக்கிவிட் டேனு னென்ன ; 97

போனநாட் கேட்டுக்கொண்டு போமுனு ளிருக்கு தென்றும்
ஆனதாய் முன்னோர் நாட்டொட் டதன்பின்னைப் பிள்ளையா கு
நானனு பவித்து வந்தேன் நலிவிலா தென்றுஞ் சொல்லில்
ஈனமிவ் விருபத் தின்மூன் றின்வழி போல வெண்ணி, 98

தானறிந் துசொல்லு கின்றேன் ரூனழி வழக்குக் காமன்
மானம்போம் வழியிவ் வாற்றில் வழுத்துவோ னடை
[யாளங்கள்
ஊனமாம் விவகாரத்தை யுரைக்கிலே யயலூ ருக்குப்
போனவ னுவான் சாட்சி புகலவே றில்லை யென்பான். 99

மெய்ப்பாடுகள்

நெற்றியில் வெயர்க்கும் பேசில் நேரிலான் முகமும் மெய்யுஞ்
சற்றெனும் வெளுக்கு மன்றித் தனிக்கறுப் பாகும் நாநீர்
வற்றியே யுலர்ந்து போகும் வார்த்தையுங் குன்றிப் போகும்
இற்றுரை யில்லா வார்த்தை யினைநிரம் பவுஞ்சொல் வானே.

பாட்டினி லிருக்கும் பேரிற் பரிந்தெவன் கண்ணி னாலே
மீட்டிமைக் கின்று னென்று வீணிற்பல் முகத்தைப் [பார்ப்பான்
நாட்டியே யுன்பேச் சென்ன நவிலென்று கேட்கு முன்னே
மாட்டினி லொன்றாய் வீழ்ந்து வழுத்துவான் வழக்கை [யெல்லாம்;

இந்தவீ ரஞ்சு போலே யிருக்கின்ற வடையா ளங்கள்
வந்தவன் பாற்கண் டாலிவ் வழக்கழி வழக்கென் றெண்ணி
முந்திய சொல்லுக் குச்சொல் முனிவிலா தெழுதி வாங்கிப்
பிந்தியே வழக்கைக் கேட்டாற் பிழைத்தவன் தெரிந்து [போமே.

சில வழக்கு வகைகள்

பரத்திரி வழக்கு ரைக்கும் பார்வழக் குரைக்கு மென்றும்
இரட்சை யாங் கொடுக்கல் வாங்க லில்வரும் வழக்கு ரைக்கும்
வரச்செய்தே முன்னுரைத்தே வாக்கினைப் பிடித்துக் [கேட்டால்
உரப்பல மதுவும் வழக்கி னுண்மையுந் தெரிய லாமே. 103

இரட்சணபுருடனிடம் வியவகாரப் பொருளை ஒப்புவித்தல்

தொடரிபின் னெதிரி வந்து சொன்னபின் னிசைவு வாங்கி
இடவிவ காரச் செய்தி யெழுதிப்பின் னவர்பால் வாங்கி
அடர்பிணை யிருபால் வாங்க வதற்கிணங்க வில்லை யென்றால்
படரிரட் சணபுருடன் பாங்கினில் வைக்க வேண்டும். 104

இலட்சண புருடரென்னும் இவர்கள்காத் துவைப்போன் [வந்தோன்
தரத்தினை வழக்கி னூலா தாயத்தைப் பார்த்துக் கொண்டே
உரத்தவ தனுக்குத் தக்க சம்பள முன்னிப் பேசிக்
கரத்தினில் நித்தம் வாங்கிக் காத்தவர்க் களிக்க வேண்டும்.

பணவழக்கில் முடிவு கூறுதல்

வழக்கினில் வந்து வெற்றி மருவுவோன் செலவு சேதம்
விளக்கியே யறிந்துஞாய மேயிது வெனுந்த னத்தை
இழைத்திடும் வழக்கி னோன்பா லேற்றுவெற்றி கொண்
[டோன் றன்னை
அழைத்திட வேண்டு மீட்டோ ரதிகமாம் புகழை யாள்வார்.

கொடுக்கவேண் டியதறிந்து கொண்டிதை யென்பான் பாலே
நடுச்சொல்வோர் சுமத்துஞ் சொன்னம் நாடிய தனைப்போலும்
கெடுப்படி தன்முதல் வாங்கிக் கொண்டிவ் வளவு சொன்னம்
மடுத்தில னெடுத்துக் கொண்டா னதையெனக் களிக்க
[வேண்டும்;

என்றடி வழக்கில் வந்தங் கிழந்திடுந் தொகையைப் போலும்
அன்றிவ ரிருபேர் தம்மை யடித்தரு நிதியம் வாங்கி
மன்றிரு முன்பு வைத்து வழக்கினை யறிந்தெந் நாளும்
வென்றிகொள் பெரியோர் என்று மேவலாம் புகழை
[யெல்லாம்.

மூன்றுவகை மானிடப் பிரமாணம்

எழுதிய லிகித மொன்றை யேற்றவ னனுப விக்கும்
வழுவிலாப் புக்தி கண்டு வந்தவன் சாட்சி யிந்த
நழுவிடா மூன்றும் வந்து நாடிய வழக்கிற் சேர்ந்து
பழுதிலா திருக்கு மாகிற் பாரினில் நிசமென் றெண்ணே. 109

அன்றியே லிகித மட்டும் அசைவிலா திருக்கு மாகில்
நின்றபுக் தியுடன் சாட்சி யிரண்டையு நினைக்க வேண்டா;
நன்றிலா லிகித மாகில் நாடிமற் றிரண்டை யும்பார்த்
தொன்றிய விவகா ரத்தி னுண்மையை நினைக்க வேண்டும். 110

தந்திடும் லிகிதம் புக்தி சாட்சியால் விவகா ரத்தை
வந்தவர்க் குரைத்த லின்பேர் மானிடப் பிரமா ணந்தான்;
இந்தமூன் றிலொன்று மின்றே லதுநிச மவத்த மென்று
சிந்தையில் வரும் வழக்குத் தேர்ந்திடத் தெளிந்தி டாதே, 111

தெய்வப் பிரமாணம்

மானிடப் பிரமா ணத்தால் வழக்கினைத் தெளிவ தின்றே
ஆனிடத் தஞ்சை யாடு மரன்திரு முன்போய்ச் சொல்லி
யேநிசத் தனிவ னென்றே யெண்ணவேண் டுமிதற்குப்பேர்
தேனிடத் தமருகின்ற தெய்வப்பிர மாண மென்றார். 112

இருவகைப் பிரமாணங்களுள் ஒன்றைத் தேர்ந்தெடுத்தல்

மூன்றிலோ ரேதுவேனும் மொழியவில் லாதிருக்க
ஏன்றுவந் திடும்வழக்கை யிருவரி லொருவன் பார்த்து
மான்றிகழ் கரத்தோ னுந்தெய் வப்பிர மாணத் தீதை
ஊன்றியே தீர்ப்போ மென்றங் குரைத்திட வொருவன் வந்து,

மானிடப் பிரமா ணத்தால் வழக்கினி யறிவோ மென்றால்
தேனிகர்த் திடவே பேசித் தெய்வப்பிர மாண மென்ப
தேனிதற் கறிந்தோர் சொல்வா ரிருவருங் கேளு மென்ன
வேநிறுத் தினபி னிங்கே விளம்புவீர் வழக்கை யென்றும்.

தெரிந்துமா னிடப்பிரமாணத் தினிற்றேற்ற வேண்டும் பந்த
..............கேளா னேலப் பாற்றெய்வப் பிரமா ணத்தில்
விரிந்தவவ் விவகாரத்தின் மெய்ம்மைவன் மையினைப் பார்த்துப்
பொருந்தின பிரமா ணத்திற் போவென விதிக்க வேண்டும்.

இருந்துவந் திடும்லிகிதத் தினிலொன்று யிருக்க நெஞ்சம்
பொருந்தியே வேறென் றாகப் போகின்றே மெனவந் [தோர்கள்
பெரும்புவி யறியச் சொன்னாற் பெயர்த்தந்த லிகித வாற்றில்
அருந்தவர் போவென் னுமல் அவ்வழிப் போவீ ரென்னே.

தீர்க்கவே யறியான் கூடித் தீர்த்திடும் விவகாரங்கள்
பார்க்குளே பெண்பால் கூடிப் பகர்ந்திடும் விவகாரங்கள்
ஆர்க்குமிவ் வழக்கை யெல்லா மழித்துப்பே சில்லா மன்னன்
மார்க்கம்விட் டா...வாயத் தீர்த்தவர்க் கேனும் மழிக்க லாகா,

தண்டனை முறைகள்

குற்றங்கள் சுமந்தோன் செய்த குற்றத்தைத் தரத்தைப்
[பார்க்கும்
மற்றவன் முகங்க றுக்க வார்த்தையே சொல்ல வைதல்
நிற்றலே செயல டித்தல் நேரப ராதம் வாங்கல்
சொற்பெறிவ் வைந்துங் கற்றோர் சொல மன்னன்
[செய்யவேண்டும்.

சொன்னவா றபராதத்தின் தொகைபிடிக் கில்லை யேனும்
மன்னவன் கையிற் சொன்ன மதிகமா யிருந்திட் டாலும்
இன்னல்செய் தவன் மதங்க ளிறந்திட வபரா தங்கள்
முன்னை நா லுணர்ந்தோர் சொன்ன முறைமன்னர்
[வாங்கவேண்டும்.

பெண்ணுக்குக் குற்றம் செய்ததற்குத் தண்டனை

ஆக்கினை குற்றஞ் செய்த வவரொரு பெண்ணை யானை
நோக்கியெவ் வுறுப்பை முந்தி நோவுசெய்தான் சொல்லென் று
வாக்கினாற் கேட்ட றிந்து....மற்றவனவ் வுறுப்பை....
போக்குவாய் நோதல் செய்வாய் புரந்ததின் றுங்க ளேக்கி.

இங்ஙனம் வழக்கு ரைக்கும் இலட்சண மியம்பி னேமேல்
செங்கையா லெந்தவன்ன த் தினர்களும் லாபம் வேண்டித்
தங்கள்கைப் பொருளைக் கேட்டுத் தயங்குவோர் முகத்தை
[நோக்கி
பொங்கவே கடன்கொ டுக்கு மிலட்சணம் புகலு வேனே. 121

வியவகாரம் சொல்லுகின்ற லட்சணம் முற்றும்.

---

# 7. கடன்கொடுக்கிற லட்சணம்

வியவகாரங்கள் பதினெட்டுக் காரணங்களால் தோன்றுமென் றும், அவற்றுள் கடன்கோடல் முதலாவதாகுமென்றும் நூல்கள் கூறும். இங்கு இப்பொருள், (7) கடன்கொடுத்தல், (8) வாங்குதல், (9) இறுத்தல் (10) பிணை, (11) அடகு என்று ஐந்து பகுதிகளில் விளக்கப் பெறுகிறது.

பந்தகக் கடனுக்கு நூறு பணத்துக்கு மாத வட்டி ஒன்றேகால் பணம். வெண்கடனுக்கு ஜாதிக்குத் தக்கவாறு வட்டி 2 பணம் முதல் ஒவ்வொரு பணமாக உயரும். காட்டில் போய் விபாபாரம் செய்ப வருக்கு வட்டி பத்து சதம்; கடல் வியாபாரிக்கு இருபது சதம். கைக்கடன் வாங்கினவன் திரும்பக்கொடாமல் ஊரிலேயே வெகுகாலம் இருந்தால், ஆறுமாதத்துக்கு மேல் வட்டியுண்டு. அவன் போய்விடில் வருடத்திற்குமேல் வட்டியுண்டு. வலியவனிடம் எளியவன் கடன் வாங்கிக் கொடாமலிருந்தால் அம் முதலுக்கு வட்டியுண்டு. வெளியூர் போய்விடில் மூன்று மாதத்திற்கு மேலும் வட்டியுண்டு. பசு, அடிமைப் பெண் இவற்றைக் கடன் கொண்டவர் கொடுக்கும் வட்டி அவற்றின் பிள்ளைகள், பாலும், வேலையும் அவற்றைக் கொண்டவ னுக்கே; தைலம், முதலியவற்றுக்கு வட்டி ஏழு பங்கு. ஆடை, தானியம், அப்பொருள்களைப்போல மூன்று, இரண்டு பங்குகள். இவை சமயோசித்தப்படியும் மாறும்.

முறி ஏற்பட்ட நாள் முதல் வட்டி உண்டு.

கடன் வகைகளும், வட்டி விகிதங்களும்

*ஆர்க்கும் **பெந்தகக்** கடன்வட்டி நூற்றுக் கைங்கா லுட்*
*பார்க்கு ஙீவதற்கு **வெண்கடன்** வட்டி பார்த்தி ரண்டும்*
*சேர்க்குஞ் சத்திரியர் வைசியர் சூத்திரா தியர்க்கும்*
*மார்க்கமொன் றென்றை யுயர்த்தித னுக்குள் வாங்கெனு*
[நூல்.

*கானகத் திற்போய் லாபஞ்செய் வதற்கிடுங்கடனுக்*
*கான வட்டியீ ரைந்தினுக் குள்ளுமார் கடற்போய்*
*ஈன மின்றிவியா பாரத்திற் கிருபது பணத்துள்*
*ஊன மின்றிவாங் கெனமநு நூலினி லுரைத்தார்.*

கைம்மாற்றுக் கடன்

கைக்கட னென்று வாங்கிக் கொண்டதை வெகுகாலம்
அக்க டன்கொடா தாருட னேயவ னிருந்தால்
திக்கறிந் திடவட்டி யுண்டா று திங்க ளின்மேல்
மைக்க ணுயவன் போய்விடில் வருடமேல் வட்டி. 124

வலிய வன்கட னெளியவன் முதறனை வாங்கி
வலிய வேகொடா விடில்முத லாளிக்காய் மறித்து
மெலிவு செய்தவன் வாங்கியீ யாம லூர் மேவிற்
கலியி லேயுந்தன் முதறனைக் கேட்டகா லமுதல், 125

உயர்ந்த வட்டியுண் டவனய லூர்க்குப்போ யோங்கில்
கயம்செய் மூன்றுதிங் கட்குமேல்நடக் கின்ற வட்டி
தயங்கி முன்கடன் கொளும்வலி யவன்முறித் தகைமை
பயஞ்செய் தேமன்னன் வாங்கியே கொடுப்பது பண்பு. 126

பசு, அடியாள் இவர்களைக் கடன்கொண்டால் வட்டி

ஆவை யும்புழுக் கச்சியை யும்முடை யவன்பால்
மேவு ரட்சைசெய் வேனென வாங்கிவே றொருவன்
தாவி ரட்சித்தாற் பாலுமவ் வேலையுந் தனக்கும்
ஈவு செய்வுடை யவனுக்குப் பிள்ளைக ளென்றார். 127

பொருள்களை வட்டிக்குக் கொடுத்தலும், அவற்றின் லாப
விகிதமும்

தயில வர்க்கமும் நிறைக்க வேஇடும் பொரு ளானும்
கையில் தந்த வட்டிக்கென் றேகடன் கொடுக்கில்,
இயலும் வட்டி தன்முதலினும் எழுபங் கினின்மேல்
உயரி லேழுபங்கு குறைந்தா லிதே யுளது. 128

வத்தி ரந்தவ சம்பணந் தந்த வட்டிக்
கொத்த பின்கடன் கொடுத்தலின் வட்டிதா னுயர்ந்து
மெய்த்த சீலைபோல் மூன்றுபங் கினுக்கும்வெள் ளாண்மை
மொய்த்த நற்றவ சங்கட்கு முதல்களைப் போல, 129

இரண்டு பங்கினுக் கும்பணத் தினுக்கிதை யேபோல்
திரண்டொரு பங்கினுக்குமேல் வட்டியே சேரிற்றுங்
[கொளமூன்
றிரண் டொன்றுமே வாங்குதல் தகைமை.... .........
சுரந்த வட்டியி திற்குறைந் தாலதைச் சொல்லும். 130

எப்பொரு ளேனுங்கடன் கொடுத்தே வட்டி வாங்கி
அப்பொ ருள்முதல் நிலுவைக்குப் புதுமுறி யானல்
செப்ப மாய்முறி பிறந்த நாள்முதல வட்டி சேரும்
ஒப்பி லாமுத லாளிக்கென் றேமநு வுரைத்தார். 131

கடன்கொ டுக்கின்ற லட்சண மிதுவரை கழறித்
திடங்கொண் டேகடன் கொடுத்ததை வாங்குதல் தெரியத்
தொடங்கி யேமநு நூலினிற் சொன்னசொன் முறையே
அடங்கி யித்தமிழ் நூலினு முரைசெய்வே னறிய. 132

கடன்கொடுக்கிற லட்சணம் முற்றும்.

---

# 8. கொடுத்த கடனை வாங்குகிற லட்சணம்

இதமாய்ப் பேசியும், உண்டி கொடுத்தும், வஞ்சனையாலும், இப்படிப்பட்ட உபாய வழிகளில் கொடுத்த கடனை வாங்கவேண்டும். அப்படியும் கொடுக்காவிட்டால் மன்னனிடம் சொல்லுக. பலர்க்குக் கடன்கொடுக்க வேண்டியவிடத்து ஜாதிப்படியும், முற்பிறந்த தேதி முறைப்படியும் கொடுக்கவேண்டும், அரசன் கடனை வாங்கிக் கொடுப்பதற்குக் கூலி கடனாளி கொடுப்பதில் பத்திலொரு பங்கு; முதலாளி கொடுக்க வேண்டியது ஐந்திலொரு பங்கு.

கடனுக்கு அரசன் கெடு வைத்தல், கடனுக்குப் பதிலாக வேலை வாங்குதல் முதலியன கூறப்படுகின்றன. ஒருவனுக்குக் கொடுத்த கடனை அவன் மகன், பேரன் முதலியவர்களிடமிருந்து வாங்க, கடனின் தன்மைகளுக்கேற்ற விதிகள் குறிக்கப்படுகின்றன. கடனை ஒருவன் திருப்பும்போது முதலாளி வாங்க மறுத்தால் வட்டியில்லை யென்று சொல்லப்படுகிறது.

முதலாளி தான் கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்கும் திறம்

*கொண்ட கடனைக் கெடுவினிற் கொடாதானைக்*
*கண்டுமுத லாளியிதகாரிய முரைத்தும்*
*பண்டைலிகி தாதிவிவ காரமே பகர்ந்தும்*
*விண்டகப டத்தில் முதல்மீள வழிசெய்தும்,* 133

*இதவசன மாகவமு தாதிகளை யீந்தும்*
*உதவினவ னிப்படியு பாயவழி செய்யில்*
*முதலதுவா ராவிடில்மன் முன்புசொலி வாங்கல்*
*அதமமல வென்றுமுனி யாவரு மறைந்தார்.* 134

பல முதலாளிகளுக்கும் கடன்திருப்பும் முறை

*வாங்கினவ னொருவன்முத லாளிபலர் வந்தால்*
*ஓங்கிய குலத்தவருக் குள்ளமுதல் முன்னும்*
*பாங்கில்வரு தாழ்ந்தகுலப் பண்பில் முதல் பின்னும்*
*ஆங்கொருகு லத்தினர்க ளாகிலவர் கட்கே.* 135

முன்முறிபி றந்தவனுக் கேமுதலை முன்னும்
பின்முறிபி றந்தவனுக் கேமுதல்கள் பின்னும்
மன்னவன றிந்துமுதல் வாங்கியருள் வானேல்
சொன்னமழை பெய்யுவன தொல்லுலக மெல்லாம். 136

அரசுக்குரிய கட்டணம்

இப்படிக்கொ டுத்தகடன் வாங்கியிடு மன்னன்
தப்பிவிடு மேற்கட னிறுக்கு மவர் தம்பால்
ஒப்பியப ராதமுதல் பத்திலொரு பங்கும்
செப்புமுத லாளிபணி செய்தலதன் கூலி. 137

அந்தமுத லாளிகை யடைந்தமுத றன்னை
இந்தவர சன்வழுவில் கூறிருப தாக்கிப்
பிந்தியொரு கூறுதனை யேபெறுதல் நன்று
முந்துமநு நூலினில் மொழிந்தவிதி யீதே. 138

கடனுக்குக் கெடுக் கொடுத்தல்

வாங்கினவன் மெத்தவும் வறியவனு மாகி
ஆங்கவன் குலத்தினும் மதிகனுமே யாகில்
தாங்கியே கெடுக்குறி தரப்படி விதித்துத்
தீங்கில்முத லாளிகெடுத் தேர்ந்துமுதல் வாங்கே. 139

கடனுக்கு ஈடாக வேலை வாங்குதல்

கட்டமுறு மவ்வறுமை யானகடன் காரன்
இட்டமுத லாளிகுல னீனகுல னுமேல்
தட்டற வருந்தொழில் சமைத்தவர்கள் செய்ய
விட்டவ னுடன்செலவில் மிஞ்சினதை வாங்கே. 140

கடன்களை வாங்கும் முறை

வெண்கடன் பந்தகத்தின் மேன்முதலை விட்டோன்
கொண்டகடன் காரன்மகன் கோதிலவன் பிள்ளை
தண்டியிந்த மூவரைத் தடுத்துமுதல் வாங்கப்
பண்டுதவும் வெண்கடனைப் பேரன்மகன் பாலே. 141

வாங்குவது நன்றல;ம னங்கொள்பந்த கத்தின்
ஈங்குவரு பேரன்மக னின்புறிவன் பிள்ளை
பாங்குதனிற் சென்றுகடன் றரவெனப் பகர்ந்தும்
ஆங்கவன்கொ டாவிடி லடகினை யெடுத்து, 142

விற்றுமுதல் கொள்ளமநு வின்விதி விளம்பும்
சற்றுமிரு மூன்றெனுந்த லைமுறைப்பிள் ளைக்கங்
குற்றவட கைக்கொளென் றுரைக்கவழக் கில்லை
நற்றரும நூன்மநுவின் நல்விதியி தம்மா. 143

வாங்க மறுத்த பணத்துக்கு விதி

நடுநிலையில் வைத்தபொரு ளுக்குநய மாக
இடுகடனை வாங்கினவ னீந்தபொழு தேலா
விடிலவன்வ தங்கையில் மேவுபொரு ளுக்கும்
கெடுநெடுக வைத்தமுத லாளிகேட் பதுவே. 144

தனக்கதிக குலத்தவர்க்கும் வட்டியிலை தன்போல்
இனத்தவர்க்குந் தாழ்ந்தவர்க்கு மென்றதொழி விடவே
யெனக்கணித்து வாங்குமுத லுக்குவட்டி யிலையென்
றுனற்குரிய மநுநூலில் உரைத்தவிதி யிதுவே. 145

ஈந்தகடன் வாங்குன ரியற்கையை யுரைத்தோம்
வாய்ந்தகடன் கொண்டவர்ம றுத்திறுக்கு மிவர்கள்
ஆய்ந்த மநு நூலதனி லருளினதை யானும்
தோய்ந்ததமி ழால்மிகவுஞ் சொல்லுமது கேண்மின். 146

கடன் கொடுக்கிற லட்சணம் முற்றும்.

---

# 9. கடன் இறுக்கின்ற லட்சணம்

குடும்பச் செலவுக்குப் பொதுவாக வாங்கப்பட்ட கடன், அக்குடும்பத்தில் பிரிவினை ஆகாவிட்டால், குடும்பப் பொதுக் கடனாகும். குடும்பத்தலைவன் அயல் நாட்டுக்குச் சென்றிருந்தாலும், இறந்துபோய் விட்டாலும், குடும்பமே அக்கடனை இறுக்கவேண்டும். தன் சொந்தத்திற்காகக் குடும்பத் தலைவன் வாங்கின கடனை மகன் இறுக்கவேண்டும். பேரன் முதலை மட்டும் கொடுக்க வேண்டும்; பேரன் மகனுக்கும் கடனுக்கும் சம்பந்தமில்லை. சொந்தக் கடன் கொண்டவன் மனைவியும் தாயும் அக்கடனை இறுக்கவேண்டியதில்லை. மகனைச் சாராக் கடன்கள் ஒன்பதும் ஆறும் பதினைந்தும் என்று வரையறுக்கப்படுகின்றன. மனைவி உழைப்பைக்கொண்டு உண்கிற கணவர் ஆறு வகையினர். அவர்கள் தம் மனைவியர்பட்ட கடனைக் கொடுக்கவேண்டும். மனைவி தான் வாங்கின கடனையும், தான் ஒப்புக்கொண்ட புருஷன் கடனையும் கொடுக்கவேண்டும். குடிகாரன், காமன் ஆகிய புருஷன் கொண்ட கடனை மனைவி கொடுக்கவேண்டியதில்லை. தகப்பன் பட்ட கடனை அவன் மகன் அல்லது பேரன் வயது வந்தபின் எவ்வளவு கொடுக்க வேண்டுமென்பதும் வரையறுக்கப்பட்டுள்ளது.

தந்தையின் கடனுக்கோ ஆஸ்திக்கோ தகுதியற்றவர் ஐவராவர் (160); ஒருவன் மனைவியை மற்றொருவன் ஏற்றுக்கொண்டால், முன்னவன் பட்ட கடனையும் அவள் காரணமாக அவன் ஏற்றுக் கொள்ளவேண்டும். முன் வாழ்க்கைப்பட்டுப் பிறகு வேறொருவனை மணந்துகொள்ளும் பெண்டிர் ஏழு வகையினர்; அவர்களைப் ''புனர்பூ'', '' ஸ்வைரிணி '' என இருவகையாகப் பாகுபடுத்தி, இவர்களின் புதுக் கணவர் முன் கணவர் பட்ட கடனைத் தீர்க்கவேண்டிய முறை கூறப் படுகிறது; அவர்களுள் யாவர் கடனுக்குக் கட்டுப்படாதவர் என்றும் விளக்கப்படுகிறது. கடனைக் கொடுப்பதற்கு உரியவர் எவரும் இல்லாத போது அது திரும்பாக்கடனாகும்.

பொதுக்கடன்

*தனதங்கிஷம் பிரியாமுனம் தம்பித்தமை யன்மார்*
*மனதின்படி வெவ்வேறவர் வாங்குங்கடன் முதலைத்*
*தினமன்புடன் பொதுவாகின செலவில்லளித் திருந்தால்*
*புனமங்கிதிற் போனாலு திருந்தான்கடன் பொதுவே.* 147

கடன்கொண்டதைப் பொதுவாகின் கருமத்தழித் தவனும்
திடங்கொண்டய லூர்க்கேகினுஞ் செத்தேகினு மவன்முன்
கடன்கொண்டவக் கடனையவன் ரூயுமனை யாளும்
முடங்காதிறுத் திடவேண்டிய தில்லையென மொழிந்தான். 148

தனதாகின செலவுக்கிடத் தானேகொண்ட கடனை
மனதாய்க் கடன் கொண்டான்முறிப் படிக்கே மகனிறுக்க
முனமாய்மகன் பிள்ளைமுறி முதல்மாத்திரங் கொடுக்க
இனமாகின பேரன்மக னிறுப்ப திலைகடனே. 149

குடும்பத்தைச் சாராக்கடன்

தூர்த்தன்[1] னரசன்முன்புகழ் சொல்லுமவன்[2] மல்லன்[3]
வார்த்தைசொலு முட்டாள்[4] பயித்தியன்[5] வஞ்சகன்[6] மட்டி[7]
சேர்த்தே புகல் சாடுமொழி தெரிவோன்[8] சாணைக் காரன்(?)
பார்க்குங் கள்ள னுடனே[9]யோன் பதுபேர்கொண்ட கடனும்,

தண்டக்கடன்[1] பெண்ணுக்கெனச் செப்பும்பரி சந்தான்[2]
வண்டத்தன விவகாரத்தில் வந்த கடனுக்கும்[3]
மிண்டர்க்கிடு சாராயத்தை மீட்குங்கட னுக்கும்[4]
தண்டிப்புகல் சூதாடின தனத்தின்கட னுக்கும்[5], 151

மதமீறுசொக் கட்டான்புரி வாதிற்கட னுக்கும்[6]
அதமாதிய வ்வாறையு மதிலே நிலுவையும்
இதமாகிய தந்தைவைத் திடிற்பிள்ளைக ளென்றும்
உதவாரது மநுநூலினி லுரைத்தோமிது நெறியே. 152

இடையன்[1]வெறிச் சாராயத்தை யீவோன்[2] வேஷ தாரி[3]
உடல்மாறுசெய் கூத்தாடி[4]வண் ணா[5]னூர்மற வன்போல்
அடல்வேடரிவ்[6] வறுபேர்களு மன்பாய்மனை யாட்டி
சடையாதுழைக் கத்தின்பவர் தாமாதலி லிவரும், 153

எச்சாதியி லுள்ளோர்களில் இவ்வாறுதின் பவனும்
வச்சாள்மனை யாட்டிகொண்டு வைத்தகடன் முழுதும்
மெச்சப்பிர மாணம்லிகி தாதிகொடு விளக்கித்
துச்சானதை யிறுப்பானெனச் சொன்னார்மநு நூலில். 154

மனைவியிறுக்க வேண்டிய கடன்

காந்தன்மரிக் குங்காலத்துங் கானிற்செலும் போதும்
ஏந்துங்கடன் நான்கொண்டதி திறுப்பாயென்ற கடனும்
பாந்தம்முடன் புருடன்கொளப் பாரியறி கடனும்
தாந்தம்மினிற் கொண்டகடன் ரூனுமயி லிறுப்பாள். 155

மனைவியிறுக்கவேண்டாக் கடன்

மதுவுண்பவன் காமனிந்த வழியாமவ நடையோன்
இதுவென்கட னெனச்சொல்லினு மியல்பாயறிந் திடினும்
மதிகொண்மனை யாட்டிமறுத் திறுக்க வழக்கிலையென்
றதுதான்மநு விஞ்ஞானத்தி லறையும்வழி யறியே. 156

ஒருவன் பட்டகடனை மகன் பேரன் முதலியோர் இறுத்தல்

தந்தைமரித் திடமாய்ந்தவன் ரூன்கொண்டிடுங் கடனைச்
சிந்தைமகிழ்ந் தவன்பிள்ளைபத் தாறுவய சின்மேல்
அந்தமுறிப் படிக்கே வட்டி கூட்டியதை யிறுக்கப்
பிந்தாமநு விஞ்ஞானத்திற் பெரியோருரைத் தாரே. 157

தாதைகடன் கொண்டுமறு தலத்தேசத்திற் செலினும்
வேதைகொளும் தீராதவி யாதிபிடித் திடினும்
காதன்மக னேந்நால்வரு டம்மேற்கடன் முறியின்
வீதம்மிறுத் திடென்றேமநு விஞ்ஞானத்தில் உரைத்தோம். 158

அத்தேசத்தோன் கடன்வட்டியுஞ் சேர்த்தே மகனிறுக்க,
வித்தாமகன் பிள்ளைவெறு முதல்மாத்திர மிறுக்க,
முத்தாதையின் சொத்தைவழி முறையாயணை யானேல்
கொத்தாம்பிர புத்திரன்கடன் கொடுப்பதிலை யிலையே. 159

மக்களுள் ஆத்திக்கும் கடனுக்கும் உரிமையற்றவர்கள்

அலி[1]யண்ண க[2]ளூமை[3]பிறப் பதிலேகுரு டனுக்குங்[4]
குலதர்மத்தை யிகழ்ந்தோ ரிந்தக்[5] குறியையவரு மிவர்கள்
நலதந்தையின் கடனாத்தியை நண்ண வழக்கிலையென்
றுலகின்மநு விஞ்ஞானத்தி லுரைத்தோ முரைத்தோமே. 160

விபசாரியரின் கணவர்கள்பட்ட கடன்களுக்குச் சில சிறப்பு விதிகள்

மாந்தர்க்குறும் சொத்துத்தன் மனையாட்டிபிள் ளைகடன்
சேர்ந்திப்படி யிருக்கிற்றன் மனையைச் சிலர் கொள்ள
ஏந்திப் பெறு மதலைதனித் தில்லத்திருந் தாலும்
வாந்திப்படி யுடைத்தாகிய வொருவன்கொண்ட கடனை, 161

தனங்கொண்டவ னிறுக்கப்பின்பு தாரத்தவ ளிறுக்க
இனங்கொண்டவவ் விருபேர்களு மிலையேற் பிள்ளையிறுக்கத்
தனங்கொண்டுமுன் கடன்கொண்டவன்
[மனைகொண் டவன்றன்
சினங்கொள்கட னிறுக்கின்றவன் தெரிந்தேசொலு
மினிமேல். 162

விபசாரிகள் எழுவர்

திரளும்முன மொருவன்றிரண் டாற்பின்னை யொருவன்
கருதிமணஞ் செய்தாள்[1]முதற் காந்தன்றனை யிகழ்ந்து
மருவுந்தொழிற் காகவொரு மன்னன்றனை மணந்தாள்[2]
வருகைம்மைமைத் துனன்மாரைவிட் டொழிந்தார்தமை
மணந்தாள்;[3] 163

இம்மூவர்க்கும் புனர்பூவென விளங்கும்பெய ரியம்பி
அம்மாபுரு டனைவைத்துமன் பாகப்பலர் புணர்ந்தாள்[4]
தம்மாற்புரு டனைவிட்டொரு சமத்தன்னிடத் திருந்தாள்[5]
செம்மான்வித வையானபின் றெளிவாகவைப் பிருந்தாள்;[6]

மணவாளனைப் பசியால்விட்டு வைப்பாகவ ந்திருந்தாள்,[7]
துணையானபின் ஞல்பேர்பெயர் சுவைரிணி யெனவும்
குணமாயுரைத் திவ்வேழ்விப சாரிகுலத் தவரில்
தணவாப் புனர் பூவின்முனந் தான்சொன்னவ டனையும், 165

இனமாஞ்சுவை ரிணிதன்னில்பின் னியம்புமவ டனையும்
மனமாகவைத் திருந்தான்வள மணவாளன்கொள் கடனைத்
தினமாயிறுத் திடவேண்டுமிச் செகத்தில்மற்ற வைவர்
நினைவாயிறுத் திடவேண்டிய தில்லைநிச மிதுவே. 166

திரும்பாக் கடன்

கடன்தந்திடும் வேதன்குலங் காணுவிடி லவன்றன்
இடங்கொண்டசொக் காரன்குலத் தியனவ னிலையேல்
தடங்கொண்டிடு பாசத்தவர் தம்பாலிட விலையேல்
திடங்கொள்ளவன் சாதிக்கிடத் தெரிந்தீதெனு மிலையேல்; 167

வரும்புண்ணிய நதிக்கீந்திட வழக்கங்கொண்ட முதலைப்
பெருகன்னிய குலத்தோரிடம் பெற்றகடன் முதலைத்
தரும்பாசத்தர் வரைக்குமிடத் தானும் மவரிலையேல்
திரும்பாக்கடன் கொண்டோன்முதல் என்றே
தெரிந்துரையே.

கொண்டகட னிறுக்கும்வழி கூறிமுடிந் ததன்மேற்
கண்டபிணை யதுலட்சணங் கருதிமநு நூலில்
விண்டார்வட மொழியாலதை விரும்பித்தமிழ் மொழியால்
உண்டாதலின் பொருட்டாய்விரித் துரைப்பேனுயர்ந் தோரே.

கடன் இறுக்கின்ற லட்சணம் முற்றும்.

---

# 10. பிணை லட்சணம்

---

குடும்பப் பிரிவினைக்குமுன் சகோதரர்க்குள்ளும், கணவன் மனைவியர்க்குள்ளும், தகப்பன் மகனுக்குள்ளும், பிணை, சாட்சி, கடன் கொடுத்தல் ஆகிய மூன்றும் செல்லுபடியாகா. பிறருள், 'அவன் ஆஜராக வேண்டிய காலத்தில் ஆஜர்ப்படுத்தல் என் கடமை' என்றும், 'என் வார்த்தையை நம்பிக் கடன் கொடு; அவன் ஏமாற்றமாட்டான்' என்றும், 'அவன் கொடுக்கத் தவறினால் நான் கொடுப்பேன்' என்றும் கூறப்படும் மூன்று நிபந்தனைகளின்மேல் பிணை கொடுக்கப்படும். முதலிரண்டும் பிணை கொடுத்தவன் உடலுள்ளவரை அவனையே சாரும் ; பிள்ளைகளைச் சாரா; மூன்றாவது வகைப் பிணை மகனைச் சாரும்; பேரனைச் சாராது (172—176). ஆனால் பிணை வாய்ச்சொல்லாலல்லாமல் சொத்துப் பிணையா யிருக்குமானாலும், மகனோ பேரனோ பிணையை ஒப்புக்கொண்டாலும் அவர்கள்மீது வியாஜ்யம் தொடரலாம் (176—177).

பலர் பிணை கொடுத்திருந்தால் அவரவர் தத்தம் பிணைப் பங்குக்குக் கட்டுப்பட்டவராவர் ; இப்படியில்லாமல் ஒவ்வொருவரும் தாம் தாம் பிணை என்று கூறியிருந்தால் கடன் கொடுத்தவன் அவர்களில் எவரிடமிருந்தேனும் வசூல் செய்துகொள்ளலாம். பிணைக்காரன் இறந்துவிட்டால் அவன் மகன் கொடுக்கவேண்டும் ; அவனும் இறந்துவிட்டால் பேரன் தன் தந்தைக்குரிய பாகத்தை மட்டும் கொடுக்கவேண்டும் (178—181); தந்தை இறவாது ஊரைவிட்டோடினால் பிணைமுறிக்குரிய வட்டியையும் முதலையும் மக்கள் கொடுக்கவேண்டும். (182).

இவ்வாறு நஷ்டமடைந்த பிணைக்காரனுக்குக் கடன்காரன் எவ்வளவு கொடுக்கவேண்டுமென்பது (183—186) பிறகு கூறப்படுகிறது. 'இவன் ஓடிவிட்டால் நான் பிணை' என்று ஒருவன் தன்னையே பிணையாக வைப்பது மானிடப் பிணையாகும். அதற்குரிய விதிகள் (187—189) செய்யுட்களில் கூறப்படுகின்றன. முடிவில் பிணைக்குரியராகார் பன்னிருவர் இன்னார் என்று வகுக்கப்படுகிறது.

குடும்பப் பிரிவினை ஆகாதபோது அதன் பிணை
முதலியவற்றில் ஈடுபடலாகாது

அங்கிஷம் பிரித்திடா தமர்ச கோதரர்
பொங்கமாந் தந்தைதன் புதல்வ ரானவர்
மங்கையர் மாதரை மணத்த வாடவர்
இங்கிதி லொருவருக் கேற்ற வொருவரே, 170

தன்பிணை யானது[1] சாட்சி யானது[2]
முன்கடன் கொடுத்தலிம்[3] மூன்றினால்வரு
கின்றவவ் வழக்குகள் கெலித்தி டாவென
வென்றிகொள் பெரியவர் விளம்ப வேண்டுமே 171

பிணை வகைகள் மூன்று; அவற்றுள் மகனைச் சார்வது ஒன்றே

பாரிலே மாந்தர்க்குப் படும்பி ணைச்சிக்கும்,
நேரிலே கடன்கொண்டோன் நிறுத்தும் பந்தகம்,
ஆரினா லேயேனு மழிந்து போனது
தேரிலே யுன்வசஞ் சேரப் பண்ணுவேன், 172

எனமுத லாளிகட் கென்றுசொல் கின்ற
தனமதற் கீடுசெய் தடையத் தன்பிணை
மனதுடன் சொல்லியே வந்திடுஞ் சிக்கும்
முனமிரு பிணைகளும் மொழிந்தவ னுடல், 173

உள்ளநாள் வரைக்குமே யுண்டவன் பெற்ற
பிள்ளைக ளின்வழி பேசிடா யெனத்
தள்ளலே புவிதனிற் றன்ம மாதலால்
வள்ளலாம் பெரியவர் வழுத்த லாகுமே. 174

இந்தத் தகுபிணை யேற்றுக் கொள்ளவே
வந்தவ னடகினை வாங்கிக் கொண்டுபின்
முந்தியே பிணைசொன்ன முதல்.........வியாச்சியத்
தந்தைபோ யவன்பிள்ளை தனையுஞ் சாருமே. 175

பிள்ளையின் மகனுடன் பிணைமுன் வாங்கினேன்
விள்ளவும் வழக்கிலை; விரும்பி முன்பிணை
கொள்ளவே சொன்னவன் கொடுத்த தன்னட
குள்ளதைப் பெயரனே யுதவ வாங்குவான். 176

இவன்முறிக் கெடுப்படிக் கீவ னில்லையேல்
அவன்றரு முதலெலா மளிப்பன் யானென
உவந்துசொல் பணப்பிணைக் குறும்வி யாச்சியம்
துவங்கியே மகனையுந் தொடர லாகுமே. 177

கூட்டுப் பிணை

பெயரனைத் தொடர்ந்ததைப் பேசவும்படா
தயலொரு வனுக்கிரண் டஞ்சு பேர்திரண்
டியலுறு முழுப்பிணை யெழுதி யீந்தபின்
நயமுடன் பிணைவைத்தோன் நகர்விட் டோடிடில், 178

பலபிணை வாங்கினேன் பார்த்தொ ருத்தனை
உலகினி லோடினே னுதவத் தக்கதை
அலவெனு தெனக்குநீ யளியெ னச்சொனல்
இலையெனு தளிப்பதே யிணக்க மாகுமே. 179

இப்படி யளித்திடா தேனை யோர்களும்
ஒப்பியே யுதவில்நா னுதவு வேனெனச்
செப்பினு லவன்தனைச் செகத்து ளோர்முனந்
தப்பிலாப் பெரியர்தண் டிக்க லாகுமே. 180

பலபிணைக் காரரிற் பாரை நீங்கித்தே
உலகினை யொருவனே யொன்றினு லவன்
இலகவே பெறும்பிள்ளை யென்றுதன் றந்தைக்
கலைவிலாப் பெரும்பங்கை யருள வேண்டுமே. 181

பிணைகொடுத்தவன் ஓடிவிட்டால், அவன் மக்கள்
கொடுக்கவேண்டும்

தந்தைதுஞ் சாதுதன் பதிவிட் டோடினல்
முந்திய பிணைமுறி முதலும் வட்டியும்
வந்தனை செயவரு மக்கள் கூடியே
பிந்திடா திருப்பது பெரிய ஞாயமே. 182

### கடன்காரன் பிணக்காரருக்குச் செய்யவேண்டிய கடமை

கடனைக் கொண்டுதன் பிணைக்கார ரைவிட்டுத்
திடமிலா தோடிய செடத்திற் காகவே
அடர்பிணைக் காரர்க ளளித்தி டும்பொருட்
குடையவ னளிப்பதங் குயர்ந்த வட்டியே. 183

வட்டிதான் முதற்றெகை வரைக்கு மாகுமுன்
விட்டுமுன் னேடினேன் மீண்ட னன்னெனும்
தட்டிலா திறுத்தலைச் சமன்செய் தேவட்டி
உட்டிண மாய்ப்புகன் றுதவச் சொல்லுவாய். 184

இரட்டிக்கு மேல்வட்டி யேறினல் முனம்
..........இத்தலத் தோடின பதிதன்றன்மன
உரத்தினல் முதலைவந் துதவும் நாள்மட்டும்
அருத்தியாய் வட்டிசேர்த் தளிக்க வேண்டுமே. 185

எப்பொருள் பிணைநின்று ரிறுத்தி ருக்குமே
அப்பொருட் குயர்வட்டி யளித்தி டாயென
மெய்ப்பொரு ளறிந்தமன் விளம்பி னலதற்
கொப்பிடு மொழிகளிவ் வுலகத் தில்லையே. 186

### மானிடப்பிணை

மானிடப் பிணைதந்தோன் மனமலைந்து போய்க்
கானிடத் தோடினுற் காட்டெ னப்பிணை
நானிருப் பேனென நவின்ற வன்முனம்
தேனிகர்த் திடமொழி செப்பும் நாள்முதல், 187

அப்பிணை யேகொடுத் தவன் மரித்திட்டால்
தப்பிலா தறிந்துயிர் தான்செல் நாள்முதல்
ஒப்பியே தொடர்ந்திடா தொன்ப தஞ்சுநாள்
இப்படி மிசையிறந் திதற்கு மேலைநாள், 188

முன்பிணை வாங்கினேன் முகத்தை நோக்கியே
இன்பமாய்ப் பிணைதந்தோ னீயத் தக்கதை
அன்பினுற் பிணைநின் றவனையே தொடுத்
துன்பொருள் வாங்குவா னென வுரைத்திடே. 189

பிணைவாங்கத் தகாத பன்னிருவர்

மனமலை வாய்ப்பிணை வாங்கு கின்றவன்
தனதிச மானன்[1]றன் சத்துருப்[2] பொருச்
சினமுறு காவலைச் சேர்ந்தி ருப்பவன்[3]
எனப்பிழை செய்துமீ ளாத கோ பத்தால், 190

ஆக்கினைப் பட்டிடு மவனும்[4] ஊர்திரண்
டுக்கமாய்த் தள்ளிய வொருவன்[5] தானிதி
நோக்கிலே மிகுத்தவ னுங்[6]தன் ரேழனும்[7]
வாக்கினுற் செய்கிலேன் மணத்தை யென்பவன்,[8] 191

மன்னர்பாற் சேவகன்[9] மாசன் னியாசிகள்[10]
பின்னர்சொல் லேழை[11]முன் பேப ழகிடான்[12]
சொன்னவி வ்வாறிரு தொகைக்குள் ளோர்களை
என்னவா றிலும்பிணை யேற்ப தில்லையே. 192

இவ்வழி பிணைச்சினி லட்சணஞ் சொன்னேம்
வவ்வியே யிதன்மே லொருவன் றந்திடும்
செவ்விய வடகினைச் சேர்க்கு மிலட்சணம்
அவ்வளவுஞ் சொல்வே னறிவு ளோர்கட்கே. 193

பிணை லட்சணம் முற்றும்.

---

# 11. அடகு பிடிக்கிற லட்சணம்

வாங்கின கடனுக்கு உத்தரவாதமளிப்பதில் ஒன்று ஜாமீன், மற்றது அடகு. ஜாமீன் என்பது '' பிணை '' என்ற முன் அதிகாரத்தில் கூறப் பட்டது. அடகு என்பது வடமொழியில் '' ஆதி '' எனப்படும்; அது வும் காலங்குறித்தது, குறியாதது என்றும், அடகுப்பொருள் அனுபவிக் கப்படுவது, படாதது என்றும் நால்விதமாகும். இவையும் இவை யொட்டிய பிறவும் இப்பகுதியில் கூறப்படும்.

அடகுப்பத்திரம் எழுதும் விதம் 194, 195ஆம் செய்யுட்களில் கூறப்படுகிறது, கெடு கழிந்து நான்கு நாட்களுக்குள் முதலையும் வட்டியையும் திருப்பிவிட்டால் அடகைத் திருப்பிவிடவேண்டும். தவறினல் முதலாளி அடகுப்பொருளை விற்றுவிடலாம். கெடு வைக்கா விட்டால் பணம் கொடுத்தபோது திருப்பவேண்டும். அடகுக்குக் கெடு வைத்து, அக்கெடுவும் கடந்து பல நாளாகி, வட்டி முதலோடு ஒத்துச் சமமாகிவிட்டால், அடகு வைத்தவனின் உரிமை போய்விடும்; முதலாளி மேலும் 16 நாட்கள் பொறுத்துப்பின் அதை அநுபவித்துக் கொள்ள லாம் (199—200); அவன் அநுபவத் தேதிமுதல் வட்டி இல்லை என்றே குறித்து வாங்கின அடகில், அநுபவித்ததால் (எடை) குறையு மானல், அதன் விலையைக் கடனில் தள்ளவேண்டும். முதலாளியின் கவனக்குறைவால் அடகுப்பொருள் அழிந்துவிட்டால் அதன் கிரயத்தை அவன் ஈடு செய்யவேண்டும்; வட்டியும் இல்லை (205—6). இராஜீய தெய்வீகங்களால் அடகுப்பொருள் அழியுமானல் முதலும் வட்டியும் கொடுக்கப்படவேண்டும்; அல்லது, புதிய அடகு வைக்கப்படவேண் டும் (206); வாங்குகிற முதலுக்கு மதிப்பில் குறைந்த அடகு வைக்கப்படுமாயினும், வெண்கடனைப்போல வாங்கின கடனையும் வட்டி யையும் முதலாளிக்கு அரசன் வாங்கிக்கொடுத்தல் வேண்டும். (209—10).

தருமத்தை ஒருவன் அடகு வைத்திருந்தால், அவன் பணம் கொடுக்காவிட்டால், அந்தத் தருமம் முதலாளியைச் சேராதபடி, முதலையும் வட்டியையும் அரசன் கடன் வாங்கினவனிடமிருந்து வாங்கி யளிக்க வேண்டும், கடன் பேரன் மகன் காலம்வரை நீடிக்குமானல், கடன் வாங்கினவன் புண்ணியம் முதலாளியைச்சாரும் (211—14).

ஓர் அடகுப்பொருள் வட்டியும் முதலும் சேர்ந்து முதலைப்போல் இரட்டிக்குமானல் அந்தத் தொகையைப் பேரன் கொடுத்துப் பொருளை

ஈட்டிக்கொள்ளலாம். பேரன் மகனும் தராவிட்டால் அடகு முதலாளியைச் சாரும்.

பலன்கொடுக்கும் பொருளை அடகு வைத்து, வட்டி கொடுப்பதாகப் பேசி, அவ்வட்டியும் முதலும் கொடுக்கப்படாமல், இரட்டிப்பாக, அதனை ஒற்றிக்கடனாக எழுதி முதலாளியின் அனுபவத்திற்கே விடலாம். அதற்கும் சொன்ன நாள் தப்பினால், முதலாளி அதன் வருமானத்தைத் தன் முதலுக்கு மூன்று பங்கு அனுபவித்துவிட்டபின் அடகுப் பொருளைத் திருப்பிவிட வேண்டும்.

அடகு நிபந்தனை

*தன்ன டகினை வைத்துத் தனத்தினை*
*முன்னம் வாங்கியிந் நாளில் முதலெலாம்*
*உன்வ சந்தந் தடகுக ளுள்ளதைப்*
*பின்னர் வாங்கிக்கொள் வேனிது பேதியா.* 194

*இந்த லக்கில்முதல் தந்திலே னெனில்*
*தந்தி ருக்கும டகைத்த னத்திற்கும்*
*வந்த வட்டிக்கு மேசரி யாகநீ*
*சொந்த மாகக்கொள் வாயெனச் சொல்லியே.* 195

மீறிய நிபந்தனைக்கு நடவடிக்கை

*அப்ப டிக்குலி கிதம்வ ரைந்தன்றைக்*
*கொப்பி யீந்து கெடுவென் றுரைத்தது*
*தப்பி நாலு தினத்தின் முதல்வட்டி*
*செப்ப மாய்க்க ணக் கின்வழிச் சேர்ந்ததை,* 196

*தந்த னனே னுமேற் கத்த ரும்தினம்*
*இந்த நாலிற்கு மேலவ னீந்திடில்*
*முந்தி யீந்த வடகை மூறிப்படிக்*
*கந்த நாளி லழித்துவிற் றூளலாம்.* 197

கெடு குறிக்காத அடமானம்

*வாங்கு மிந்தப் பணத்தை மறுத்துநான்*
*தீங்கி லாது தருமத் தினத்திலே*
*ஈங்கு தாவென வைத்ததை யேற்றவன்*
*ஆங்க வன்றந்த வன்றைக் களித்திடே.* 198

அடகுப்பொருளை அநுபவித்தல்

இத்தி னத்தினில் முதலு மிலாபமும்
அத்த மீதளித் தென்ற னடகினை
ஒத்து வாங்கிக்கொள் வேனென வோதியே
வைத்த வன்வெகு காலம்வா ராவிடில், 199

வட்டி தன்முத லின்வரைக் கானநாள்
தொட்டு மேற்பதி னைறு தொகைத்தினம்
இட்ட வம்முத லாளி பொறுத்திருந்
தொட்டி லாததன் மேலடை குள்ளதை, 200

தன்பொ ருளெனக் கண்டு செயத்தகும்;
அன்பின லநுபோகஞ் செய்யேனென
முன்பு கன்றவ் டகைக்கொண்டு மோகத்தால்
பின்பொ ருதினம் பேதமைப் புத்தியால், 201

அனுப வித்திடில் வட்டிய வர்க்கில்லை
எனும்வி திப்படி யேற்ற வடகினைத்
தனுவி ருக்கில னுபவஞ் சாருவென்
மனுவ டக்கிய மண்மிசை நானென்றே, 202

அடகு குறைந்தால் அதற்கு ஈடு

சாற்றி வாங்கிய னுபவித் தாலதில்
ஊற்ற மாகக்கு றைந்ததை யோர்ந்துகொண்
டேற்றி டுங்கட னிற்றள்ளி யேமற்ற
தேற்ற மான முதலு மதன் வட்டி 203

தன்னை யுங்கொடுத் தீந்த வடகினைப்
பின்னர் வாங்கெனப் பேசுவ தல்லது
முன்கு றைவமு தலுக்கு றும்வட்டி
யின்க ணக்கிற்கு றைப்பது மில்லையே. 204

அடகு காணுமற் போவதற் கீடு

வாங்கி வைத்தவன் றன்மதிக் கேட்டினல்
ஆங்கு வைத்தவ டகுகள் போய்விட்டால்
தீங்கி லாமல்முன் தேர்ந்தகி ரையத்தில்
பூங்கொம் பே!தன் முறிமுதல் போகவே, 205

மற்ற வக்கிர யத்தையும் வந்தக்காற்
பெற்ற வம்முறி தன்னேயும் பின்கொளா
துற்றி டுமடகுக் காரற் குதவியே
முற்றும் வட்டி யிழக்க முறைமையே. 206

தெய்விகத்தாலும் இராசிகத்தாலும் காணுமற்போதல்

கொண்டி ருந்த வடகுதெய் வீகத்தால்
தண்டி னேச்செய் யிராசிகத் தாலயல்
கண்டு கேட்கவும் போகிற்க டன்கொண்டோன்
பண்டு போற்பின் பரிந்தட கைக்கொடே. 207

பின்னு மீய வடகற்ற போதினில்
முன்னம் வாங்குங் கடன்கள் முழுவதும்
அன்ன திற்குள்ள வட்டியு மீந்தப்பால்
தன்மு றிமட்டும் வாங்கெனச் சாற்றிடே. 208

அடகின் மதிப்புக் குறைந்தாலும் முதலும் வட்டியும் உண்டு

கைக்குள் ளேவரு முன்கண்டு கேட்டதை
இக்க டனுக்க டகென்றெ ழுதிய
அக்க ரத்தைவைத் துக்கொண் டரும்பொரு
ளேக்கொ டுத்தவ னுள்ளமுத லுக்கே. 209

வெண்க டனுக்கு ரைத்திடு மேல்வட்டி
கண்டு வாங்குவ தன்றிய டகதை
விண்டு தாவென வம்முறி மேலெழுத்
துண்ட வட்டிகொ ளவுமொண் ணுதுகாண். 210

புண்ணியத்தை அடகாக்கோடல்

புண்ணி யப்பொரு ளேயட காய்க்கொண்டங்
கெண்ணி யீந்தக டன்வட்டி யாவையும்
திண்ண மாகவிந் நாளிற் செலுத்துவென்
நண்ணி டுமிந்த நாளில்வா ராவிடில், 211

வைத்த புண்ணிய முனக்கென் று வாங்கின
வத்தம் போனே னும் (?) வந்தளித்திடிற்
சுத்த மாந்தன் முதற்றெரு கைப்படிக்
கொத்த வட்டியு முள்ளத வனுக்கே. 212

இந்த வட்டியை ஏன் றுகொள் ளாமல்முன்
தந்தி ருந்தமு றிப்படித் தன்மத்தைச்
சொந்த மாய்க்கொள்ளு வேனெனச் சொன்னவன்
சிந்தை யஞ்ச மொழிசெப்பித் தள்ளலாம். 213

பேரன் றன்மகன் நாளைப் பெருக்கிக்கொண்
டோர்வு டன்வட்டி யுள்ளதை யீயினும்
சார்வ தில்லை யவனைத் தவப்பொருள்
ஆர்வ மாமுத லாளிக் கடையுமே. 214

எவ்வ ளவுதி னமவ் வடகினை—(?)
செவ்வு டன்வைத் திருக்கினும் சேர்வட்டி
ஒவ்வி யேமுதல் போலவொ ருபங்காம்
அவ்வ ளவளிப் பேனென் றறைந்துபின், 215

அப்ப டிக்குவி கிதமு மானபின்
கைப்ப டவங்கு தவுங்க டன்முதல்
செப்ப மாம்பெய ரன்றரச் சேரினும்
இப்ப டிமிசை வட்டி முதலினை, 216

போல வோர்பங்கு வாங்கக் கடன்பொருள்
சாலப் பொன்ற ராதவன் தன்சிசுக்
கால மாகி லடகைத் தனதென
சால வாளத்த கும்மம்மு தலாளிக்கே. 217

பலனளிக்கும் பொருளின் அடைமானம்

பலன்கொ டுக்கும்பொருளைப்ப லருக்கும்
துலங்க வேயட கென் றுஞ் சுருங்கிடா
திலங்க வட்டியு மீந்திடு வேனென் றும்
கலங்கி டாதெழு திக்கடன் கொள்பவன், 218

கடன்கொ டுத்தவன் றன்கரத் திற்கொடுத்
தடங்கி வாங்கட மானக்க டனது
முடங்கி டாமற்கெ டுவில்மு தலெலாம்
தொடங்கி யீபவ ரற்றுமுன் சொல்லிய, 219

அவ்வ டகைக்கொ ளுமுத லாளிதான்
செவ்வு டனதைச் சேர்த்தப் பலனிலே
ஒவ்வி யேமுத லோர்ந்ததற் கிரட்டி
கவ்வை யின்றிப் பலத்திற்கை யாடினும், 220

ஒற்றிக்கடன்

இப்பொ ருளின்ப லன்களி யாவையும்
அப்பொ ருள்வட்டிக் காமென் றறைந்தெழு
திப்பின் கொண்டவொற் றிக்கடன் செப்புநாள்
தப்பி யுஞ்செல்வ தற்றப்ப லந்தனே, 221

முன்கொ டுத்தமு தலுக்கு மூன்றுபங்
கின்ப மாய்முத லாளிகை யேற்கினும்
அன்பி னூற்கடன் காரன்ற னையழைத்
துன்பொ ருளைக்கொ ளென்றங் குதவியே, 222

தான்கொ டுத்தமு தறனை யும்மிழந்
தேன்செ கத்தறி யவென்றுஞ் செப்பிமுன்
நான்க ரத்தினிற் கொண்முறி நான்றரு
வேன்கொ ளிப்பொழு தென்றிட வேண்டுமே. 223

இடம றிந்தங்கியம்புமி ருவகைக்
கடனி டும்முத லாளிப லன்களில்
அடைவி லொன்றுமூன் றுக்க திகமாய்த்
திடமுன் கையிற் சேர்ந்த பொருளினை, 224

வட்டி கூட்டிக்கொ டென்றும் வழுத்தியே
நட்ட மின்றிப் பொருடனே நாடியேற்
றிட்ட வன்குல முள்ளதி யாவையும்
அட்ட திக்கும் புகழை யடையுமே. 225

இங்கடகினி லட்சண மியாவையும்
பங்க மின்றிப் பகர்ந்தன மேற்பயன்
பொங்க நன்னிதி நிட்சேப மாம்பொருள்
தங்கை மீதுகொள் வோர்செயல் சாற்றுவேன். 226

அடிகு பிடிக்கிற லட்சணம் முற்றும்.

# 12. நிதி நிட்சேப லட்சணம்

மிதாக்ஷரத்தில் நாரதரின் கொள்கைப்படி, 'எண்ணிக் காட்டாமல் ஒரு பெட்டியில் வைத்து மூடி முத்திரையிட்டுப் பெட்டியுடன் கொடுக்கப்படும் திரவியம், ''உபநிதி''; எண்ணிவைக்கப்படுவது, ''நிக்ஷேபம்'' ' என்ருகும். இங்கு 227—229 பாடல்களில், ஒருவன் பூமியை நோக்கி, ' இதை வைத்திருந்து எனக்கு வேண்டும்போது கொடுப்பாயாக ' என்று சொல்லிப் பூமியில் புதைத்த பொருள் நிக்ஷேபம் என்றும், அதற்கே ''நிதி'' என்று பெயர் என்றும்; நிக்ஷேபத்தை, 'உனக்கு' என்று ஒருவருக்குக் கொடுத்தால் அது கொடுக்கப்பட்டவனையே சாரும்; என்றும், நிதி, திரும்பக் கேட்கப்பட்டால் கொடுக்கப்படவேண்டும் '' என்றும் கூறுகின்ருர்.

அடைக்கலமாக வைத்த நிதிப்பொருள் இராஜீக தெய்வீகங்களாலும் கள்வராலும் அழிந்துவிட்டால் அது போனதுதான். ஆனல் கொடுத்தவன் கேட்டபின் மேற்கண்ட முக்காரணங்களால் அது அழியுமானல், நிதியைக்கொண்டவன் கொடுக்கக் கடமைப்பட்டவன். மூடி வைத்த பொருளின் மதிப்பை லிகிதம், புக்தி, சாட்சி இவற்ருல் அறிந்து, அம்மதிப்புக்கு ஈடு செய்யவேண்டும். மன்னன், பொருளையும் அதற்கு ஒத்த அபராதமும் வாங்கவேண்டும். அதைக் களவாடிக் கொண்டாலும் மேற்கூறியபடி தண்டிக்கலாம் ; அவன் அஜாக்ரதையால் அதுபோனல் முக்காற் பங்கை'ஈடுசெய்யச் செய்யவேண்டும்.

எண்ணிக்கொடுத்த நிதியை ஏற்றவன் செலவிட்டுவிட்டால், முதலோடு வட்டியும் சேர்த்து அவன் கொடுக்கவேண்டும். இவ்வட்டி சாதிக்கேற்றபடி மாறும். பெற்றுக்கொண்டவன் அம்முதலைக்கொண்டு வியாபாரம் செய்தாலும் அல்லது வேறுவிதமாகக் கையாடினலும், அதனல் வரும் இலாபத்தோடு முதலை அவன் கொடுக்கவேண்டும். அதைப் பிறரிடம் கொடுப்பானுனலும் வட்டி, இலாபம், உயர்வட்டி முதலியன கூட்டிக் கொடுக்கவேண்டும்.

இன்னம், (1) இரவல் வாங்கின பொருள் (யாசிதம்), (2) ஒருவன் கையில் கொடுத்து மற்றெருவனிடம் கொடுக்கும்படி வைத்த பொருள் (அந்வாஹிதம்), (3) ஒருவனுக்காக அவன் உத்தரவின்றி அவன் சிநேகிதன் பெற்ற பொருள் (நியாஸம்), (4) நகை செய்தற்குத்

தட்டானிடம் கொடுக்கும் பொருள்போல இன்னது செய்துகொடு என்று கொடுக்கும் பொருள் (நிக்ஷேபம்) என்ற பிற நால்வகைப் பொருள்களேயும் துர்விநியோகம் செய்தவர்க்கும் மன்னன் மேற்குறித்த தண்டனே விதிக்கலாம்.

நிட்சேபம் நிதி இவற்றின் இலக்கணமும் வேற்றுமையும்

பூமிக் கென்றேபு தைத்த பொருளுக்கு
நேமிக் கும்பெயர் நிட்சேப மாகுமால்
நாமி தைத்தாவெ னில்மனம் நாடியங்
கேமி குத்தக ளியுட னீகுவாய். 227

என் று பூமிக் கியம்பிப் புதைத்ததற்
கன் றும் பேர்நிதி யென்ன வறைந்தனர்
முன்ஞெ டர்ந்து மொழிந்தநிட் சேபத்தை
உன்ற னக்கென் ஞெருவற் குதவினுல், 228

வாங்கி ஞேன்பின் வழங்க வழக்கிலே ;
யாங்கி துநிதி யென்ன வறைபொருள்
தாங்கி வாங்கிநின் ருேனிதி தந்தவன்
ஈங்கு தாவென வீந்திட வேண்டுமே. 229

நிட்சேபப்பொருள் அழிந்தவிடத்துச் செய்யவேண்டியவை.

தாவெ னச்சொலு முன்னிதி தைவிகம்
தேவெ னத்தொழி ராசி கந்திருட்
டேவெ குட்சியற் றுப்படி யிற்செய்வோர்
மூவி தத்தில் நிதிமுதல் போய்விடில், 230

வைத்தி ருந்தவ னீய வழக்கிலே
புத்தி யாய்ப்பொ ருளினே யீய்ந்தவன்
அத்த மீதளி யென்றறைந் துங்கொடா
தொத்த தன்னிடத் தில்வைக்கு மொண்ணிதி, 231

முன்பு கன்றவம் மூன்றிலோ ரேதுவாய்ச்
சென்றி டமுனம் வாங்கிற் றெரிந்திடா
தன்று சம்புடத் தல்லது கூறையில்
ஒன்ற வைத்தடை யாளங்க ளொற்றியே, 232

தருப வன்றர வாங்கிற் றனக்கதின்
உருவு மெண்களு மோர்ந்தில னுயினும்
கருதி யலிகி தம்புக்தி கண்டபேர்
பெருகு சாட்சியி னுற்பின் றெரிந்திடே. 233

அப்ப டிக்குநிதிநிச மாய்ந்து கொண்
டிப்ப டிமிசை யீய்ந்தவற் கேற்றவன்
தப்பி லாமலின் றேதரு வேனெனச்
செப்பி யீவது செம்மையிற் செம்மையே. 234

நிதிப்பொருளை இழக்கவிட்டதற்குத் தண்டனை

இவ்வி திப்படிக் கேநிதி யேற்றவன்
செவ்வு டனளி யானெனிற் றேர்ந்தமன்
கவ்வை செய்தளி யென்றிட் டதைக் கண்டங்
கவ்வ ளவப ராதமும் வாங்கலாம். 235

இந்த மூன்றில் நிதிமுத லேகிடத்
தந்தி றத்திற் றிருப்புந் தரமிருந்
தந்த மாநிதி போய்விட லாமென்று
சிந்தை யில்வைத் திருந்த திறத்தினை, 236

அவ்வ ளவுமு தல்கள வாயெடுத்
தெவ்வி டத்துங்கொண் டேகின னைச்செயும்
செவ்வி தாந்தெண்டி னையுஞ் செய்தே முதல்
ஒவ்வி டமுத லாளிக் குதவெனே. 237

இப்ப டியல தேற்றவன் றன்றிறத்
தப்பி னுல்நிதி போய்விடிற் றந்ததில்
இப்ப டியில்முக் காற்பங்கை யீயெனச்
செப்ப வேண்டுஞ் செகத்தி லுள் ளோர்கட்கே. 238

நிதிப்பொருளைச் செலவிடின் தண்டனை

எண்ணிக் காட்டி நிதியினை யீந்தவன்
நண்ணித் தாவெனு முன்நலி வாயதைத்
திண்ணத் தாற்றன் செலவுசெய் தோன்குலம்
மண்ணிற் பார்த்ததற் கேயுயர் வட்டியும், 239

தாவெ னச்சொன்ன பின்னதை யேற்றவன்
போவெ னச்செல வேபுரிந் தானெனில்
வாவெ னப்பகர்ந் தன்னவன் சாதிக்கீட்
டேவெ டுத்தமைக் குஞ்சிறு சாதிக்கே. 240

உச்ச மாக உரைத்திடும் வட்டியும்
இச்செ கந்தனிற் கூட்டிமுன் னேற்றவன்
வச்ச வற்கு முதலை வழங்கெனில்
முச்செ கழும்பு கழுமு றையையே. 241

நிதிப் பொருளைக்கொண்டு வியாபாரஞ் செய்திடில் தண்டனை

செலவி டாமல்முன் செப்பு முதறனை
பலமிக் கவியா பாரங்கள் பண்ணியே
இலக முன்புகல் வட்டியி லேற்றமாய்
அலகி லாதப லன்கள்கை யாடினும். 242

அப்ப லன்முத லாளிக் களித்திட
இப்படிச் செய்யி லிலாபங்கள் வட்டிக்கும்
ஒப்பி லாமற் குறையி னுயர் வட்டி
தப்பி லாமல ளியென்று சாற்றுவாய். 243

நிதிப்பொருளைப் பிறரிடம் கொடுத்தால் தண்டனை

முத்தி ரைப்படிக் கேநிதி முந்திவாங்
கித்த னக்கென் றிருக்கின்ற கண்ணிலே
வைத்தி ருக்க வவிழ்த்து வழங்கினேன்
அத்த முற்று மறுப்பது ஞாயமே. 244

கைய றுத்துக் கழற்றின வட்டிதான்
வைய கத்தில் வருமுயர் லாபந்தான்
செய்த லுக்குத் தகமுத லோடுசொத்
தையம் விட்டங் களியென் றறைந்திடே. 245

நால்வகைப் பொருள்

இரவல் வாங்கி யிருந்த பொரு[1]ளிவன்
கரம தனிற்கொ டென்று கழறியே
தரவ ரும்பொருள்[2] தங்கள் சினேகத்தாற்
பரன துத்தர வின்றிப்பற் றுப்பொருள்[3], 246

இன்ன துசெய்த ளியென்றி டும்பொருள்[4]
சொன்ன நாலு தொகைப் பொருள் கட்குமுன்
நன்னி திக்கு நவின்ற விதிப்படி
மன்ன ரிப்புவி தன்னில் வழுத்தலாம். 247

நின்று பார்த்து நிதியம் நிட்சேபத்தை
ஒன்று மிலட்சண மோதின மிங்குமேல்
மன்றிற் றேன்றி வரலிகி தங்களின்
தன்றப் பாத விலட்சணஞ் சாற்றுவாம். 248

நிதி நிட்சேப லட்சணம் முற்றும்.

---

# 13. இலிகித லட்சணம்

இதுகாறும் கடன்கோடல் முதலியவற்றினுல் விளையும் வியவகாரங் களின் தன்மைகளைக் கூறி, இனி " மானிடம் ", " தெய்வம் " என்ற இருவகைப் பிரமாணங்களுள் மானிடப் பிரமாணம் விளக்கத் தொடங்கு கின்ருர். அது இலிகிதம், புத்தி, சாக்ஷி என்று மூன்று வகைப்படும். இப்பகுதியில் " இலிகித " லட்சணம் கூறப்படுகின்றது.

பேசி முடித்த எந்தக் காரியமும், அழியாமல் இருப்பதற்கு, அது முறைப்படி எழுதப்பட்டு அமையவேண்டும். அதற்குப் பெயர் இலிகிதம் (Document). ஒவ்வொரு பத்திரத்திலும் அது பிறந்த வருஷம், மாதம், தேதி முதலியனவும், வாங்குகிறவன் கொடுக்கிறவன் சாதி, கோத்திரம் முதலியனவும் எழுதவேண்டும். எல்லா இலிகிதங்களும் அவரவர் கையாலேயே எழுதப்படவேண்டும். எழுதத் தெரியாவிட்டால் பிறர் எழுதி அதில் கைக்குறி அழுத்தவேண்டும். இவ்வாறு இருவிதமான பத்திரங்களில் ஏற்றபடி, 'சுவஸ்த லிகிதம்' என்றும், 'இன்னுன் தற்குறி' என்றும் எழுதவேண்டும். ஒரு பத்திரத்திற்கு அங்கங்கள் பதினேழு என்று சொல்லப்படுகின்றன. பத்திர வாசகம், சாட்சி எழுதவேண்டியவை, சாட்சி எழுதத் தெரியாதவனுனல் அவன் எழுதவேண்டியதை ஒப்பம் வைப்பவன் எழுதும் முறை, இவை விளக்கப்படுகின்றன. " அர்த்தி " என்பது முதலாளிக்கும், " பிரத்யர்த்தி " என்பது வாங்கு வோனுக்கும் பெயர்கள். பிரத்யர்த்தியே முறி எழுதுபவன்.

இலிகிதம் எழுதத் தகுதியற்றவர் எண்மர் என்று குறிக்கப்படு கிறது (260—1). ஸ்வஸ்த லிகிதத்திற்குச் சாட்சி வேண்டியதில்லை.

எழுதிய இலிகிதம் திரும்பிவரமுடியாத வேற்றூருக்குப் போனு லும், இராஜீகம் தெய்வீகங்களால் அழிந்துபோனுலும், எழுத்துக்கள் அழிந்து ஏடு முறிந்துபோனுலும் மற்றென்று எழுதும்படி செய்ய வேண்டும். அதற்குள் வாங்கின பணம் கொடுக்கப்பட்டுவிட்டால் பெற்றுக்கொண்டவன் தொடராச் சீட்டு எழுதிக் கொடுக்கவேண்டும். இலிகிதத்தில் சந்தேகம் வந்தபோது உண்மையறியச் சில வழிகள் கூறப் படுகின்றன (265—7).

ஒரு பத்திரத்துக்குரிய முதல், வட்டி முதலியவற்றைத் திருப்பிக் கொடுக்கும்போதெல்லாம் பத்திரத்தில் வரவு வைக்கவேண்டும்; அல்லது கடன் கொடுத்தவன் தான் பெற்றுக்கொண்ட தொகைகளுக்குப் பற்றுச் சீட்டுக் கொடுக்கவேண்டும். முந்தி எழுதிய பத்திரத்தைத்

திருப்பிக்கொடுக்க முடியாதவிடத்து, முதலாளி 'கடன் தீர்ந்துவிட்டது' என்று தொடராச் சீட்டுக் கொடுக்கவேண்டும். வழக்கில் நன்ருக விசாரித்து இரு கட்சிக்காரரையும் இசையச் செய்து, புதிதாய் எழுதப் படும் பத்திரத்திற்கு இசைவு பத்திரம் என்பது பெயர்.

### இலிகிதத்தின் இன்றியமையாமை

எக்கரு மத்தை யேனு மிணங்கியே பேசி முற்றில்
அக்கரு மங்க ளென் று மழிந்திடா திருக்கு மாருய்த்
திக்கறிந் திடவெழுதிச் சேர்க்கின்ற வுருக்க ளின்பேர்
மிக்கவி ரிஷிக ளெல்லாம் விளம்பினுர் லிகித மென்றே. 249

### இலிகிதம் எழுதும் முறையும் அதன் அங்கங்களும்

எந்தெந்த லிகித மேனுந் தன்கையா லெழுத வேண்டும் ;
முந்தவே படித்தி டாகின் மூடன்ரு ஞகிற் கற்ற
சிந்தையா ஞெருவன் கையாற் றீட்டிய பின்றன் கையால்
அந்தமாய்க் குறிய மூத்த வதன்பெயர் ஒப்ப மாமே. 250

வாங்கிய வதமற னன்ருன்(?) வரைந்திடு லிகிதந் தன்னில்
ஈங்கிது வென்சு கத்த லிகிதமென் றெழுத வேண்டும் ;
ஆங்கவ ஞெப்பம் வைத்தால் அறிந்தெழுதி வந்தோன் கையில்
தாங்கியீ தின்னுன் கீறும் தற்குறி யெனவுந் தீட்டே. 251

இங்ஙன முரைத்த வாறே யெழுதிய லிகிதந் தன்னில்
அலங்கது பிறந்த வாண்டு[1] வருடங்க [2]ளந்த மாதம்[3]
திங்களாற் பிறந்த பட்சந்[4] திதி[5]தெய்தி[6] வாங்கு கின்றோன்[7]
துங்கமாய்க் கொடுப்போ [8]னிந்தத் துணைவரும்[9] சாதி[10] கோத்
[திரம்,[11] 252

சூத்திரம்[12] தகப்பன் பெர்[13]தந் துணைவர்பே [14]ரிவர்கட்
[கொத்துக்
காத்திட வந்த சாட்சிக் காரன்பேர [15]வன் றந் தைபேர்[16]
மூத்திடுந் திரவி யத்தின் சங்கியை....[17]முதலி னெண்கள்
பார்த்திவை பதினே ழுங்கம் பத்திரத்திற் பழுதி லாதே. 253

வாசகமும் சாட்சியும்

பதிப்பதிற் கருமம் பார்த்து வாசகம் பலவ மைத்து
மதித்திற மாகத் தீட்டி வருவதி லின்னுன் பிள்ளே
எதிர்த்தறி சாட்சி யாகு மென்றெழு துவது மல்லால்
அதிற் பின்னங் கவன்கை யாலு மப்படி யெழுத வேண்டும்.

சாட்சி எழுதவேண்டியவை

பின்னெழு துகின்ற சாட்சிப் பெரியவ னின்ன வாண்டில்
இன்னமா தத்திற் றெய்தி யித்தனே தன்னி லீதை
முன்னிவ னிவன்பாற் கொள்ளு முறையினே யின்னுன் பெற்ற
இன்னவின் னுன றிந்தே னெனத்தெரிந் தெழுத வேண்டும்.

இப்படிச் சாட்சிக் காரற் கெழுதவே தெரியா விட்டால்
ஒப்பம் வைத் ததன்பின் வேறே யொருவனே யிந்த வாறே
தப்பிலா தெழுதி யின்னுன் றற்குறி யென்றுந் தீட்டிச்
செப்பமாய் வைக்க வேண்டுஞ் செகத்தினி லிகித மெல்லாம்.

இன்னெறி சாட்சிக் கார னெழுதிய பின்னப் போது
சொன்னதை வரைந்தோ னிந்தத் துணேவரும் பொருந்தி யீதை
உன்னியே யெழுத....நால்வர்க் குரைத்ததால் வரைந்தே
[னின்னர்
தன்மத லேயின்னு னென்றுந் தன்கையா லெழுதல்
[வேண்டும். 257

பெரியவர் அர்த்தி யென்று பெயருள முதலாளிக்குத்
தெரிவிலா லிபியி னுலே திகழ்பிரத்தி யர்த்தி யென்றும்
விரியத....றன்ன(?) போன்றும் விளங்கிய பெயரை யுள்ள
பரிவினல் வாங்கு வோன்கைப் படமுறி யெழுதி யீந்தால், 258

அம்முறிக் குப்பின் னுலே யர்த்திக்கே தெரியு மாருச்
செம்மையாய் முன்னெ ழுத்தைத் தெரிந்தந்த வகையை
[யெல்லாம்
தம்மறி வறிந்தி டும்மட் சரத்தினு லயலோன் கையால்
இம்மையில் நால்வர் காண வெழுதிவைத் திருக்க வேண்டும்.

இலிகிதம் எழுதத் தகுதியற்ற எண்மர்

இப்படி வழுவிலாம லெழுதிய லிகித மேனும்
ஒப்பிலா வ......... செய்தங் கொருவன்கேட் பதையீ யாமல்
வெப்புறு கோப வேளை மிகவுமே பயங்கள் செய்து
தப்புபேய் பயித்தியங் கொண்டான் சார்ந்தவர் சொன்ன
[தெல்லாம், 260

கேட்கின்ற........பெண்பால் கிளர்பதி னைந்தாண் டுற்று
வாட்கையைப் பொருந்தும் பாலன் வழுத்துமிவ் வகையெட்
[டுள்ளோர்
தாட்சியா யெழுதிக் கையாற் றரக்கொண்ட லிகித மாகில்
நாட்பட விருக்கு மேனும் நன்றல தள்ள வேண்டும். 261

சாட்சியின்றியும் சொஸ்தலிகிதம் செல்லும் என்பது

இந்தவெட் டுவகை யான விவர்கள் போய் மற்றோர் கையால்
தந்திட வதுசு வத்த லிகிதமாய்ச் சபையில் வந்தால்
அந்தவேட் டினிலே சாட்சி யமைத்தெழுத வில்லை யேனும்
நிந்தையே யில்லை யென்று நிறுத்தலாம் நிறுத்தலாமே. 262

இலிகித அழிவு நேர்ந்தால் செய்ய வேண்டியவை

வாங்கின லிகித மீண்டு வாராப்பதி தனிற் போனாலும்
ஓங்குரா சீகந் தைவ மூறுக ளாற்போ னாலும்
ஆங்கது வெழுத்த ழிந்து மதுமுறிந் திடுதல் கோறை
ஈங்கிதை லிகிதம் பெற்றால்.... ......தோன்பாலே. 263

மறுத்தொரு லிகிதம் வாங்கி வைத்திட வதற்கு முன்னே
உறுத்துமுன் கடன்கோள் சொன்ன முதவிவிட் டானே
[யாகில்
பெறுத்தின லிகித மற்றோன் பின்றொட ராச்சீட் டீயப்
பொறுத்திடும் லிகித முள்ளோன் போற்றிய தளிக்க
[வேண்டும். 264

இழந்த சீட்டின் உண்மையை அறியும் வழி

எங்தெந்த லிகிதத் தேனும் இருந்தவூர் தெருவி ராசன்
முந்தி யொப்பம் வைத்தி ருந்தால் முன்சொல்சாட் சிகளும்
[வேண்டாம்.
அந்தவட் சரங்க ளாலே யையம்வந்து விட்டால் முன்னே
சிந்தைகூர்ந் தவ்வெ ழுத்தைத் தீட்டின வாண்டு தேர்ந்து, 265

அந்தவாண் டவன் பொறித்த வட்சர மிணைத்துப் பார்த்தும்
முந்திய புத்தி யாலும் முதற்றெரைகை களினு லேயும்
இந்தவா திற்கு வந்த விவர்சரித் திரத்தி னுலும்
வந்தவன் பேசப்பேச வருமுகக் குறியினுலும், 266

சம்பந்தங் களினு லேயுந் தாங்களி னுலு மிங்கி
யம்பின வேழு பேரில் யாதுள வதனுற் பார்த்து
வம்பிலா லிகித மென்றே யறிய வெவ்வழியு மின்றேல்
அம்பினேர் விழியாய்! சாட்சி யாலறிந்து கொள்ள வேண்டும்.

பற்றுச்சீட்டு

சாட்சியு மில்லை யாகிற் றைவத்தா லறிந்து கொள்ளக்
காட்சியாய்க் கடனை யீந்து கைக்கொளும் லிகிதத் தின்பின்
நீட்சியாம் வெளியி லீந்த நிசமுறி......சென் று வந்த
நாட்களி லிகித முன்னே நாடியே வரைந்தேன் கையால். 268

தீட்டிவைத் திருக்க வேண்டுந் தெரிந்தெழுதக் கூடா தென்ற
பாட்டினிற் சாட்சி வைத்துப் பழையமு றிமுத றன்னை
நாட்டியே யதற்கிந் நாளிவ் வளவு மொத்தே........னென்
றேட்டினி லெழுதி யீய விதன்பெயர் பற்றுச் சீட்டே. 269

இப்படிப் பற்றப் பற்ற வெழுதியீந் திருந்த தெல்லாம்
செப்பிய வட்டியோடு முதல் வந்து சேர்ந்த பின்னர்
அப்பற்றுச் சீட்டை வாங்கி யழித்துமுன் கடன்கொள் காலம்
ஒப்பியே யளித்தி ருந்த லிகிதத்தை யுதவ வேண்டும். 270

தொடராச்சீட்டு

முந்தின லிகித மிந்த முறைகொடுத் திடக்கூ டாதேல்
எந்தநா ளினுக்கு மிந்த விடுதலொற் றலினு லுன்னைச்
சிந்தியேன் றெடரே னென்று தீட்டியீந் திடவதற்கு
வந்தபேர் தொடராச் சீட்டு மண்ணுளோ ரறிந்து கொள்க. 271

இசைவுபத்திரம் எழுதும் முறை

வந்தவன் மொழியைக் கேட்டு மறுத்துரைத் திசையப் பண்ணி
முந்தியே யிசைந்து சொன்ன மொழி தப்பா தெழுதி வாங்க
இந்தமா லிகிதத் தின்பே ரிசைவென வுரைக்க வேண்டும்
சிந்தையி லறிந்தி டாச்செய் திகளதி லெழுத லாகா. 272

வாய்மொழியினி....ன்னே வழுத்திய வாறு வாங்கி
ஆய்தலை யுணர்ந்தோர் கூடி யதிலுள்ள வழக்கைத் தேர்ந்து
தூய்மைசெய் ததுபின் காலந் துலங்கவே யெழுதும் போது
பாய்திரை சூழு மிந்தப் பரப்பு ளோ ரறியும் வண்ணம். 273

வழக்கினை விரித்துப் பார்த்த வழியெலாந் தெரிவதாயும்
அழைத்துமுன் கோத்துச்சொன்ன வதற்குறுமொழிகளாலும்
பிழைத்த தென் றொருவர் பார்த்தும் ..............................
.............................................................. 274

[விடப்பட்ட 275—278 பாடல்களில், 'மூலபத்திரம் கெட்டுப் போய் முதலாளிக்கும் கடன் வாங்கினவனுக்கும் வியவகாரம் நேரும் போது பிராட்டு விவாகன், சபையார், அரசன், ஆகிய மூவரும் நேர்மையான முறையில் விசாரணைசெய்து இருகட்சிக்காரர்களும் ஒத்துக்கொள்ளும் முறையில் இசைவு பத்திரம் தயாரிக்கும் வழி' கூறப்படுகிறது.]

பொய்ப்பத்திரங்கள் தகாவென்பது

இப்படி.......பேரையுள்ள விருவகை லிகிதத் தின்முன்
செப்பிய வொ........நாலில் சிறிதிலை யேனும் ஞாயம்
தப்பியே தீர்க்கத் தீட்டித் தந்திடும்........தத்திருக்கும்
ஒப்பியே வீனபத்திர மெனப்பெய ருரைக்க வேண்டும். 279

ஈனபத்திரந்..........................................ம பராதங்கள்
ஆனவுந் தருமோர்கால மானதா லறிவுள் ளோர்கள்
மானமும் புகழுஞ் செல்வ வளங்களும் பெறவே யெண்ணி
யூனமாம் வழக்கை நன்றென் றுரைத்திடா ருன்னிடாரே. 280

லிகிதலட் சணஞ்சோ ராம லேசொனே மிதன்மேற் புக்தி
அகிலமு மறியச் சொல்வே னதையனு பவமென் றெண்ணி
மகிமைகள் பெறுவோர் வந்த வழக்கினை யறிந்து சொன்னூற்
பகிரிமை.....................லிப் பாரிலும் பெறுவர் வாழ்வே. 281

இலிகித லட்சணம் முற்றும்:

# 14. புக்தி லட்சணம்

---

இலிகிதம், புக்தி, சாட்சி என்ற மூவகைப் பிரமாணங்களுள் புக்தி என்பது ஆட்சி அல்லது அனுபோகம் ஆகும். ஒருவன் ஒரு நிலத்தை வாங்கிப் பின் பலநாள் வெளிதேசம் சென்றிருக்க, அந்த நிலத்தை மற்ருெருவன் அரசனிடமிருந்தோ அயலானிடமிருந்தோ விலைகொடுத்து வாங்கி ஆண்டு வந்தாலும், உடையவன் வந்து கேட்கும்போது அவனிடம் அதனைக் கொடுத்துவிட வேண்டும். ஓர் அடைமான சொத்தைப் பிறகு விலை, அடைமானம், ஒற்றி, தானம் என்ற நான்கு வகையில் பிறர்க்குக் கொடுத்தால் அதுவும் செல்லாது, இவ்வாறு ஒருவன் சொத்தை மற்ருெருவன் வாங்கி அனுபவிக்கப் பார்த்துக்கொண்டிருந்தால், அவன் உரிமை இழப்பவனுவர்ன். மறுப்பானுனல் பிந்தி வாங்கினவர்க்குச் செல்லாது. சொத்து கைம்மாறு முறையும், அடிமை முதலியன கைம்மாறு முறையும் இன்ன இன்ன வரிசையிற்போகும் என்று இப் பகுதியில் கூறப்படுகின்றன (288—90).

அனுபவ பாத்யகாலம் நிலம் முதலியவற்றிற்கு இருபது ஆண்டுகள்; மற்றவற்றிற்குப் பத்து ஆண்டுகள். இக்காலவெல்லையுள் உடையவன் திருப்பிக் கேட்பில் அவன் உரிமை போய்விடாது; சொத்துக்காரனை ஏமாற்றி அவன் பொருளைக் கொண்டவனுக்கு அபராதங்கள் விதிக்கப் படுகின்றன. (294—5). ஒருவனுக்கு உரிய சொத்தை மற்ருெருவன் காரணமில்லாமல் அனுபவிப்பவன் கள்வனே; அப்படிப்பட்டவனைக் கள்வனுகவே கொண்டு தண்டித்தல் அரசன் கடமையாகும் (298—9).

அடைக்கலமாக வைத்த பொருளுக்குக் கால எல்லை பத்தாண்டு. அதற்குள் வைத்தவன் திருப்பிக் கேட்கவேண்டும்; தவறினுல் பொருள் அனுபவித்தவனைச் சாரும். மூன்று தலைமுறைக்குத் தாண்டினுல் பொருள் அனுபவிப்பவனையே சாரும். செய்யுள்கள் 305—6 இல், பொருள் பல கைகள் மாறுமானுல், அப்பொழுது செய்யவேண்டியவை கூறப்படுகின்றன. 307—8 ஆம் செய்யுட்களில் பறவைகள் முதலிய வற்றை விற்கும்போது அநுஷ்டிக்கவேண்டிய சம்பிரதாயங்கள் கூறப் படுகின்றன. 309 ஆம் செய்யுள் நியாயமாய் வாங்கியனுபவிக்கும் பொருள்களுக்கு இவ்விதிகள் இல்லை என்று கூறுகிறது. 311—12 ஆம் செய்யுள்களில் புதையல்களில் நிலமுடையவன் பங்கும் அரசன் பங்கும் விதிக்கப்படுகின்றன.

விலைமுதலாகிய வழிகளில் பெற்ற சொத்து பெற்றவர்க்கேயுரியது

ஒருநில மதனை முன்னே யொருவன்றன் முதலீந் தேற்றுக்
கருதிய னுபவித் துப்பின் கருமத்திற் போய்ப்பல் காலம்
வருமுன்வே றொருவ னந்த மாநிலந் தனை,மன் பாலே
வெருவிலா தயலோன் பால்மால் மிகுதியால் வாங்கி னனேல்,

வெறுத்துத்தான் முன்னம் போனேன் மீண்டுதன் மண்ணைக்
[கேட்டால்
கறுத்திடா தீந்துவிட்டுக் கனகமுன் னீந்தோன் பாலே
உறுத்தியே யதனைவாங்க வுடையவ னன்றிப் பின்னை
மறுத்துவாங் கினவற் கந்த மாநிலஞ் சார்ந்தி டாதே. 283

இலங்கள்பூ மிதோப் புக்க ளெதையேனு மொருவன் முந்தித்
துலங்கட மானமாகத் தொகுத்துவாங் கியுமி ருக்கப்
பலங்களா லறியா தால்முன் பேசின வதனை மற்றோன்
கலங்கிடா மற்று னேதன் கைக்கன கங்க ளீந்து, 284

விலையட மான மொற்றி விரும்பிய சுத்த தானம்
மலைவிலிந் நாலி லொன்றி லதைக்கொண்டால் முன்
[கொண் டோர்க்கே
பெலமிலா விடினுஞ் செல்லும் பிந்திவாங் கினர்க்குச் செல்லா
துலகினி லிவைய றிந்தே யுரைத்தனர் தவத்தின் மிக்கோர்.

முன்சொல் நால் வழியு மின்றி முதுலிகி தத்தை வாங்கிப்
பின்புவைத் ததனி லொன்றைப் பேணிவாங் கியிருந் தாலும்
இன்புடன் முன்பு வாங்கி யிருந்தவ னுக்கே செல்லும்
தன்பொருள் பிந்தி யீந்து தான்கொண்டோர்க்
[கதுசெல் லாதே. 286

பின்கொண்டோ ரனுபவிக்கப் பேணிமுன் கொண்டு
[நின்றோன்
அன்பினாற் பயத்தா லேனு மறிந்திணங் கியிருந் தானேல்
முன்கொண் டோர்க் கதுசெல் லாது முன்கொண்டோன்
[மறுப்பைத் தள்ளி
இன்பமென் றதனைப் பல்கா லிருந்தனு பவித்தா னேல்........

உடையவன் மறுக்காமல் அனுபவபாத்யம் கொண்டாடுபவர்

பிந்திவாங் கினர்க்குச் செல்லா ; பெருநிலந் தோப்பில் லத்தை
முந்தியே கொள்ள வேண்டு முறைசகோ தரன்சோக் காரன்
வந்துசா மந்தன் விற்றோன் மண்ணுறுந் தெருவா னூரான்
இந்தவா றுபேரு மிம்முறை முந்திக் கொள்வோர். 288

அடிமைக ளாகிற் கொள்ளு மவன்சகோ தரன்சோக் காரன்
படிதனிற் றலைவ னயன் பாரி(?)த னயன் முன்னம்
அடிமையாய்த் தனக்கு மற்றோன் வழுத்துமிவ் வைந்து பேரும்
முடிநிகர் முலையாய்! இந்த முறை முந்திக் கொள்ள வேண்டும்.

இப்பொரு ணீக்கி மற்ற வெப்பொருள் களையு மண்மேல்
தப்பிலா தேமுன் கொள்ளத் தகுஞ்சகோ தரன்சோக் காரன்
செப்புமிவ் வொழுங்கை விட்டுச் சேர்ந்தய லொன்றுன்
[வாங்கும்
அப்பொழு திவர்கள் மன்ன னுணையாற் றடுக்கப் பின்னும்,

அனுபவபாத்ய காலவெல்லை

செய்ந்நிலம் வீடு தோப்பைத் தேடியே கொண்டோ னத்தை
ஐயொரு நாலி னுண்டு மல்லதாம் பொருளைக் கொண்டோன்
வையமீ தீரஞ் சாண்டும் வைத்தனு பவிக்கு மட்டும்
தையலாய்! முனம ரித்தோன் சார்ந்தபின் றொடர்ந்தி டானேல்,

தடுக்கற்ற கொண்ட வர்க்குத் தானந்த பொருள்க ளெல்லாம்
எடுத்திரு பதும்பத் தாண்டு மெனச்சொன்ன தினத்திற்
[குள்ளே
அடுத்தொரு நா...........டாந்தா லந்தநாள் முதல் நாலஞ்சும்
வடுச்சொலா தீரைந் தாண்டும் வழக்குண்டு மறுத்த வர்க்கே.

இப்படித் தடுத்து வந்தா லெண்ணிலா நாட்சென் றாலுஞ்
செப்பிமுன் றடுத்த வர்க்கே செல்லுமப் பொருள்க ளன்றி
அப்பொருள் களுமதற்கா யளித்திடும் பொருள்க டாமும்
தப்பிமுன் றடுக்கிற் கொண்டோன் றன்வசஞ் சார்ந்தி டாவே.

தப்பான அனுபவத்துக்கு அபராதமும் பொருள் மீட்டலும்

தடுத்திட வுடையோன் பேயன், [1]தானய லூர்க்குப் போனன்[2]
படுத்திடு நோயன், [3]ஆண்டு பத்தினு லுற்ற பாலன்[4]
இடுக்கணைப் பொருந்தி நிற்போ [5]னிந்தஅஞ் சனைய வேளை
அடுத்தறிந் திதுநல் வேளை யான்றடா (?) னிவனென்
[றெண்ணி, 294

ஈயவே வழக்கிலாத வினத்தினை.......யீந்த வன்றான்
மாயவே வரினும் வாங்க வழக்கிலா வினத்தை வாங்கும்
பேயனிவ் விரண்டு பேர்க்கும் பெயர்க்கு நூறு பொன்னைத்
[தெண்டம்
தாயனும்(?) வாங்கி யேய்ந்தவ் வினத்தைப் பறித்தே........ 295

ஐவகைச் செயலற் றோர்கட் களிப்பதே ஞாய மாகும்
இவ்வகை யைந்து பொன்.......ரிது தவிர்ந்த பின்வந்து
செவ்வுடன் மறித்தால் செல்லும் செப்புநா ளிதனுக் கில்லை
கவ்வைபீ டைந்து நன்னெ றிக்கண்டுட னிருந்து விட்டு, 296

தானினைத் திடுங்கால் வந்து தடுத்தவர்க் கதுமீ ளாதாம்
மேனினைத் திப்போழ்..........ன்றனைத் தொடர்ந்து வந்தாய்
மானிடப் பதரே யென்று வழக்கினைத் தெரியவோதி
ஊனிடத் தாசை யுண்டே லொழிபிந்த வழக்கை யென்னே.

எப்பொருளையுந்தன் சொன்ன மீந்திடா தேற்று வைத்துச்
செப்பிட வடங்கா நாட்பல செலவனு பவித்தா னேனும்
அப்பொருட் குடையோன் வந்தின் றளியெனி
[லளித்தி டானேல்
ஒப்பவன் சோரற் காகும் உணர்விலி தன்னை மீட்டி, 298

தெண்டினை யதைக்க ரந்த செய்கையோர் செயலைச் செய்து
பண்டுகொள் பொருளு மந்தப் பலத்தையும் படுத்து வந்து
விண்டவவ் வுடையோன் பாலில் விடுநலே தவமி தன்றிக்
கொண்டவற் கெந்த மட்டுங் கொடுத்திடென் றுரைத்தி டாதே.

குறித்த காலந்தவிர்ந்த அடைக்கலப் பொருள்

எப்பொரு டனேயென் ருனு மிதை வைத்துக் காத்துத் தாநீ
அப்பொரு ளேயிந் நாள்நான் வந்தப கரித்துக் கொள்வ னென்
றெப்பிவைத் தந்நா ளேக்கு தவினே னேரா தேமுன்
செப்பிய தினத்தின் மேலே சென்றநா ளீரைந் தாண்டேல்,

ஈரைந்தா மாண்டு மட்டு மேற்றதைக் காக்க வேண்டும்
பாரந்தான் பொறுத்து நின்ருன் பாலடைந்து விடும்வைத்
[தோனுன்
ஆரம்பூண் முலேயாய்! ஈரைந் தாண்டினுக் குள்ளே சென்று
தூரம்போ யேனு மீயென்று தொடர்ந்திருந் தானே
[யாகில், 301

தொடர்ந்தது முதற்பத் தாண்டுத் தொகைத்தினம் வரையும்
[வைத்தோற்
கடைந்திடு முன்ன மீந்த வடைக்கலப் பொருள்க ளெல்லாம்
மடங்கியே தொடர்ந்தி டாம லத்தின மீந்தா னுகில்
மடந்தையே! காப்பே னென்று வாங்கிவைத் தவனேச் சாரும்.

நிலத்தின்மேல் வழக்கு வந்து நின்றுநாட் செல்லு மாகிற்
பலத்தினேச் சேதம் பண்ணப் படாததன் பலத்தை யெல்லாம்
பெலத்தவ னெருமத் தியஸ்தன் பேசிப்பார்த் தவன்பால்
[வைத்துக்
கலக்கம்போய் வழக்கின் வெற்றி கண்டவற் களிக்க
[வேண்டும். 303

மூன்று தலேமுறைக்குப்பின் பொருள் மீளாமை

எப்பொருள் களின்மே லேனு மிணங்கிடா வழக்கு வந்து
செப்பமா யறிந்தோர் கூடித் தீர்த்திடு முனந்தொ டர்ந்தோர்க்
கிப்படி தன்னில் மூன்றென் றெண்டலே முறையாய்ப் போனுல்
அப்பொருள் மீளா தன்றைக் கதுபெறுங் கிரய மீளும். 304

கவர்ந்தவனிடம் பொருளை வாங்கி முதலாளிக்களித்தலும்
அவனுக்குக் கிடைக்கும் ஈடும்

பெலமுளான் பொருளை வேறோர் பெலமுளான் கவர்ந்து
[கொள்ள
வலவன்வே றொருவன் அத்தை வாங்கியீ ராண்டி லீந்தால்
உலகினிற் பன்னி ரண்டி லொருபங்கு மூன்று மாண்டேல்
இலகிய வாறி லொன்று மெடுத்துக்கொண் டயலாமே. 305

இப்படி வருடஞ் சென்று விதிவிதிற் பாதிப் பங்கை
அப்பொரு டனிற்கொண் டேயென் னரும்பொரு ளைத்தா
[வென்று
செப்பிடா முதலா ளிக்குச் சேர்க்கவோர் வருடத் துள்ளே
தப்பிலா முதலை யெல்லாஞ் சரிவரக் கொடுக்க வேண்டும். 306

பறவை, விலங்கு, அசரப்பொருள்கள் முதலியன விற்கும் முறை

சிறைகளை விற்கும் போது சிரசினைப் பிடித்தும் யானை
கிரயமாக் கொடுக்கும் போது கிளர்துதிக் கையைப் பிடித்தும்
குறைமிரு கங்கள் பட்சி கொடுக்கில்வா லினைப்பி டித்தும்
பிறைநுத லாய்பொன் னீந்து பெறுபவர்க் கீய வேண்டும். 307

காயுள வசரம் விறகி லதன்கனி களினை வைத்து
மேயுத..............ற்ற வீண்சரங்கள் மண்ணை
நீயுதவ.............. சலம்விட்டு நினைவுட னென்று சொல்வீர்
தா.......... விதைப் பார்க்கத் தயவுசெய் பெரியோ ரெல்லாம்.

ஞாயமாய் வாங்கிய சொத்துக்குப் பூர்ண அனுபவம்

இம்மனு விதிப்ப டிக்கே யரசுசெய் யிறையோன் றனே
செம்மையா மொருவன் பூமி தனையேனுஞ் சினத்து(?) வாங்கித்
தம்மிலே யென்செய் தாலுந் தாமொரு வருக்கீந் தாலும்
அம்மனை செய்யை மீட்டி யுடையவற் களிக்க லாகா. 309

புதைபொருளுக்கு அரசன் கூறு

புதையலை யெடுத்தோ னல்ல புண்ணிய வேத னாகில்
அதையிரு கூறு செய்தே யரசர்க்கோர் கூற்றை யீய
எதை யேனுஞ் செய்துண் போமென் றியற்றிய வேதன் மற்ற
விதமுள குலத்தோ ராகில் விரைந்தறு கூறு செய்தே. 310

ஆறிலோர் பங்கைத் தான்கொண் டரசர்க்கஞ் சுபங்கு மீயக்
கூறிய விதியிவ் வாறு கொடாதனைத் தையுங்கொண் டோனைச்
சீறியே யனைத்தும் வாங்கிச் சிந்தையில் மதம்போ மட்டும்
மாறிலா வபரா தங்கள் வாங்கலா மன்னன் றானே. 311

புக்திலெட் சணங்க ளிங்குப் புகன்றன மிதன்மேற் பாவால்
எத்திசை யினுக்குஞ் சாட்சி யிலக்கண மறியச் சொல்வாஞ்
சத்திய மொழியப் பேசுஞ் சபையுளோர் மன்னர் தாமும்
நித்தநித் தனுமிந் நூலை நெஞ்சத்...........திருத்து வீரே. 312

புக்தி லட்சணம் முற்றும்.

---

## 15. சாட்சி லட்சணம்

---

இப்பகுதி மிகவும் சிதைந்தும், ஏடுகள் உடைந்தும், காணுமலும், செய்யுள்கள் பல இல்லாமலும் இருக்கின்றன. ஆதலால் மிதாக்ஷரம் என்னும் மூல நூலிலிருப்பனவற்றைக் கொண்டு, சுருக்கமாகப் பின் வருமாறு எழுதப்பெறுகின்றது.

நேரில் கண்டவனே கேட்டவனேதான் சாட்சி சொல்லுதற்கு உரியவன். இவர்கள் நேர்ச்சாட்சியரென்றும், கேட்ட சாட்சியர் என்றும் இரு வகையினர். பத்திரம் எழுதினவர், பத்திரத்தில் சாட்சி வைத்தவர், கொடுக்கல் வாங்கலைப் பார்த்தவர், அவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டவர், அருகில் இருந்தவர் இவ்வைவரும் நேர்ச்சாட்சிகள். கிராமத்தார், பிராட்டுவிவாகன், மன்னன், சேவகன், உறவின் முறையார், சாட்சி கூறியவரைக் கேட்டவர் இவ்வறுவரும் கேட்ட சாட்சிகள்.

இப் பதினெரு சாட்சிக்காரர்களும் விரதங்கள் அனுஷ்டிப்பவரா யும், தாராள மனப்பான்மையும், நற்குடிப் பிறப்பும், உண்மையும், சமயப் பற்றும், நேர்மையும், மக்களுடைமையும், செல்வமுடைமையும் பெற்ற வரா யிருத்தல்வேண்டும். அத்தகைய சாட்சிக்காரர் மூன்று பேர்களுக் குக் குறையாமல் இருத்தல்வேண்டும். அச் சாட்சியர் அவரவர் சாதிக் குரிய ஒழுக்கங்களைப் பின்பற்றுபவரா யிருத்தல்வேண்டும்.

பின் குறிக்கப்படுபவர் சாட்சிகளாக உரியவரல்லர்:—கல்வி நிறைந்த அந்தணர்; சந்நியாசிகள்; வானப்ரஸ்தர்; வயதுமுதிர்ந்தோர்; தந்தையுடன் வழக்கிடுபவர்; குருக்களின் கீழுள்ள சீடர்கள்; பற்றற்ற பெரியோர்; பதினறு பிராயத்துக்குட்பட்டவர்; அகம்பாவி; பைத்தி யர்; மதபேதி; சூதாடிகள்; மூடர்கள்; திருடர் முதலியவர்களும் இன்னும் வழக்கில் எந்தவிதமான சம்பந்தமுடையவரும் சாட்சியர் ஆகார்.

ஜாதியைவிடச் சாட்சிக்குக் குணமே மேலானது. கடமையறிந்த சாட்சி ஒருவனுனுலும் போதும்.

விபசாரம், திருடு, தூஷணை, சாகசம் இவற்றிற்கு எவரும் சாட்சியாகலாம்.

*சாட்சி சொல்லவே வ.......ருபவர் தன்மை நற்றவசி*
*நீட்சியர்க் கனேகநாட் கொடுக்கவே நினைக்குந் தியாகி*
*மாட்சி..........(?) நற்குலவான் பொய்யே வழு.* 313

இதிலிருந்து 314 முதல் 325 முடியச் செய்யுட்கள் எழுதப்பட்ட ஏடுகள் உடைந்து சிதைந்து போயினவாதலால், பாட்டின் உருவங்கள் கிடைக்கப்பெறவில்லை.

*பூத லத்திலே சாட்சிகள் புகல்..........வோர் தங்கள்*
*பேத மிப்படி யெனவிங்குப் பேசினே மிதன்மேல்*
*ஆத ரித்தவர் தம்மையே கேட்கின்ற வடைவைச்*
*சீத முற்றிடு மொழிப்பெரி யோர்கள்முன் றெரிப்பாம்.* 326

சாட்சி லட்சணம் முற்றும்.

---

# 16. சாட்சி கேட்கிற லட்சணம்

வாதி, பிரதிவாதிகளின்முன் பிராட்டுவிவாகன் வந்திருந்து, சாட்சிகளை ஒருவர் வருவது மற்றவர்க்குத் தெரியாமல் வரவழைத்து, ஸ்நானம் பண்ணிவரச் செய்து, கிழக்கையோ வடக்கையோ பார்த்து நிற்கச் செய்து, 'பொய்ச் சாட்சி சொன்னுல் இன்ன இன்ன தீமை நேரும்' என்று அவனவன் ஜாதிக்குத் தக்கபடி கூறவேண்டும் (329—33). பிசகான சாட்சி சொல்பவனைத் தண்டித்து அகற்ற வேண்டும்; சாட்சிக்காரன் சபையினரை அறிவுத் திறத்தால் ஏமாற்றினுல், தெய்வம் பொய்ச் சாட்சி சொன்னவனை ஏழு நாளில் அவனைத் தண்டிக்கும். அத்தண்டனைகள் 341—42 செய்யுட்களில் கூறப்படுகின்றன. பொய்ச்சாட்சி சொன்னவனை அடித்து, வழக்கு முதலை அவனிடமே வசூலித்து முதலாளிக்குக் கொடுக்கவேண்டும். சாட்சி சொல்ல முன்வந்தவன் பிறகு சொல்லாமல் பின் வாங்கினுனுல் அவனை நாற்பத்தைந்து நாள் சிறையில் வைக்க; பின்னும் மறுப்பானுனுல் பொய்ச்சாட்சி சொன்னவனுக்குச் சொல்லிய தண்டனையை இடுக என்கின்ருர்.

பொய்ச்சாட்சி சொல்லத் தூண்டும் காரணங்கள் ஏழு. அவை 345—6ஆம் செய்யுட்களில் கூறப்படுகின்றன. பொய்ச்சாட்சி கூறுகிறவனும், ஆசையினுல் உண்மையை மறைப்பவனும் பிராமணனுல் அவனை நாடு கடத்தலே தண்டனையாகும்

சாட்சியர் பலரில் அதிகப்பேர் சொல்வதை நம்பவேண்டும். சாட்சி நல்லவரோ கெட்டவரோ என்பது அவரவர் பேசும் முறைகளையும் ஜாடைகளையும் கண்டு தெரிந்துகொள்ளலாம். பிராட்டு விவாகன் சாட்சியைக் கேட்கும்போது சில முறைகளைக் கடைப்பிடிக்கவேண்டும் (354—56).

சாட்சியை அழைத்து நிறுத்துகிற விதமும் காலமும்

*தொடரி யானவ னெதிரிபித் துணைவர்முன் பாக*
*இடம றிந்துபி ராட்டுவி வாகன்வந் திருந்தே*
*அடைவி லொன்றுக்கொன் றேதெரி யாதங்கு வருத்தி*
*மடம கன்றங்கு வந்தசாட் சியினைநீர் மருவி,* 327

சுத்தி யுற்றுவா வெனச்சொல்லி அச்சொல்ம ருது
பத்தி யாம்வரு மொருவனை முனமவர்ப் பகர்ந்து
சத்தி யமவர்க் கீழ்த்திசை வடதிசைதனைப் பார்த்தே
ஒத்த பூமியி லுதயத்தி விருத்தலவ் வொருவன், 328

பொய்ச் சாட்சி புகல்வோருக்கு வருணத்திற்குத் தக்கவாறு
தீங்கு நேரு மென்றல்

நல்ல வேதிய னுமெனி லவன்றனை நாடிச்
சொல்ல வந்தனை சாட்சிய திற்பொய்யே சொன்னால்
எல்லை யற்றவே தமந்திர மிதுமுத லுனைவிட்
டொல்லை யிற்செலு மிதுநிச மெனவுரைத் தறியே. 329

சாட்சி வந்தவ னல்லசத் திரியன்று னாகில்
ஆட்சி யாயுனக் கமைந்திடும் வாகன மதுவும்
வாட்க ளாதியா மாயுத வர்க்கங்க ளனைத்தும்
காட்சி யற்றுனைக் கடந்தின்றே போமெனக் கழறே. 330

நல்ல வைசிகன் சாட்சியே நவிறற்கு வந்தால்
செல்வ மாயுனைச் சேர்ந்திடும் பசுவிதை நிதியுஞ்
சொல்லிற் பொய்ம்மொழி யுரைக்கிலத் தோஷத்தா லுனைவிட்
டொல்லை யிற்செலு மிதுநிச மெனவுரைத் திடலாம். 331

வந்து சாட்சியாய் வழுத்துவோன் நல்லசூத் திரனேல்
சிந்தை யாரநீ யறிந்திடாச் செய்திசெப் பினையேல்
முந்தச் செய்தவத் தாலுனை முயங்குசெல் வமெலாம்
இந்த நாழிகை முதலுனக் கிருந்திடா திதலால், 332

கொலைக ளவுகள் ளுணல்சற் குருநிந்தை கொடிதில்
இலகு மிந்தநா லினுக்குடன் படலிங்கு மொழிந்த
உலகு மஞ்சிய பஞ்சமா பாதக முவந்து
நிலம திற்செய்வோன் போகின்ற நரகினீ போவாய். 333

இந்த வாறுள நரகமு மின்றியே வீட்டில்
முந்தி யேநெருப் புவைத்தவன் பெண்ணைமுன் கொன்றோன்
சிந்தை யாரவே தனைக்கொன்றோன் குழந்தையைச்
[சேதித்தோன்
நிந்தை யாடவர் போம்நர கினிலும்நீ போவாய். 334

இங்கி யம்பிய நரகத்தில் வீழ்வது மன்றிப்
பொங்க மாகிய விச்சென்மம் வரையினீ பொருந்தித்
தங்கு சென்மங்கள் நூறினிற் செய்தவ மனைத்தும்
பங்க மானவுன் சாட்சியாற் கெடுபவன் பாற்போம். 335

தங்க ளுக்கமைத் திடுங்குல தன்மந்தப் பாத
வங்க முற்றநா லுவன்னத்தார்க் கீந்தவாற் றையப்
பங்க மாய்க்குல தன்மத்தைப் பகைத்தவ ருக்கும்
அங்கு நால்வருக் குரையுஞ்சூத் திரர்க்குரைத் ததுவும், 336

இந்த வாறுநா முங்கள்மு னியம்பின தெல்லாஞ்
சிந்தை யிற்றவ ரூதுசத் தியமெனத் தெரிந்து
முந்த மத்தியில் நீ................ மொழியை
நிந்தை யற்றசொ லாய்நிசஞ் சொலென்றுநீ கேளே. 337

பொய்ச்சாட்சி கூறுவோர்க்குத் தண்டனையும் அவர்க்கு
வரும் தீமையும்

என்று மேகுல தர்மத்தை இகழ்ந்தசூத் திரனும்
நின்ற சாதியா ரெவர்களுஞ் சாட்சியாய் நோக்க நின்ற
கன்றி யேமனம் பயப்படு மொழியெலாங் கழறி
வென்றி தோல்வியை யறிவது பிராட்டு விவாகன். 338

இந்த வாறுகே ட்குற்றக ரியியம்பின மொழிகள்
வந்து கேட்கையிற் பிசகெனத் தெரிந்திட வருமேல்
அந்தச் சாட்சியைத் தெண்டினைச் செய்தய லகற்ற
முந்திக் கேட்டதை யேமொழிந் தாற்றெண்டிப் பிலையே. 339

பேசிற் பொய்யைமெய் யன்னவே பிராட்டுவி வாகன்
ஆசற் றேவமர் சபைப்பெரி யோர்களு மறியக்
கூசிப் பேசிடா மதித்திறத் தோன்வந்து கூறில்
ஈசற் கேற்றிடா தம்மொழி புகன்றெழு தினத்துள், 340

பொய்யை மெய்யெனப் புகன்றவப் புலையன்ஞா திகள்தாம்
ஐய மில்லைய திலையெனி லங்கியா லிலம்வேம்
வெய்ய விக்குறி யிலையெனில் வீட்டினுள் ளோர்கள்
வைய முற்றினு மறிந்திட ரோகம்வந் தெய்தும். 341

இந்த மூன் றிலோர் துர்க்குறி கண்டிடி லிவனே
சிந்தை யாரப்பொய்ச் சாட்சிசொன் னனெனத் தெரிந்தே
அந்த நாழிகை தனிலடித் தேமுத லனைத்தும்
பிந்தி டாதுகொண் டுடையவற் களிப்பதே பெருமை. 342

சாட்சி வைக்கையிற் சம்மதித் திருந்துதன் சபையிற்
கூட்டி வந்தபோ தியானறி யேனென்று கூறும்
நாட்ட மற்றவன் றனைநிசம் நவில்நவி லென்றே
பாட்டில் வைத்துநாற் பத்தஞ்சு தினமட்டும் பகரே. 343

பகரி வித்தினத் துள்அவன் நிசம்பக ரானேல்
இகழு நாற்பத்தா ரூந்தினத் திலிழுத் தவனைச்
செகம்ந டுங்கு பொய்ச் சாட்சிசொல் பவர்கள்
[தெண் டினைச்செய்
தகமெ லிந்திட முதல்பறித் துடையவற் களிக்க. 344

பொய்ச்சாட்சி சொல்வதற்குரிய ஏழு காரணங்கள்

லாபத் தாலேனுந் தாட்சண்யத் தாலேனு மதலால்
மாப..............ா (?) முகங்க றுக்கவே வருபயத் தாலும்
ஆபத் தேவரி னும்பிரி...............யோமென்ப தாக
வேபற் றுகுஞ் சினேகித மிகுதியா லேனும், 345

பெண்க ளாலேனுங்கோ பங்கள்பெ ரிதுற்ற தாலும்
கண்க ளாகிய புத்திகேட் டாலேனுங் கழறும்
எண்க ளேழுபோல் வருங்கரு மத்தினு லிசைந்து
பண்பி லாதுபொய்ச் சாட்சியைப் பகர்ந்துமின் றவனே. 346

பொய்ச்சாட்சிக்கு வாங்கும் அபராதமும் மன்னவனுக்குரிய பங்கும்

பிரம வங்கிச னன்றியே முப்பிரி குலனென் றூலத்
தரம றிந்தவன் சாட்சியா லெதிரிக்குத் தாழ்வாம்
திரவி யங்களை வாங்கியவ் வெதிரிபாற் சேர்த்து
வரமி குந்தமன் பங்குபத்தி லொன்றையும் வாங்கி, 347

மன்னன் வைத்துக்கொண் டவன்கரு மத்தள வாகப்
பின்னஞ் செய்யுமாக் கினைசெய்து பின்னப ராதம்
சொன்ன மாயிரம் பொன்முத லத்தொகைச் செம்பைச்
சன்ன மாக்கிய காசெனுந் தாங்கண்டு வருத்.........தே. 348

தப்பு சாட்சிசொல் லிவந்தவன் வேதனன் ஞகில்
இப்ப டிக்கிவன் சொன்னதா லிகழ்ந்தேங் கியைமுதல்
[தனேயே
அப்பொ ழுதினில் வாங்கியவ் வுடையவற் களித்துச்
செப்ப மாய்ச்சொலுங் கருமத்தி னின்றவர்க் களித்தே, 349

வீட்டை விட்டல தூரினேத் தேசத்தை விட்டுக்
கூட்ட மாகிய வினத்தின்மு தலுடுத்தகூ றையுடன்
நாட்ட மாகயா வருமிகழ் நக்கனத் துடன்ருன்
ஒட்டு விப்பது மன்னனுக்குஆகுமே வொழுங்கு. 350

சாட்சிகளுள் ஒப்புக்கொள்ளத் தக்கவை,

வந்த சாட்சியோ ரிருவித மாகவே வழுத்தில்
மூந்தி யேசொலு மாகுண முடையவர் மொழியைச்
சிந்தை யிற்கொள யாவரும் நல்லர்தீ யோரேல்
நிந்தியா ........தில் வெகுசன முரைப்பது நிசந்தான். 351

சாட்சியின் நன்மைதீமைகளே அவர் முகக்குறியா னறிதல்

தன்வ ழக்கினே யுரைத்திடிற் குற்றந்தன் மீது
சொன்ன திற்றெரிந் திடவவன் சாட்சியோன் சொல்லில்
என்ன குற்றமு மிலேயென்று தோன்றவே யியம்பில்
உன்னி யேயுரைத் திடுகின்ற சாடைக ளுணர்ந்தே, 352

சாட்சி சொல்வது பிசகென நெஞ்சினிற் றிரித்துக்
காட்சி யானபொய்ச் சாட்சிசொன் ஞேர்க்குக்கண் டினேயே
சூட்ச மாகமுன் னுரைத்தவா றிவனுக்குந் துலங்க
நீட்சி யானநாட் செய்வது மன்னர்க ணீதி. 353

பிராட்டுவிவாகன் சாட்சி கேட்கும் விதம்

எவரே னும்வந்து சாட்சிவந் தியம்பிய விடையில்
அவமி தென்றுதப் பெடுத்தெடுத் தீயவு மாகா
கவனம் வைத்தழுத் தியுமதைக் கேட்கவு மாகா
புவன மெய்த்தவ னேனுமிவ் விருவகை பொருந்தில், 354

நிசம வத்தமாய்ப் போய்விடு மவத்தங்கள் நிசமாம்
பிசகி யிப்படி வருவதால் மன்னற்குப் பிழையாம்
அசைவும் விட்டிருந் தவனினை வாய்ச்சொன்ன வகையே
திசைகள் மெய்க்கும்பி ராட்டுவி வாகனே தெரிந்து, 355

இவ்வ ளவிவன் புகன்றதற் கிவ்வள வன்றைக்
கவ்வி டத்திலே நடந்திடு மதையிவன் பார்த்தான்
செவ்வி யனென வளப்பினுற் தெரிந்துகொள் வதுவே
கவ்வை யற்றபி ராட்டுவி வாகன்றன் கருமம். 356

புகன்ற சாட்சியைக் கேட்கின்ற லட்சணம் புகன்ரும்
செகந்த னிலிகி தம்புக்தி சாட்சிக ளெனவே
புகன்றி யம்பிய கங்கோண்மூன் றினுலறி தற்குநாம்
உகங்க டோறுமா னிடப்பிர மாணமென் றுவைத்தார். 357

இங்கி யம்புமா னிடப்பிர மாணத்தா லீது
பங்க முள்ளது வெற்றியே யுளதெனப் பகரத்
தங்க ணெஞ்சறி யாதெனிற் பெரியவர் தாமும்
சிங்க மன்னபி ராட்டுவி வாகனுஞ் சேர்ந்து, 358

உரைக்க வேண்டுந்தெய் வப்பிர மாணமோன் பதையும்
தரைக்குள் மானிட ரறியவே சாற்றிடத் தொடங்கி
வரத்தெய் வப்பிர மாணலட் சணத்தினை மதித்து
நிரைக்குஞ் செம்பொருட் கவியினு லுரைசெய்வே னினிங்கே.

சாட்சி கேட்கிற லட்சணம் முற்றும்.

---

# 17. தெய்வப்பிரமாண லட்சணம்

மானிடப் பிரமாணங்களால் தீர்க்க முடியாத வழக்குக்களில் தெய்வப் பிரமாணங்கள் கையாளப்படும். அத் தெய்வப் பிரமாண வகைகள் ஒன்பது. அவை, (1) துலே, (2) ஜலம்: (3) கோசம், (4) அரிசி, (5) பதுமை, (6) வசனம், (7) விஷம், (8) மழு, (9) உழுந்து என்பன. (இவ்வரிசை மாறி, இவை முன்பின்னுக இந்நூலிற் கூறப் படுகின்றன. செய்யுட்கள் 361—68). இப்பிரமாணங்கள் செய்தற் குரிய பருவம், மாதம், கிழமை, நேரம் ஆகியவை தனித்தனியே கூறப் பெறுகின்றன. செய்யுட்கள் 369—75, இவர் இவர் இன்ன இன்ன பிரமாணங்களைச் செய்யவேண்டுமென்று வரையறுக்கின்றன.

இப் பிரமாணங்களை நிச்சயிப்பவர் வாதிப் பிரதிவாதிகளே ; சபை யோர்களும் இப் பிரமாணங்கள் செய்யவேண்டியதைத் தம்முள் ஆராய்ந்து நிச்சயிக்கலாம். சிலவகை நோய்களையுடையவர்க்கு இன்ன இன்ன பிரமாணம் இல்லையென்றும், உடல் நிலைக்குத் தக்கபடி பிரமா ணவகை நிச்சயிக்கப்பட வேண்டுமென்றும் செய்யுட்கள் 378—80 கூறுகின்றன. மானிடப் பிரமாணங்களால் குற்றவாளி என்று நிச்சயிக் கப்பட்ட ஒருவர் தாம் தெய்வப் பிரமாணம் செய்து தம் தூய தன்மை யைக் காட்டுவதாகக் கூறினுல் அதனையும் ஏற்றுக்கொள்வர்.

வழக்குக்களின் பெருமை சிறுமைகளைச் சொர்ண மதிப்பிட்டுச் சொல்வது வழக்கம். பதினுறு உழுந்து எடைத் தங்கத்துக்கு ஒரு சொர்ணம் என்று பெயர். நூறு சொர்ண மதிப்புக்கு விஷமும், எண்பது சொர்ணத்துக்கு உழுந்துப்பிரமாணமும், அறுபதுக்கு ஜலமும், நாற்பதுக்குத் துலையும், பத்துக்குக் கோசமும், ஒன்றேகால் வரைக்கும் அரிசியும், ஆறுமாகாணி முந்திரிக்கு வசனமும் வரையறுத்துக் கூறப் படுகின்றன. காணி முந்திரிக்குக் கீழேபோனுல் இப்பிரமாணங்கள் இல்லை. இப்பிரமாணங்களோடு, (கடவுள்மீது) சத்தியம் செய்யச் சொல்லுதலும் உண்டு. 389—90ஆம் செய்யுட்கள் அரசன்முன் சத்தி யம் செய்யத்தக்கவரும், 391—2ஆம் செய்யுட்கள் நாற்சந்தியிற் செய் பவரும், கடவுள் முன்னும் சபை முன்னும் செய்யத்தக்கவரும் இன்னுர் இன்னுர் என்று கூறுகின்றன.

சத்தியம் செய்கிறவரும் அவர் எதிராளியும் அன்று உபவாச மிருந்து, நீராடி, வெள்ளையாடையுடன், அநுட்டானங்களைச் செய்து முடித்து, அரசன், சபையோர்முன், பிராட்டுவிவாகன் சத்தியம் செய் வதற்குரிய மந்திரத்தைக் கூற, அவ்விதமே செய்யவேண்டுபவராவர்.

396—99 செய்யுட்கள் இன்ன இன்ன பிரமாணத்தில் தவறின வனுக்கு இவ்வளவு இவ்வளவு அடியும் அபராதமும் விதிக்கவேண்டும் என்று கூறுகின்றன.

தெய்வப் பிரமாணங்களொன்பது.

மாது லேப்பிர மாண மூழ்கு வெஞ்ச லப்பிர மாணமும்
கோத கற்ற வென்று வந்த கோச மான மரிசியும்
பேத முற்ற பதுமை பின்பு பேசு கின்ற வசனமும்
ஏத மற்ற நல்வி ஷம்மி ரும்பி னுல்ம ழுக்களும், 360

பொன்னு முந்து மாக நாம்பு கன்றி டும்பிர மாணமே
மன்னும் ஓன்ப தாகும் ஈதில் வந்த வங்கி விஷவகை
சொன்ன மாத மார்க ழிதொ டர்ந்து தையு மாசியும்
அன்ன மே!பின் மீன மாத மாவ ணியென் மாதமே. 361

அவ்வப் பிரமாணங்கட் குரியகாலம்,

கன்னி மாத மிங்ஙனங் கழறு மாத மாறிலே
மின்னு பானு வாரநாள் விளங்க வன்னு தித்துமுன்
மன்னு பத்து நாழி கைக்குள் வந்து செய்ய வக்கினி
பின்னி ரவித னில்விஷப் பிரமாணி....மோது பெரியரே. 362

இந்த நாளி லேவெயில் நிரம்ப வேயெ ரிக்குமே
வந்த..........யங்கு........மடைத்து மாரி பெய்யுமேல்
சிந்தை போ.......விஷப்பிரமாண.......ம் செய்யென்று
.........செய்த பேர்நிசம் மருவுவ தில்லை யில்லையே. 363

(குறிப்பு.—வெயில் நிரம்ப எரிக்கும் போது அக்கினிப் பிரமாணமும் மழை பெய்யும் போது விஷப் பிரமாணமும் செய்க என்பது இதன் கருத்து.)

நானி லத்தி லேச லப்பிர மாணமு நாடி யேசெய
ஆனி யாடி யைப்பசி யதற்க டுத்த மாதமும்
சீனி நேர்மொழி யாய்!இங்கு செப்பு நாலு மாதந் தையில்
வானில் தோன்று பானு வாரம் வந்த நாட் பகலிலே, 364

மத்தி பத்து நாழிகை மருவு கின்ற போதிலே
புத்தி வைத்துநீ செய வந்த பானு வோபிர காசியா
தொத்தி ருக்கி னுஞ்சல முயர்ந்ததண் பொருந்தினுஞ்
சித்த மொத்த வன்ச லப்பிர மாணஞ் செய்வ தில்லையே. 365

பொன்னு மூந்தை நெய்யி லேபொ ருந்தி யபிர மாணமே
சொன்ன திங்கு சித்தி ரைதொ டர்ந்தி டும்வை காசியும்
மின்னு மத்த னுவிலும் விளம்பு மாத மூன்றிலே
அன்ன மே!சொல் பானு நாட்ப கல்முற் பத்த ளவிலே, 366

தொலைபெ ருந்த ராசு தெய்வந் தோய்ந்த கோச மரிசியும்
பலவி தங்க ளாம் வசன பாரி லிந்த நூலினுக்
குலகி லெந்த மாத மும்நன் றேது பானு வாரநாள்
இலகு நண்ப கல்முற் பத்தில் செய்யென் றி யம்பலாம். 367

இத்தி னத்திற் காற்று வந்தி டைவி டாத டிக்குமேல்
அத்தொ லைப்பிர மாண மான தன்று செய்வ தல்லவென்
றெத்த சித்த மாய்வ ழக்கை யோதுமப்பெ ரியவர்
சுத்தி பெற்று வருப வர்க்குச் சொல்லு நல்ல நீதமே. 368

யார் யார் எவ்வெப்பிரமாணம் செய்யலாகாது என்பது.

மாத ரெட்டி ரண்டு றும்வ யசையுள்ள பால னற்ற
போதும்.........மெண்ப தினெண் போம் வருட முற்றவன்
பர்த கர்த னிற்கு ருடர் பாத நொண்டி யானவன்
வேதர் தன்மெய் மீதி னில்வி யாதிதனை யுற்றவன், 369

இவ்வெ மூவர் தம்மையு மிருந்தொ லைப்பிர மாணமே
செவ்வ.........னிங்கேசெய் யென்னச் செப்பு சத்திரியனை
வெவ்வி ய அங்கி சலம் நேய வெப்புறு..................ம்
ஒவ்வி யநல் வைசி கனை யொண்ச லம்வி ஷத்தையும், 370

க்ஷத்திரியனை அக்கினி சலம் உழுந்து பிரமாணங்களும், வைசியனைச் சலம், விஷப்பிரமாணமும் செய்விக்க.

சூத்தி ரனையங் கி...........லங்கு மப்ப ரிசிமுன்...............
காத்தி டற்கு வரும்விஷங் கழறு மிம்மு றையிலே
சாத்தி ரம்பு கலாழித் தியஞ் செல்...........மறிவுளோர்,
[மொழித்திட முறைமையே
........................................................................ 371

விரதி, நோயாளி பெண்பிள்ளை இந்நால்வர்க்கும் நூறுபொன்னுக்குக் கீழ்ப்பட்ட விவகாரங்களில் இப்பிரமாணங்களில்லை.

மாவி ரதிதே கமேவ.........டுத.........சிமுன்
பே............ரதியுற்ற வன்பெண் பிள்ளை யிந்த நால்வரு
மேவி யவ்வ ழக்கிலே மெலிந்து நூறு பொன்னின்மேற்
பூவி லேவிட வேண்டு மேற்புக றெய்வப் பிர மாணமே, 372

சொன்ன திற்சி றிதினை யொத்துச் சிறி திணையில்லை
என்னு மதற்கங் கம்வந் திடுங்க ருமமென் றுபெயர்
மன்ன ரிப்ப டியங்கம் வருங்க ருமத் திற்கங்கி
தின்னும் நஞ்சுபொன் னுழுந் தி திலொன் றைச்செய்
[யென்னலாம். 373

இப்ப டிக்கி வன்செய் தேயி ருக்கி னுமி·ருக்கு மென்(று)
ஒப்பி நால்வ ரோதுவ ரதற்குற் றபேர் சிகை யதாஞ்
செப்பு மப்ப டியசிகை சேர்ந்த வன்வங் தானெனில்
அப்பொ ழுதினிலேதுலை சல மரிசி கோசமும்' 374

பெய்தி டும்ப துமை பின்பு செப்பி டும்வ சனங்கள்
ஐயமற விங்குசொல் லறுவ கைப்பிர மாணத்தால்
வைய மீதி லொன்றினை மதித்தி தனைச்செய் யென்பவே
பொய்யில் ஞான மறிந்த வர்பு கலுவது ஞாயமே. 375

வாதிப்பிரதிவாதிகளே பிரமாணவகையை நிச்சயித்தல்,

தொடுத்தி டுந்தொ டரியும்பின் சொல்லிய வெதிரியிருந் தின்ன
[............பிரமாணமென்ப
............தைச்செய்து கொள்வோ மென்றும்
இடுக்க ணுலி வன்செய்த வன்கண்டு கொள்வோமே......
...............போல நிற்செயிக்க ஞாயமில்லை நாரியே, 376

சபையோர் பிரமாணவகையை நிச்சயித்தல்.

வந்தி டுங்க ருமத்தை மதிக்க.........பின்.........
இந்த வாற்றிற் சத்திய மிதையி வன்செய் தாலன் றிச்
சந்த......மறுதெனச் சபை.........ம் பெரியார்
சிந்த னைசெய் தங்க வர்கள் சேர்ந்தி ருந்து பேசியே, 377

உண்டென மற்றென் ருகினு முனக்கி லேயென் ருகினும்
வண்ட வழக்க தாயிங்கு வழுத்து வன்னி வனெனக்
கண்ட வகையிற் சத்தியக் கருமஞ் செய்யென் றேவர
விண்ட வாறு செய்யவது மேதி னிக்கு ஞாயமே. 378

சிலரோகிகட்கு இன்ன இன்ன பிரமாணமில்லை என்பது.

பித்த ரோகி யோடுபின் சிலேத்து மரோ கியும்பெருத்
தொத்த தேக ராகிலும் விஷப்பி ரமாணமோ . . .
வெத்தி சைக்குங் குட்டரோகி யேல்ம ழுவுழுந் தையுமே
கத்தி டுஞ்சு வாச ரோகி காச ரோகி தன்னையே, 379

உடல் நிலைக்குத் தக்க பிரமாணமே செய்யச் செய்தல்.

தண்ச லப்பி ரமாண முந்த ரையி லேசெய் யென்றுனக்
கண்சி றக்கு ஞானி கள்அ கற்ற வேவி தியிலை
பண்பி னிற்செய் வோனு டலைப் பார்த்த தற்குத் தக்கதாய்
விண்ட தைச்செய் யென்று பின்வி ளம்ப லாம்பி ரமாணமே.

மானி டப்பிர மாணத்தின் வழியிற் குற்றங் கண்டவர்
ஏனி திப்ப டிச்செய்தா யென் றேதெண் டிக்குங் காலையில்
கானி டக்க டாவென வக்கன் . . . அதனை யகலவே
நானி திப்ப டிமுன்னே நடக்க வில்லை யென்றும் நான், 381

தெய்வத் தின்பிர மாணமே செய்வே னென்றங்கு செப்பினுல்
வையத் தில்ல வன்வ ழக்கு வந்த தற்க திகமாய்
மெய்யைக் காண வேதெய்வப் பிரமாணஞ் செய்ய வேசொல்லி
அய்யத் தைவிட் டேநி சங்க ளான வற்றை யேயெலாம், 382

எண்ணி ரண்டு மூந்தி டைதங் கத்திற் கிங்கு பேர்சொன்னர்
மண்ணி லோர்சொன் னங்க ளென்று வந்து சொல்வ ழக்கிலே
திண்ண மாயெவ் வாற்றினுந் தெரிந்தி டும்பொ ருளைநீர்
அண்ணி யெய்தின் விலையெம் மட்டுச் சொன்ன மென்ற
றிதியே. 383

பொருளின் மதிப்புகுத் தக்க பிரமாணம்.

நாடில் நூறு சொன்ன மட்டில் நட்ட மாகு மென்றிடில்
தேடி யேவி ஷத்தை யும்தெ ரிக்கி லெண்ப தேல்முழுக்
கூடி யவ்வு மூந்தை யுங்கு றைந்த துபதேற் சலம்
நீடி யங்கு நாற்ப தேல்நி றுத்து நற்று லையையும், 384

பத்தெ னுந்தொ கைவ ரைக்கும் பாரிற் கோச பானமும்
ஒத்த வஞ்சு கால்வ ரைக்கு மோத லாகு மரிசியும்
மொத்த மாக வேயறு காணி யுடன்முந் திரிமட்டும்
சுத்த மான வசனத்தின் விதப்ப டிக்குச் சொல்லுவாய். 385

இந்த வாறு கடையிற் சொல்லி யிடறு காணி முந்திரி
முந்து மிவ்வி லக்க மட்டு மோத லாம்பி ரமாணமே
அந்த மீது தானிதற்க டுத்த கீழ்த்தொ கைக்கெலாம்
வந்த பேர்கள் சத்தியம் வழுத்தி டாரெந் நாளுமே. 386

கள்வனென்று காணவழி.

கள்ள னென்று காண முதல்கள் கையிலே யடைக்கலம்
உள்ள தாக வில்லை யென்று ரைத்தெ டுத்துக் கொண்முதல்
தள்ளி வேறு காரியத்திற் கென்று தவின தையே
எள்ள லாமொ ருகருமத் தித்த னையெ னுமுதல். 387

சத்தியம் செய்தற்குரியவரும் அவரவர்க்கேற்ற இடங்களும்.

இந்த வாறு மூன்றி னுலெ முந்தி டும்வ முக்கிலே............
வந்து சொன்ன முன்பு சொல்லி வந்த திற்கு றையினும்
முந்தி யேசொல் சந்தி யம்மொ ழிந்து செய்ய வேசொனல்
நிந்தை யேயி லாமல்மன் நிசத்தை யேய றியலாம். 388

சத்தி யங்கள் செய்பவே காற்றுக் கடவுள் பேரிலே
சித்த மேப யப்ப டாது செய்யு மாப தகனும்
வைத்த தனங்க டந்து கொண்டு..............வந்த துரோகியும்
மொத்த மேத வர்கட்கேனும் தான்வி லைப்பட் டுற்றவன்,

சூத்தி ரன்றெ டாதவன் தெய்வம் மிலையெ னச்சொல்வோன்
மீத்த லத்திற் ருழ்வெ னப்பு கலும்...........முள்ளவன்
கோத்த விவ்வ றுவரையுங் கோத்தி ருமன் பாகவே,
சாத்தி ரத்தின் விதிப்படிக்குச் சத்தி யஞ்செய் யென்னலாம்.

நாண மின்றிச் சத்திய நவில்வெ னென்று வந்தவன்
காண வென்று வந்தவன் கருது சமய பேதனும்
வீண னென்ற றிந்திடில் விரைந்து நாற்சந் திதனிற்
பூண நின்று சத்தியம் புரியெ னப்பு கன்றிடே. 391

இங்கு சொல்லெ மூவரைவிட் டேனை யோரை வந்துநின்
றங்கு ரைசெய் காரிய மதிக மெனிலு ருத்திரன்
தங்கு முருவ முன்னு மதுதாழ்ந் திடுங்க ருமமேற்
பொங்கு சபையார் முன்னும் புரியெ னப்பு கன்றிடே. 392

சத்தியம் செய்யும் முறை,

எந்தச் சத்தி யங்களு மியற்று கின்ற வனுஞ் சேர்ந்
தந்தக் கரும மத்தினை யறியு மெதி ராளியும்
சிந்தித் தவன்றைக் குபவா சத்தி னையுஞ் சேர்ந்திருந்
தந்தத் தினந்தன் னில்வெள்ளை யாடை யைய ணிந்து போய்,

சுத்த நீரை யாடி யேது வைந்த வாடை யின்னுடன்
ஒத்த வனுட்டா னஞ்செய்தொ ழிந்து சுசியாய் வந்து
வித்த கம்மன் னும்பெரி யரும்விரைந் தெதிரியும்
தத்தமை மகிழ்..............செயவே சொல் சத்தியம். 394

அப்ப டிப்பி ராட்டு விவா கன்..............................
தெப்ப டிச்சொல் சத்திய மேனு மியற்று கண்ணிலே
தப்பி யமந்திரந்.............சிறிதேனும்
..........ப்பலை யெனச்செய் தங்குச் சத்தி யஞ்செய் யென்றோ
[திடே. 395

தெய்வப்பிரமாணத்தில் இழுக்கற்றவர்க்குத் தண்டம்.

வன்றொ லைக்கா யிரமடிம மூவுக் காறு நூறடி
சென்று சொல்சத் தியத்தைச் செய்த வற்கைஞ் ஞூறடி
கன்று மலி..............ளங்கண்டி...........நானூறடி
நின்று கோச பானஞ்செய்ந் நெறிக்கு மூன்று நூறடி. 396

பச்சை நெல்ல ரிசிக்குப் பகர்ந்த திரு நூறடி
உச்சி தவுழுந் தினுக்கு ரைத்த திரு நூறடி
இச்சை கொண்டிவ் வெழுவகைச் சத்தியமி யற்றியே
அச்ச முறுங்கள் ளனென்றே யறிந்த பின்னவ் வாறடி. 397

அபராதம்

*ஓர டிக்கொ ருபணம் வைத்திட் டோங்கு மப ராதமே*
*நேர றிதற்கே வசனம் நீளுமு தலுக் கில்லையாற்*
*பார றிதற்கே பது...........பாரிமுத லோர்க்கதால்*
*ஈர மறவே மொழிவதிவ் விரண்டி னுக்கு மாகுமே.* 398

*செய்த வுடனே சுத்தனு மசுத்த னுந்தெ ரிந்திடா*
*மெய்மை யாகுஞ் சத்தியம் விரும்பி யேசெய் வோருக்குத்*
*தையலாய்.........குறைந்த தற்குத் தக்கதாய்*
*வைய மதனிற் றேஷமறி நாளை நெடுக வைப்பதே.* 399

*இங்குப் பிரமா ணத்தி னினி லட்சண மியம்பினேம்*
*மங்க ளம்மு றும்வி ஷப்பிர மாணத்தி விலட்சணம்*
*பொங்க வினி மேல்மனம் பொருந்தி யுரை செய்குவேன்*
*பங்க முறவ ரினுமதைப் புரிந்துகொள்ள வேண்டுமே.* 400

தெய்வப் பிரமாண லட்சணம் முற்றும்.

---

# 18. விஷப்பிரமாண லட்சணம்

மிதாக்ஷரத்தில் ஆசிரியர் விஞ்ஞானேசுவரர் துலைப்பிரமாணத்தை முதலில் விளக்குகின்றார். இந்நூலாசிரியர் விஷப்பிரமாணத்தை முதலில் எடுத்துக்கொண்டு, அப்பிரமாணத்திற்குரிய பூர்வாங்கங்களான தேவ பூஜை முதலியவற்றை விவரமாக அமைக்கின்றார். இவை எல்லாப்பிரமாணங்களுக்கும் பொதுவானவை.

விஷங்களுள் மரக்கொம்புகளில் உண்டாகும் வத்ஸநாபமும், மலைகளில் உண்டாகும் விஷமுமே இப்பிரமாணத்துக்கு உரியனவாகும். இவை சந்தன நிறமுள்ளவை; சாரம் வாங்கின விஷம், சக்தி கெட்ட விஷம், இவைபோன்ற போலிச்சரக்குக்களும், பிற நஞ்சுகளும் பிரமாணத்துக் காகா.

இப் பிரமாணம் எடுத்துக்கொள்கிறவன் முன்பே மணி மந்திர ஔஷதங்களால் தன்னைக் காத்துக்கொள்ளாதபடி ஐந்து நாட்களுக்கு முன்னே அவனைக் காவலில் வைத்துக் கவனித்துக்கொள்ளவேண்டும்.

சோமவாரத்தில், விடிந்து பத்து நாழிகைக்குள் பிராட்டுவிவாகன் தன்னைச் சுசியாகச் செய்துகொண்டு, ஆலயத்தின்முன்னே, கோமயத்தால் ஓரிடத்தைச் சுத்தப்படுத்தி அங்கே வந்து நிற்கவேண்டும். கிழக்கே இந்திரனும், தெற்கே இயமனும், மேற்கே வருணனும், வடக்கே குபேரனுமாகிய இவர்களையும் பிற திக்பாலகர்களையும் உரிய திசைகளில் நிறுவி, ஆவாகனம் செய்யவேண்டும்; அஷ்ட வசுக்கள், பன்னிரு சூரியர்கள், பதினெரு ருத்ரர்கள், ஸப்த மாதாக்கள், எட்டு மருத்துக்கள், என்று கூறப்பெறும் ஐம்பத்தாறு தெய்வங்களையும் ஆராதிக்கவேண்டும் (செட்யுட்கள் 404—12).

விஷத்தை ஓரிடத்தில் வைத்து அதன் நாற்புறங்களிலும் சாவித்திரி மந்திரத்தை நான்கு வேதியர்களிருந்து 108 முறை ஓமம் செய்யவேண்டும்.

பிரமாணம் செய்கிறவன் செய்யவேண்டிய பிரமாண மொழியை ஓர் ஓலையில் எழுதி, 'பஞ்ச பூதங்களும், ஈசனும், இரவு பகல்களும், உதய அஸ்தமனங்களும், சூரிய சந்திரர்களும் ஆகியோர் அறிவார்களாக' என்று எழுதி, இந்தத் தேவதைகளையும் ஓலையிலேயே ஆவாகனம் செய்து பூஜிக்கவேண்டும்.

பிறகு, விஷத்தை வடக்கு முகமாக இருந்து பூஜித்து, அதில் யவையளவு எடுத்துப் பொடித்து, அதைப்போல் முப்பது பங்கு பசுவின் நெய்யில் அதைக் கலந்து, அதைச் சிவபிரான் முன்னே வைத்து, தரும தேவதையை அதில் ஆவாகனம் பண்ணி, மலர் கொண்டருச்சித்து, அதை நோக்கி "விஷமே! நீ மிருத்து மூர்த்தி! பூமியில் நீ பிரமனல் படைக்கப்பட்டாய்! நீ பொய்யனுக்கு நஞ்சாயும், மெய்யனுக்கு அமுதமாயும் ஆவாய்" என்று மந்திரங்களாற் அபிமந்தரிக்க வேண்டும்.

பிறகு சிரசு பட்டத்தை அவன் நெற்றியிலே கட்டி, தெற்கு நோக்கி அவனை நிற்கச்செய்து, அவ்விஷத்தை உண்ணுமாறு பிராட்டுவிவாகன் அவன் கையில் அவ்விஷத்தை அளித்து, மூன்று தரம் அவன் விஷத்தை நோக்கி ஒரு மந்திரத்தைச் சொல்லி உண்ணச் செய்யவேண்டும்.

அவன் உண்ட நேரந்தொடங்கி, மற்றொருவன் ஐந்நூறு முறை கையைக் கொட்ட, அந்நேரத்துள் அவ்விஷம் அவன் உடலில் ஏழுபடியாக ஏறும். உரோமதாது, மயிர்த்துவக்கு, தசை, கொழுப்பு, எலும்பு, மச்சை, ஏழாந்தாது என்னும் சுக்லம் என்று ஏழிடங்களில் விஷம் ஏறும்போது, உண்டாகும் மயக்கம் முதலியவை 421—23 பாடல்களில் விரித்துக் கூறப்படுகின்றன. ஏழாந்தாதுவில் ஏறினல் மரணம் உண்

டாகும். (பெரியபுராணம், அப்பூதியடிகள் நாயனர் புராணத்தில் செய்யுள் 27-இல் 'ஏழாம் வேகம்' என்ற தொடர்க்குப் பொருள் இச் செய்யுள்களால் அறியப்படும்.)

இவ்வாறு அவன் மரணமடைந்தால் அவன் முற்றிலும் அசுத்தன். அப்படியில்லாமல் வாந்தி முதலியனமட்டும் நிகழ்ந்தால் அவன் சுத்தன் என்று அறியப்படுவான். அவனுக்கு மாற்று மருந்துகள் கொடுத்து அவனைச் சுகப்படுத்துவது பிராட்டுவிவாகன் கடமை.

இவையே விஷப்பிரமாண முறை.

இருவகை விஷங்களின் பெயர்கள்.

*கொம்பி லுண் டாகும் விஷத்தினுக் குவத்ச*
*நாபமென்று பெயர் கூறும்*
*அம்புண ரிமையோர் பருவதத் தினிலுண்*
*டானதே விஷ மென்னலாகும்*
*வம்புசந் தனத்தி னிறங்கொடு வருமிவ்*
*வாறுள விரண்டினி லொன்றை*
*வெம்பியே பிரமா ணஞ்செய விரும்பி*
*வருபவர்க் கீவது விதியே.* 401

விஷப்பிரமாணத்துக்கு ஆகாதவை.

*சாரத்தை வாங்கு(ஞ்) சரக்கேனும் நாட்போய்*
*சத்திகெட் டாலுமவ் விரண்டும்*
*நேரே..............இவைகள் போலிருக்கும் போலிச்*
*சரக்குகளும் மின்னெறி போய்ப்*
*பாருக்குள் வளருங் கிழங்கிலை வேருய்ப்*
*பகர்ந்திடும் நஞ்சுகடா.........................*
*ஏருற்ற பிரமா ணஞ்செயுஞ் சோத்தி*
*யற்கீ வேவிதி யிலையிலையே.* 402

பிரமாணம் செய்யுமுன் நிகழவேண்டியவை

*சோத்........தியன் விஷந்தன் றேகத்திற் பொருந்தித்*
*துன்பங்கள் வந்திடா வழியாய்க்*
*காத்திடவேர்............கக்கள கட்டுவா னதனைக்*
*கழற்றிப்பின் மணிமந்தி ரங்கள்*

கோத்தௌ ஷதங்கள் செய்யவொட் டாமல்
விஷத்தினைக் கொடுக்குநா ளதற்குப்
பூத்தல்மன் னனஞ்சு ளதற்குப்........நாட்குமுன்னே
பொருத்திடக் காவலி லவனே. 403

பிரமாணம் செய்யவேண்டிய முறை

சோமவா ரத்தில் விடிந்துமுற் பத்திற்
சோத்தியன் பிராட்டுவி வாகன்
நேமமாய்ச் சுசியாய் வந்து நின் றுகொண்டு
நெறிஆல யத்ததின் முன்னே
கோமயத் தாலே சதுரமாய்ப் பெரிதாய்க்
கொண்டங்கு மெழுகியவ் விடத்தில்
தாமத மின்றிப் புண்ணிய.......... ஞ்
சார்ந்தபின் பிராட்டு விவாகன். 404

விஷப்பிரமாணத்தில் 405—9 செய்யுட்கள் சுவடியில் முற்றும் சிதைந்துள்ளன. அவற்றில் அப்போது செய்யவேண்டிய தேவபூசைகளின் முறை விரித்துக் கூறப்படுகின்றது.

பூசைமுறை

இப்பதி னொருருத் திரரையும் பூசை
இயற்றியே இயமனுக்கும் நிருதிக்கும்
தப்பிடா ...........வே பூசபி ராமியைச் சோர்தயங்.......
.......................................
ஒப்பிலா வயிட்ண வியைவரா கியைமா
கேந்திரி சாமுண்டி யோதுஞ்
செப்பமா மிந்தச் சத்தமா தாவைத்
தனித்தனி பூசைகள் செய்...............ய். 410

நிருதிக்கு வடக்கே கணபதிதன்னை
நிறுத்திவ ருணனுக்கு வடக்கே
அருணமொய்த் தகெனர் பந்தனர் வாயு
வனிலரை மருத்துவை தன்னை

கருதிப்பி ராணே சரைப்பிரா மணரையுங்
காக்குஞ்சீ வரவந்த வட்ட
மருத்துக்க டனேயும் பூசித்து விஷத்தை
வைத்திடு மிடத்திற்கு வடக்கே, 411

துற்கையைப் பூசை பண்ணியீ திருச்
சொல்லிய விந்திரன் முதலாய்க்
கற்பியீ தங்கி தேவதை யைம்பத்
தாறையுங் கண்டுகொண் டிவரை
பொற்புறப் பூசை புரிந்திடில் விஷத்தைப்
பொருத்துமவ் விடத்தினேச் சுற்றி
மற்றநால் திசையு மொவ்வொரோ மகுண்டம்
வகுத்து நால்வேதியர் தமையே, 412

நேமித்துச் சாவித் திரிமந் திரத்தை
நிகழ்பிரண வாதியா கவுமே
தாமிகச் சுவாகாந் தம்வரச் சொல்லித்
தற்பைகள் சமிதை நெய் யவிசாற்
பூமிக்குள் வகைக்கு நூற்றெட்டா யோமம்
புரிந்துகொண் டேயிருகையிலே
காமித்துப் பிரமா ணஞ்செயும் சோத்தியன்
கத்திச்சத் தியஞ்செயு மொழியை, 413

சிரசுபத்திர பூசை

பெரியவர் விதித்த படிக்கோரேட் டினிலே
பிழையற வரைந்ததின் பின்னே
தெரியுமிக் கரும மனத்தையும் பானுத்
திகழ்மதி பிருதுவி யப்புக்
கருதிலத் தேயு வாகா யம்மிவை காணுமென்
மனத்தி னுக்குள்ளே
அருளென நிறையு மீசனி ராவும்
பகலுதை யங்களு மந்தி, 414

இப்பதின் மூன்று தேவதை களுமே
யறிவர்க ளெனவுமங் கெழுதி
வைப்பதின்..........சிரசுபத் திரமாம்
வரைந்ததே வதைபதின் மூன்றைச்
செப்பமாய்ப் பூசை சிரசுபத் திரத்திற்
றனித்தனி செய்திட வேண்டும்
ஒப்பிலாச் சிரசு பத்திர பூசை
யுவந்திந்த வாறுசெய் தொழிந்தால், 415

பிரமாணஞ்செய்ய விஷந்தயாரிக்கும் முறை

இப்படிச் செய்த விடத்தின்மத் தியிலே
வடக்கினை முகங்கொள விருந்து
செப்பமாய்ச் சிவனைப் பூசித்தங் கவர்முன்
செப்பிய விரண்டிலோர் விஷத்தில்
தப்பிடா தொன்ரும் யவைப்பிர மாணந்
தனித்தெடுத் ததைப்பொடி செய்தே
அப்பொடி தனைப்போல் முப்பதுபங்கி
ஞவிநெய் விட்டதை யளைந்து, 416

நெய்யைவிட் டளைந்த விஷத்தினைச் சிவன்முன்
னேவைத்துத் தர்மதே வதையை
மெய்மைவைத் ததிலா வாகனம் பண்ணி
விரைமலர் கொடுபணி விழைத்து
வையமீ தினில்வா ராய்விஷ மேநீ
மாமிருத்து மூர்த்தி துட் டாற மாச்
செய்கையை யறிய வேதனுற் சிருட்டிக்
கப்படு மவனவத் தனுக்கு, 417

பிராட்டுவிவாகன் விஷத்தைக் கொடுக்கும் விதம்

நஞ்சதா யிருந்து சுத்தனுக் கமிர்த
மாயிருந் தேநலங் கொடென்று
செஞ்சொற் புகன்றே யபிமந்தி ரித்துச்
சிரசுபட் டயத்தைச்சோத் தியனை

வஞ்சக மகலச் சிரசினிற் கட்டி
வந்து தெற்கே முகமாக
நெஞ்சினிற் பயந்து நிற்கவவ் விஷத்தை
நினைவுடன் பிராட்டுவி வாகன், 418

பிரதிக்ஞை

வடதிசை யன்றிக் கீழ்த்திசை முகமாய்
வந்துநின் றேகையிற் கொடுக்க
திடம்பிடும்............சோத்தியன் வாங்கிய விஷத்தைத்
தின்றுமுன் விஷத்தினைப் பார்த்துப்
படர்புவி தாழ வாராய்விஷ மேநீ
பங்கயன் மதலைசத் தியத்தும்
இடரில்தன் மத்து மிருப்பவ னிந்த
பொய்யினி லகப்படு மென்ப. 419

சத்தியத் தாற்காப் பாற்றென்று மூன்று
தரஞ்சொல்லி விஷத்தினைத் தின்னப்
பத்தியாத் தின்ற வதுமுத லிரண்டு
பாணியைக் கூட்டிமற் றொருவ
னைத்தவ ருதைஞ்ஞூறு தாளமட்டும்
நாடியே யடியென வடித்தால்
அத்தொகை......வ......ரை விஷம்தின்றவ னுடலி
லவ்விஷ வேகங்கொ ளாமல், 420

விஷம் உடலிற் பரவும்போது உண்டாகும் மெய்ப்பாடுகள்

செரித்துமுன் போல வேநின்று விட்டாற்
செகமறிந் திடவவன் சுத்தன் ;
மரித்திட வேகஞ் சத்ததாது வில்முன்
வழுத்திய ரோமதா துவிற்போய்
அரித்திடில் மயிர்க்குச் செறிந்திடு மதனுக்
கடுத்ததொக் குவிற்செலும் போது
தெரித்திட முகத்தில் வெயர்க்கு நாவுலருஞ்
செறிதரற் கடுத்தத சையிலே, 421

போம்பொழு தவன்ற னு........முன்னி றம்போய்
வேறொரு நிறந்தனைப் பொருந்தும் ;
கூம்பிதற் கடுத்த கொழுப்பினிற் போங்காற்
குலைந்துடல் நடுக்கமே கொள்ளும் ;
தேம்பிய விதனுக் கடுத்த வென்பினைப் போய்ச்
சேர்ந்திடிற் றிகழ்விழி சுழலும் ;
தாம்புகல் மொழியுங் கேட்டிடா செவிகள் ;
சலித்துவிக் கலுமிகக் காணும் ; 422

இதற்கடுத் தமச்சையிற் போகிற் பெருமூச்சி
யங்கியே மயக்கமுங் காணும் ;
அதற்கடுத் தமெய்வ ழாந்தாது வாகும்சுக் கிலம
டைந்தால் மரணத்தை அடைவான் ;
முதற்புக ருளத்தொகை க.........ளிங்கே
மொழிந்திடுங் குற்றமின் றேனும்
பிதற்றிய வாந்தி மூர்ச்சைகண் டாலும்
பேசலாம் சுத்தனென.............. 423

இக்குறி கண்ட சுத்தனுண் விஷத்தை
யிறக்கமாற் றுமருந்தை யீந்து
மிக்கவே சுகத்தை யடைவிக்க வேண்டும்
விளம்பிய குறிக ளுளத்துள்
புக்கிடா தன்றில் மறுதினம் வரையிற்
பொருந்திடிற் றெரிந்திடா வசுத்தன்
திக்க றிந்திடமுன் ரூந்தின முதற்கண்
டாற்சுத்த னெனச்செப்ப லாமே. 424

விஷப்பிர மாண விலட்சணத் தையீங்கே
விளம்பினேம் மேல் மழுவிதி......த்
திசைக் கறிந் திடமுன் வடமொழி யதனற்
செப்பின னதைத்தமிழ் மொழியால்
இசைத்துநா வலர்முன் னியம்புகெ னத்தனி
வழக்கினை யியம்புகின் றோர்கள்
அசைத்திடா வண்ண மனத்தினில் முந்தி
யறிந்துள செய்வதே யறமால். 425

விஷப்பிரமாணம் முற்றும்

---

# 19. மழுப் பிரமாணம்

ஐம்பது பலம் எடையுள்ள இரும்பை எட்டங்குல நீளத்திற்கு உருட்டி, இரு முனைகளும் ஒன்றுபோல் அமைத்து வைப்பது இப்பிரமாணத்துக்குரிய மழுவாகும். பிரமாணம் செய்கிறவன் கையிலே சிறிது நெல்லை எடுத்து அரிசியாகும்வரை அதைக் கசக்கச் செய்து, கையில் மறுகண்டால் மருதாணி, செம்பஞ்சு போன்றவற்றைப் பூசி, அவனை ஓர் ஆலயம் முன்னே சுத்தி செய்யப்பட்ட இடத்தில் கொண்டுவந்து நிறுத்தி, அங்கே இந்திரன் முதல் துர்க்கை ஈருகத் தேவ பூஜைகளும், ஓமங்களும், சிரசுபட்டய பூஜையும் முன் விஷப் பிரமாணத்திற்குச் சொன்னபடி செய்விக்கவேண்டும். பிறகு 429—31 செய்யுட்களிற் கூறியபடி நவமண்டலங்கள் உண்டாக்கி அங்குக் குறிக்கப்பட்ட தேவதைகளை ஆவாஹனம் செய்து, அம்மண்டலங்களின் தென்புறத்திலே ஓர் உலைக்களம் உண்டாக்கிக் கொல்லன் ஒருவனை ஸ்நாநம் செய்து வரச்செய்து, மழுவை நீரில் தோய்த்து, அவ்வுலையில் வைத்துக் காய்ச்சச் செய்யவேண்டும்; (செய்யுள்கள் 432—3).

பிறகு பிராட்டுவிவாகன் அக்னிக்குச் செய்யும் பிரார்த்தனை 5 செய்யுட்களில் (434—8) கூறப்பட்டுள்ளது. பிறகு பிரமாணம் செய்கிறவனை அங்குக் கொண்டுவந்து நிறுத்தி அவன் இருகைகளிலும் ஏழு அரசிலைகளை (ஒரே கனமாய், எட்டங்குல நீளமுள்ளனவாய்) ஒன்றன்மேலொன்ருய் அடுக்கி, ஒரு வெள்ளை நூலாலே கட்டி, அக்கட்டின்மேலே ஏழு வன்னியிலை, ஏழு அட்சதைகள், தயிரில்தோய்த்த செவ்வலரி மலர்கள் இவைகளை வைத்து, பிராட்டுவிவாகன் அக்னிக்கு மற்ருெரு முறை பிரார்த்தனை செலுத்தி, ஒரு குறட்டினுலே பழுக்கக் காய்ந்த மழுவை எடுத்து வரச் சோதனை காட்டுகிறவன் அதனை நோக்கி, '' சுவாமி! அக்னி பகவானெனும் தேவே! அறத்தினுல் என்னைச் சுத்தன், அசுத்தன் எனக்காட்டு '' என்று கூறி அதனை ஏற்கவேண்டும். பிறகு பிராட்டுவிவாகன் அவனை நவமண்டலங்களையும் சுற்றி அழைத்துச் சென்று, ஒன்பதாம் மண்டலத்தில் அதைப் போடச்செய்யவேண்டும். பிறகு முன்போல் அவன் கையில் நெல்லைத் தேய்த்துப் பார்க்கச் சூட்டுக்காயம் இல்லாவிடில் அவன் சுத்தன் என்று ஏற்றுக்கொள்ளப் படுவான். அவன் மழுவை ஒன்பதாம் மண்டலம் வருமுன் நழுவ விட்டுவிட்டால் பிரமாணம் இரண்டாம் முறையாகச் செய்யப்பட வேண்டும்.

### மழுவுக்குரிய உலோகமும் அளவும்

இரும்பினு லேஜம் பதுப லத்திலே
எட்டதாம் விரற்கிடைநீளம்
உருண்டையாய்த் தூருந் தலையுமொன் றேபோ
லொப்ப வாயுருட்டி வைக்கத்
தரும்பெய ரிதற்கு மழுவென முனிவர்
சாற்றினு ரதற்கே வந்ததிலே
பெரும்புவி யினிலிம் மழுப்பிர மாணம்
பேசியே செய்யவந் தவனே 426

கரத்தினில் நெல்லை வாரியே அரிசி
காண்கின்ற வரைக்குமே கசக்கி
வரச்செய்தும் நீங்கா மறுக்களி லெல்லா
மவன்மரு தாணிசெம் பஞ்சை
அரக்குறவமைத்து வைத்தபின்
னேயோ ராலைய முதலிய விடத்தில்
நிரப்புறுந் தலத்திற் சுத்திசெய் தேமுன்
னேவிஷ விதி சொன்ன முறையே. 427

### தேவபூசை முறை

இந்திரன் முதலாத் துர்க்கையீ ருக
வியம்பிய தெய்வபூ சைகளும்
தந்திரம் தவழு மோமங் கள்சிரசிற்
றரிக்கின்ற பட்டய பூசை
மந்தமி லாது பிராட்டுவி வாகன்
வழுவறச் செய்ததி னடுவில்
முந்திய வைக ளெட்டினேக் குறுக்காய்
மூட்டிய கனமொரங் குலமே. 428

### நவமண்டல பூசை

அந்த அங்குலங்க ளெண்ணிரண் டான
வகலத்திற் கோமயங் கொண்டு
வந்துமண் டலங்க ளொன்பது மெழுக
வட்டமாய்க் கிழக்குமேற் காகத்

தந்தமண் டலங்கட் கிடைஇடை வெளியு
மெண்ணிரு விரற்கிடை யிருக்கச்
சிந்தையிற் றெரிந்து வட்டமண் டலங்க
ளொன்பதுஞ் சிறந்திடச் செய்யே. 429

உரைத்த மண்டலங்க ளொன்பது தனில்மேற்
கொடுக்கத்து மண்டல மதிலே
அரத்தவங் கியினைப் பூசிக்க வதனுக்
கடுத்தகீழ் மண்டல மதிலே
வரித்திட வேண்டும் வருணனை மூன்று
மண்டலந் தன்னில்வா யுவினைத்
தரைக்குள் நாவினிலே யேயமன்ற னையஞ் சா...........
மண்டலத் திலிந்திரனை, 430

பேசிய வாறு மண்டலத் தினிற்கு
பேரனை யேழிற்சந் திரனை
தேசுறு மெட்டா மண்டலத் தினிற்சா வித்திரி
தேவதை தனையும்
மாசிலா வொன்பான் மண்டலந்தனி
லிங்க.........றந்த தேவனை.........
பூசியா விடங்க ளிவர்களமு தாகப்
பொருந்திய விடமென நினைத்தே, 431

உலைக்களம் தயாரித்தல்

மண்டலந் தோறு மோரொரு தர்ப்பை நுனி......
கீழ்த்திசையினி......... லவர் வைக்கவேண்டும்
தண்டிவே லைகொளுங் கொல்லனைச் சுசியைச்
சார்ந்துகொண் டாயுதந் தனையும்
கொண்டுபோய்ச் சலத்தில் தோய்த்தங்கு வரவே
கூறிவந் ததன்பின்பு முன்னே
விண்டமண் டலத்தின் றென்றிசை தனிலே
வழங்கவோ ருலைதனை விதித்து, 432

உலையிற் பச்சைநெல் லினு மியை யுங்கரியு
முவந்துவைத் தங்கியுண் டாக்கி
அலைவற மழுவை யதில்வைத்துத் தழல்போ
லாகவே காய்ச்சிப்பின் னதனை
மலைவறச் சலத்திற் றோய்த்தெடுத் துலையில்
வைத்துமுன் போற்றழ லாக்கி
இலகிய சலத்திற் றோய்த்துலை தனில்வைத்து
இருதுருத் தியிணையு மூதி, 433

பிராட்டுவிவாகன் அக்கினிக்குச் செய்யும் பிரார்த்தனை

காய்கின்ற வேளைப் பிராட்டுவி வாகன்
கனலின்மேல் திசைகண்டுவந்து
பாய்கின்ற கதிரோன் றிசையினைச் செவ்வாய்ப்
பார்த்துநின் றங்கியைப் பார்த்து
வாய்கொண்டு வாரா யக்கினி பகவா
னேஎன்றும் வருமுயிர் களுக்குள்
ஏயுஞ்சஞ் சரிக்கின் றவரன்ன பானு
திகளினைப் பாகமும் பண்ணி, 434

செரிப்பிக்கின் றவர்!நீர் சுத்தனென்ற றியுந்
திறத்திலும் பெரியராகையிற்(?)
தெரித்தபுண் ணியபா வங்களைப் பார்த்துச்
சார்ந்தவன் சுத்தனசுத் தனென்றே
தேர்ந்திடும்.....................................
.................. .. ........................
கருத்திலக் கினியே பாவகா சுவாகா
என்று.......................... 435

நெய்யினு லேநூற் றெட்டுத்த ரம்ஓம
நெருப்பினிற் செய்ததன் பின்பு
வையமோ........விஷவிதி தனில்முன்
வழுத்தல் போற்றன்ம தேவதையை
மெய்மையாய் ஆகுதி நெருப்பினிற் பூசை
விதிப்படி பிராட்டுவி வாகன்
செய்துவா ரீரக் கினிபக வானீர்
சிறந்த நால்வேதங் களுக்கும், 436

எக்கியங் களுக்கும் வேண்டிய வரெலா
தேவதை களுக்கும்நீ ரேவாய்
முக்கிய மாய்ப்பே சுவதெல்லாம் நீரே
முகமெல்லாத் தனுவிலு மிருந்து
தக்க புண்ணியபா வங்களை யறிந்து
பாவத்தைத் தள்ளுவீ ரதனல்
மிக்கரா முமக்குப் பாவகரெனும் பேர்
விளங்கியே தோன்றுதலாலே, 437

தொடங்கிய வின்னுன் அசுத்தனே யாகிற்
சுடுமவன் சுத்தனே யாகில்
அடர்ந்து நீர் குளிர்ந்தே யிருமையா! என்றங்
காக்கிவைத் தந்தச் சோத் தியனைத்
திடமுடன் சுசியாய் வத்தி.........தேகத்தின்
மண்டல மதினிலே நிறுத்திப் 438
படர்புகழ் பெரியோ ரெழுதின சிரசு
பட்டயத்தி னையும்பந் தித்து,

மழுவைக் கையில் வைக்கு முறை

இருகையுங் கூட்டிக் கொளச்சொலிச் சரியா
யிருக்குமே ழரசிலை யினையே
ஒருகன மாயெட் டங்குல நீள
மொன்றின்மே லொன்றுற வடுக்கித்
திருவனூர் நூற்ற வெள்ளை நூலாலே
சிறக்கவே ழுசுற்றுறச் சுற்றி
மருவிய இலைமேல் வன்னியி னிலையேழ்
மறுவிலட் சதைகள்ஏ ழினையும், 439

சோதனே

தயிரினிற் றேய்த்து வைத்ததின் மேலே
தழைநத செவ்வலரியின் மலரை
பயில் விழியே..................(?) தெய்வ
யானையவ் விடத்தினில் நிறுத்தி

வெயிலுறு................................................
ல் காணக்..........................................
குயில்மொழி யனமே! காய்கின்ற வேளை
குறித்துப் பிராட்டுவி வாகன், 440

அக்கினி பகவா னேசரு வான்மா
வுக்குளுஞ் சாட்சியா யிருந்தீர்
மிக்கமா னுடரா லேயறி யாத
விதமெலாம் விளங்கநீ ரறிவீர்
தக்கமா யின்னு ெெரு விவகாரத்
தாலகப் பட்டுக் கொண்டிருக்கத்
துக்கமாய் நிற்கு மிவன்றனைத் தன்மந்
துலங்கக் காவெனச் சொல்லி, 441

குறட்டினுற் பொறிக ளுதிர்ந்திட
மழுவைக் கூட்டியே பிடித்தெடுத்து வந்து
திறத்தினிற் சேர்த்தி ய..............னைச் சுவாமீ
யக்கினி பகவானெனுந் தேவே!
அறத்தினு லென்னை யசுத்தன் சுத்தனென்றே
யறிவியு மெனச்சொலிச் சொனபின்
னுறைத்தவன் கரத்தின் மலரின்மேல் மழுவை
யுலகறிந்திட வைக்க வேண்டும்; 442

மழுவுறுங் கரத்தைப் பிடித்து மெல்ல
மண்டலந் தொறுமிரு பதமும்
பழுதறக் கூட்டி மிதித்துவந் தெட்டா
மண்டலம் பார்த்து நின்ற பின்பு
விழுமிய கரத்தை விட்டந்த மழுவை
விளங்குமோன் பான்மண்ட லமதில்
நழுவிடா தெறிந்து விடச்சொலிக் கரத்தை
நாடியே பெரியர் பார்ப் பதுவே. 443

சுத்தன் அசுத்தன் என்பது விளங்கும் முறை.

திக்கறிந் திடமுன் போலவே நெல்லைத்
தேய்த்துப்பின் கரத்தினைப் பார்க்கில்
அக்கரஞ் சுடவே யிலையென்றூற் சுத்த
னதுசுடா மலுஞ்சுட்டு மிருந்தால்
மிக்கதன் காயம தாற்செய.............ன்ன
விளங்கவே சுட்டிடில் மனமும்
பொக்கிலா வாங்குங் காயமுங் கூடிப்
புரிந்துள் ளானென்றுநீ புகலே. 444

...........மழுவேந்திவரு......யி......த்தியலேந்திடை...........
...தொன்பான்......திற்றிகழா மழுப்போடில் முன்னிருந்து
வெம்மை யாமிடத்தை...........வேறிடங்கள் வேகவே
நழுவிச் சுட்ட......ந்நம்மிலே பின்னுமப் பிராமணமும்
செயலெனச் சாற்றுவர் பெரியோர் 445

[445 செய்யுளின் கருத்து. மழுவேந்திக் கொண்டு வருகிறபோது பதறி நடுவே போட்டுவிட்டாலும், ஒன்பதாம் மண்டபத்தில் போடு கிறபோது அம்மழு (தவறிவிட்டாலும்) மற்றொரு முறை முறைப்படி மழுவேந்தச் சொல்ல வேண்டும்.

இந்தவா றேயக் கினிப்பிர மாண
மெனச்சொலு மழுப்பிர மாணம்
நிந்தையி லாமற் செயுமிலட் சணத்தை
நிகழ்த்தினே மேற்றங்க வுழுந்தை
வெந்தவந் நெய்யிற் போட்டெடுக் கின்ற
வாறினை யியம்புவோ மதனைச்
சிந்தையாற் கொண்டு பெரியரைக் கூடிச்
செகத்திலுள் ளவருக்கு விதிப்பார். 446

மழுப்பிரமாண லட்சணம் முற்றும்.

---

# 20. நெய்ப்பிரமாண லட்சணம்

இஃது உழுந்துப் பிரமாண லட்சணம் என்றும் பெயர் பெறும்.

பொன் முதலியவற்ருல், கொடுக்கப்பட்ட அளவில் ஒரு சட்டியும், உழுந்து அளவிலே ஒரு தங்க உருண்டையும், உலோகத்தில் ஒரு மோதிரமும் தயாரித்துக்கொள்ள வேண்டும். வாதி, பிரதிவாதி, பிராட்டு விவாகன் ஆகியோர் குறித்தநாளிலே, தானம்பண்ணி, சுசியாய், வெள்ளையாடை உடுத்திக்கொண்டு, பிரமாணம் பண்ணுமிடத்திற்கு வரவேண்டும். முன் சொல்லியபடி இந்திரன் முதல் துர்க்கைவரையில் அங்க பூசையும் தரும தேவதை பூசையும் சிரசு பத்திரமும் ஹோமங் களும் நடைபெறவேண்டும். தருமதேவதை பூசை செய்கிற இடத்திற் குப் பக்கத்திலே ஒரு அடுப்பு மூட்டிக் குறித்த அளவில் நெய்யையும் நல்லெண்ணெயையும் கொதிக்கவைத்துப் பிராட்டுவிவாகன் அதனைப் பிரார்த்தித்துத் தங்க உழுந்தை அதனுள் போடவேண்டும். அதனைப் பிரமாணம் செய்கிறவன் தன்னிரு விரல்களினுலே எடுக்கவேண்டும். அவ்விரல்களில் ஊறுபடாமலிருந்தால் அவன் சுத்தன். இதில் உண்மை நன்ருகப் புலப்படாவிட்டால் இன்னும் நெய்யையும் எண்ணெ யையும் கூட்டிக் கொதிக்கவைத்து மோதிரத்தை அதனுட்போட்டு எடுக்கச் செய்யவேண்டும். அவன் ஏதேனும் மாற்றுப்பொருள் பூசி வந்திருப்பதாக ஐயம் ஏற்பட்டால், அவனை எட்டு நாள் காவலில் வைத்து அம்மாற்று நீங்கும்படிசெய்து பிறகு பிரமாணம் செய்யும்படி செய்தல்வேண்டும்.

தயாரிப்பு

*பொன்வெள்ளி செம்பு மண்ணிந்த நாலிற்*
*பொருந்திய தொன்றினல் முனிகள்*
*சொன்னது பதினுறங்குல வகலந்*
*தொகுத்தநா லங்குல வாழம்*
*வன்னவாய் வட்ட மாகவோர் சட்டி*
*வகுத்ததனையுந் தங்கத் தாலே*
*உன்னி யோருழுந்துப் பருமனிற் றிரட்டு*
*முருண்டையொன் றினையுஞ்செய் ததையும்,*

பொன் வெள்ளி தாம்பிர மிரும்பிந்த நாலிற்
புகலுள வொன்றில்மோ திரமும்
முன்னமே யிந்த வொன்றையுஞ் செய்து
முடித்துத்தே வில்லில்வைத் திருந்தே
சொன்னவா றிலுமே யிப்பிர மாண
மியற்றென விதித்துவந் தோனும்
அன்னமே! பிராட்டு விவாகனுஞ் சுசியை
யடைந்துகோ யிலின் முனேவந்து, 448

முந்தியே யுரைத்த விஷப்பிராணமு........தோமதனையும்
வளர்த்துச் சிரசுபட்ட யமு..........தையாவாகஞ்
செய்தான்
யந்தமா மடுப்பில் பச்சை....நெ ..ல்லு மியை
யமைத்தங்கி விறகிட்டு வளர்த்து 449

[குறிப்பு—449 ஆவது செய்யுளின் கருத்துச் சுருக்கம்: முன் விஷப்பிரமாண விதியிற் சொல்லியிருக்கின்றபடி இந்திரன் முதல் துர்க்கை வரையில் அங்கபூசையும், மத்தியில் தர்மதேவதை பூசையும், சிரசு பத்திரபூசையும் செய்து நாலுதிக்கிலும் ஓமம் வளர்க்கச் சொல்லி நடுவே தருமதேவதைக்கும் பூசை பண்ணி, இதற்கடுத்தாற்போலே அடுப்புக்கூட்டி அதிலே பச்சை நெல் உமியையும், விறகு மடைத்து நெருப்பு மூட்டவேண்டும்.]

செய்துவைத் திருந்த சட்டியை யடுப்பில்
சேர்த்ததில் நெய்பத்துப் பலமும்
மையினெள் ளின்நெய் யீரைந்து பலமும்
வருவித்து விடவிட் டதனுள்
தையலே! தங்க உருண்டையைப் போட்டுத்
தழலினைச் சமன்பெற வளர்த்து
வெய்யதாய்க் கொதித்து வருகின்ற போது
விரைவினிற் பிராட்டுவி வாகன், 450

பிராட்டு விவாகன் நெய்யினைப் பிரார்த்தித்தல்

சட்டியின் மேற்கே கீழ்த்திசை முகமாய்த்
தனித்துநின் றந்நெயைப் பார்த்தே
இட்டமா யிவண்வா ராய்நீ நல்லெக்
கியமாதி கருமத்தில்

மட்டிலாச் சிரேட்ட னுகவும் பாரில்
வளர்பரி சுத்தனு மாகப்
பட்டநீ யதனு லிவன்கள்ள னுகிற்
சுடுபரி சுத்தனேற் குளிரே. 451

எனமொழிந் தபிமந் திரித்தபின் பச்சை
யிலையினை நெய்யினிற் போட்டுக்
கனமுறச் சடச டென்றுவெ டிக்கிற்
கலங்குசோத் தியன்வந்து நின்று
முனமிகக் கொதிக்கும் நெய்யினைப் பார்த்து
முறையுடன் பணிந்துபின் சுவாமீ!
கனலுரு வாமக் கினிபக வானே! வாழ்சுத்த
னசுத்தனென் றென்னை, 452

மண்ணிலுள் ளோர்க்குக் காட்டுவீ ரென்றே
வழுத்தியச் சிரசுபத் திரத்தை
உண்மையாய்ச் சிரசிற் சேர்த்து நெய்யினுக்கு
ளுலவிய பொன் னுருண் டையினைத்
திண்ணமாய்க் கிழக்கு முகங்கொள நின்றே
சேர்த்தங்குட் டந் தர்ச் சனியினுல்
அண்ணலே யறிவா யெனவெடுத்து வைக்க
வருந்தன்ம தேவதை முனமே. 453

கூறுழுந் தெடுக்குங் கருமத்திற் சற்றே
குறைந்த முதலையுள் கரு..........
...........தெழித் திருபது பலம்விட்டு
.............................................
வேறுமுன் சொன்ன மோதிரத்தை யிட்டு.........தே
...........................................
யாறுமுன் னெடுத்தே வைத்திட வேண்டு
மத்தன் மதேவதை முனமே. 454

பொருள்:—இவ்வாறு உழுந்தெடுக்குங் கருமத்தால் உண்மை காண முடியாமற்போனல், அந்தப் பாத்திரத்தில் நல்லெண்ணெய் இருபதுபலம் நெய்யிருபது பலமாக விட்டுக் காய்ச்சி மோதிரத் தைப்போட்டு எடுக்கச் சொல்லலாம்.

இப்படி யுரைத்த விருவகைக் கரும
மியற்றினோர் களின்விரல் கறுகக்
கொப்புளங் காண இரண்டிலொன் றேனுங்
கூறிய விரலினிற் பொருந்தில்
செப்பலா மசுத்த னென்னவே விரலிற்
சிறிதேனு மிக்குறி யிலையேல்
தப்பிலாச் சுத்த னென்னவே பெரியோர்
தரணியு மறிந்திட வுரைப்பார். 455

பிரமாணம் செய்பவர் மாற்றுச் செய்யாமலிருக்க முன்
எச்சரிக்கை ஏற்பாடு

சுடும்பிர மாணஞ் சுடாதிருந் திடவே
துட்டாமாற் றினைச்செய்து வருவார்
நடுங்கவே யெட்டு நாளைக்கு முனமே
நாட்டியே காவலில் வைத்துக்
கடும்பிர யோகஞ் செய்தந்த மாற்றைக்
கழித்துப்பின் செயச்சொல வேண்டும்
இடும்பைதீர் பெரியோர்க் கிப்பிரமாணம்........
றிப்பின் னுபசரித் தனுப்பே. 456

உழுந்து'மோ திரத்தாற் செயும்பிர மாண
முரைத்தன மிங்ஙனமினிமேல்
அழுந்தியே செய்யுஞ்ச லப்பிர மாண
மதன்வழி வடமொழிப் படிக்கே
கொழுந்தமிழ் மொழியாற் புவியுளோ ரறியக்
கூறுகே னதுதனையே யறிந்தி
கழுந்திற மின்றி வாழ்கின்ற பெரியோர்
கருத்தினிற் பிழைபொருத் தருள்வார். 457

நெய்ப்பிரமாண லட்சணம் முற்றும்.

---

# 21. ஜலப்பிரமாண லட்சணம்

இப் பிரமாணத்திற்குரிய நீர்நிலைகள் ஏழென்றும், அவற்றில் ஏழு வகையான குற்றங்கள் இல்லாமலிருக்க வேண்டுமென்றும் முதல் இரண்டு செய்யுட்கள் கூறுகின்றன. பிறகு இரு தருமத்தூண்கள் அமைக்கும் முறை கூறப்படுகிறது. அவை பிரமாணம் செய்கிறவன் காதளவு உயரமாயிருத்தல் வேண்டும். இவற்றுள் ஒன்று தண்ணீரில் பிரமாணம் செய்கிறவனின் நாபியளவுக்கு நடப்படும். மற்ருென்று கரையிலே ஒரு தூய இடத்தில் நடப்படும். பிறகு நூற்ருறு அங்குல நீளத்தில் ஒரு மூங்கில் வில்லும், ஒன்றரைமுழ நீளத்தில் இரண்டு கமுகு அம்புகளும் தயாரித்துப் பூஜை செய்து வைக்கவேண்டும். பிறகு பல சிறுவர்களை ஓட்டப்பந்தயம் விட்டு, அவர்களில் இருவரைத் தேர்ந் தெடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களுக்கு **வெகிரிகள்** என்று பெயர். வில்விடுகிறவன் ஒருவனுக்கு அம்பி என்று பெயர். நீர் நிலையைச் சுற்றி முன் விஷப்பிரமாணத்தில் கூறியபடி இந்திரன் முதல் துர்க்கை வரையில் தேவ பூஜைகளும், ஓமங்கள், சிரசுபத்திர பூஜை முதலியனவும் செய்து, வருணபூஜையும் பிரார்த்தனையும் செய்து, பிரமாணம் செய்கிறவனை தண்ணீரில் இறங்கி அங்கு நடப்பட்ட யூபத் தைப் பிடித்துக்கொண்டு நிற்கச் செய்யவேண்டும். கரையில் நிறுத் திய யூபத்தருகில் அம்பி நின்று தன் முழுப்பலத்தையும் கொண்டு அம்புகளைச் செலுத்தவேண்டும். அம்பு விழுந்த இடத்தில் ஒரு சிறுவனை நிறுத்திப் பிராட்டுவிவாகன் மூன்று முறை தன் கையைத் தட்ட, பிரமாணம் செய்கிறவன் தண்ணீருள் தான் நின்றவிடத்தில் நீருள் மூழ்கவேண்டும், அதே சமயத்தில் கரையில் யூபத்திலிருந்து அம்பு விழுந்த இடத்தில் நின்ற ஒரு சிறுவன் அம்பு விழுந்த இடத் திற்குச் செல்ல, அங்கே நின்ற சிறுவன் விழுந்த அம்புடன் திரும்பி ஓடிவர வேண்டும். இந்த நேர எல்லை வரையில் தண்ணீரில் முழுகினவன் முதுகு தெரியாமல் மூழ்கினபடியேயும், இடம் விட்டு மாருமலும், மூழ்கிக் கிடந்து பின் எழுவானுனல், அவன் சுத்தன்.

இப்பகுதியின் சுவடி ஓலைகள் பல இடங்களில் ஒடிந்தும் சிதைந் தும் உள்ளன.

ஜலபிரமாணத்துக் குரியநீர்நிலைகள்

*நன்னிலத் திற்சிறு வேகமா யோடுகின்ற நதிநவில் முந்நீர்*
*பன்முகத் தூருணி முதற் பிரிந்து...........தேவைகள் செய்யுங்*
*[குளமிப் பாரைச்*
*சொன்னமிட் டேபெரிசாகச் செயுங் குளங்கள் சுசியாயுவந்*
*[தூ(ரு) மோடை*
*தன்னில்வ்ற் றூத கனவூற்றாய் வருஞ் சலங்கள் சாற்றுமிந்த*
[வேழிலொன்றில், 458

நீர்க்குரிய ஏழு குற்றங்கள்.

*சிறுதீ...........கட் சேர்ந்திருந்த சலங்கள் பாசி*
*மறுப்ப டர்ந்தச லம்நற் காரியங் களுக்கு நீத்தநீர்கள்*
*அறுத்துப்(த்தி)ரைந்தோடும் நீரலை பெருகத் தாட்களை யடரு*
*[மந்தநீர்கள்*
*...........ஞ் சத்தியின் மேற்கண் டிருக்குஞ் சலங்களிங்கு*
[*கழறு* மேழு, 459

தருமத் தூண்களும் வில்லும் அம்பும் தயாரித்தல்.

*குற்றமு மில்லாச் சலத்திலட் டைகளா*
*வதுமீனின் குலங்க ளேனும்*
*உற்றவி டங்களிற் கரையிலத் திமரத்*
*தருகினிற்போ யுற்றுப் பார்த்து*
*சற்றுமி ணேயறும் யூபத் தம்பம்வே ...........ரு...........*
*மந்திரத்தைச் சாற்றிக் கொண்டு*
*குற்றமி லாதுயர்ந் திருக்குங்கொம் பிரண்டை*
*நிலத்தில்விழத் தறித்துக் கொண்டு,* 460

*இங்குரைத் தசலப் பிரமாணம் புரிவோன்*
*காதளவி லிருதுண் டாக்கித்*
*தங்குதுண் டமிரண் டினையுந் தலைதூருஞ்*
*சரியாகத் திரட்டி வைக்கப்*

பங்கமி லாப்பெய ரதற்குத் தருமத்து
　　　ணெனமுனிவர் பகர்ந்தார் மற்றும்
அங்குல மோர்நூற் றுறில் வேணுமரத்
　　　தாலொருவில் அமைக்க வேண்டும். 461

வெகிரிகளைத் தேர்ந்தெடுத்தல்

அம்பி ரண்டு கழுகா லொன்றரை முழநீ
　　　ளத்தினில் செய்தமைக்க வேண்டும்
கொம்பை யுறுமிளை யோரிற்றெ கையாகச்
　　　சிலரைவி ரைந்தோட விட்டே
தம்பில மாய்ஜம்ப தெட்டங்கோடு முன்னே
　　　தனித்துமுந் தியோடும் பேரில்
கும்பமு லைமா தரசி!சம நோட்டங்
　　　கொண்டவ ரிலிரண்டு பேரை, 462

தெரிந்தெடுக் கவவர்களின் பேர்வெகிரிகள்நாற்
　　　குலத்தத னுட்சினத் துவில்லிற்
பரிந்துநன் றுய்ப்பழ கினரிலொ ருவனிவன்
　　　......................அம்பியென்றே
விரும்பியு ரைதரு மத்தாண் வில்லையம்பை
　　　வேதியம்பி.........................

................................................ 463

　　　.......................................................

செய்யுள் 463 முதல் 468 வரை சிதைந்துள்ள பாடல்களின் கருத்து பின்வருமாறு :

வில்லிலே வெகுநாள் பழகி அம்பு நன்றாய் எய்யத்தெரிந்த நான்கு வருணத்துள் ஒன்றினைச் சார்ந்தவனுக்கு 'அம்பி' என்று பெயர். அவனை அன்று உபவாசமாக இருக்கச்செய்து, தானம் பண்ணி வெள்ளை வஸ்திரங் கட்டிக்கொண்டு வந்து நிற்கச் சொல்லவேண்டும். அந்த அம்பியும், பிராட்விவாகனும், பிரமாணம் செய்கிறவனும், எதிரியும், அன்று உபவாசமிருந்து தானம் பண்ணி வெள்ளையாடை தரித்திருத்தல் வேண்டும். பிரமாணம் பண்ணுகிற இடம் சமுத்திரம், ஆறு, குளமில்லாமல் வேறு இடமாயிருக்குமானால் பிராட்விவாகன் அந்த நீரைச் சுற்றிக் கரையிலே முறைப்படி இந்திரன் முதல் துர்க்கையீருகப் பூசைபண்ணி, சிரசுபட்டயமும் எழுதி, அதற்கும் பூசை பண்ணி.

நாலு திக்குக்களிலும் ஓமம் பண்ணச்சொல்ல வேண்டும். வில்லுக்கும் அம்புக்கும் பூசை செய்யவேண்டும். பூசை பண்ணுமிடம், மேடு பள்ளம், புல்புதர், செடி, மரம், கற்கள் இவை இல்லாமலிருக்கவேண்டும். ஒரு தருமத்தூணைப் பூசைபண்ணி நாபியளவு ஜலத்திலே நாட்ட வேண்டும். நாட்டமுடியாவிட்டால் அதனை அசையாமல் ஒருவன் பிடித்துக்கொண்டு நிற்கச் செய்யவேண்டும். அதற்கு எதிரிலே கரையில் ஒரு தூணை நாட்டி அம்பியை அதன் அருகில் நிறுத்தி, ஒரு அம்பை எய்யச்சொல்ல வேண்டும். அந்த அம்பு விழுந்த இடத்திலிருந்து ஜலத்தை வருணனாகப் பாவித்துப் பூக்களினாலே பூசை செய்ய வேண்டும்.

*இனித்திருக் கும்பொருள் கள்பால் நெய்யால்*
*வருணனைப் பூசனை யியற்றி*
*தனித்துவந் தசையா மல்நின் றி டும்பிர மாணியுங்*
*கேட்கச் சலத்தைப் பார்த்தன்*
*பினிற்பெரி யனுய்வா ராய், சலமே!நீ*
*பிராணிக ளுடையபி ராணன் ;*
*முனிற் சிருட்டி யிலேயும் முதற்சிருட்டிப்*
*பட்டவ னீசுத்திக் கெல்லாம்,* 469

*நீயே கார ண னனபடியின*
*லின்னனை நிசத்தன் றப்பி*
*வாயே பேசிடு மசுத்தனென் னவேயெங்க*
*ணெஞ்சில் வரப்பண் ணென் று*
*போயே நின் றபி மந்தி ரித்தபின்பு*
*பிரமா ணிபுகல வேண்டும் ;*
*சேயே யனை இவர் கள்முன்னம் வாரீர்*
*வருணனே ! சத்தியத்தாற் காப்பாய்.* 470

*என் றுசொ லித்தொ ழுதுகொண்டு*
*சிரசு பத்திரத் தினையேஎடுத் துக்கட்டி*
*முன்சலத் தில்நாட் டியிருக் கின்ற தூணரு*
*கினிற்போய்முகங் கீழ்த் திக்காய்*
*நின் றுகொளச்சொலித் திரும்பிப் பிராட்டுவிவா*
*கன்கரை யில்நிற்குந் தூண்பால்*
*சென் றுநின் று கொண்டி ரண்டு தரங்கரத்*
*தைச்செவி கேட்கத் தட்டிப் பின்பு,* 471

மூன்றாந் தரங்கரத் தைத்தட்டு கின்ற
போதுபிர மாணியின் முன்பு
தான்று ரகம்பெற வேசலத் தில்நின்ற
தூண்பிடித் துத்தனங் கங்கள்
தோன்று மற்சலத் தினுள்ளே முங்கி யிடக்
கரையில் நின்ற தூண்பால்
நீன்றதே............மொன்றையே இங்கிதனையம்பு
வீழ்ந்தவி டத்தினி லேநின்ற, 472

ஏகியி டத்தோ டுநிற்க வங்கு...........
போகிவந்து தூண்பா லாகிநிற்க இது வரையில் மூழ்கு பிர
[மாணி பிரியுற மதற்சர...........
.................ரற் கொஞ்சக் கள்ளனெனத் தன் காது
[மூக்கி தல்லால்
தேகம தில்பின் புறத்திலுறுப் பெனி
[னுந் தெரிந்தாலுஞ் செலத்தில் மூழ்கி 473

கிடந்தவி டத்தினைக் கடந்துவே றிடங்க
ளானதிற் போகியெ ழுந்தாலும்
அடர்ந்து செயும் பெரிய...........அங்க
மதிலேதுந் தெரி...........தலையாகில்
இடங்கொள றிவோர்சொ லுவார்சுத்த னென்றே
யிங்குச் சலவிதி யைச் சொன்னோம்
தடம்புவி யெலாம றியத்துலே விதியை
யினிமேல் சாற்று வோமே. 474

473—4 செய்யுட்களின் பொருள்:—பிரமாணம் செய்கிறவன் நீரினுள் மூழ்கியிருக்க, கரையிலுள்ள தூணருகில் நிற்கும் வெகிரியை முன் அம்பு விழுந்த இடம் வரையிலும் ஓடச்சொல்லி, அந்த இடத்திலே நிற்கவைத்த வெகிரியைத் தூணிடத்திற்கு ஓடிவரச் செய்யவேண்டும். இந்நேரத்தில் நீரில் முழுகியவன் இடம்விட்டு மாறி வேறிடத்தில் எழுந்தாலும், அவன் முதுகுப்புறம் கண்ணுக்குக் காணப்பட்டாலும் அசுத்தன்; அன்றேல், சுத்தன்.

சலப்பிரமாண லட்சணம் முற்றும்.

---

# 22. துலைப் பிரமாண லட்சணம்

துலை என்பது தராசு. இப்பிரமாணத்திற்கு ஏற்ற ஓரிடம் முதலில் தயாரிக்கப்படவேண்டும். அதற்குத் தடசாலை என்று பெயர். அதன் விவரத்தை 475—6 செய்யுட்களில் கூறுகிறார். பிறகு யூபஸ்தம்பங் கள் நாட்டப்பெறும் விதம் சொல்லப்படுகிறது. எட்டுத் திக்குப் பாலகர்களையும் வந்தித்து, உரிய மந்திரத்தைச் சொல்லி ஓர் அத்தி மரத்தை வெட்டி ஆறுமுழ நீளத்தில் இரண்டு துண்டுகள் செய்து, ஒன்றற்கொன்று நாலுமுழ தூரத்தில் அவற்றை நடவேண்டும். இவையே துலைக்கால்கள் போலும். மேலே விட்டம் கட்டும் அளவு முதலியன செய்யுட்கள் 482—3இல் கூறப்படுகின்றன. விட்டத்தின் நடுவிலிருந்து கயிறுகள் கட்டித் தொங்கவிட வேண்டும். கயிற்றில் பலகை கட்டும் விதம் செய். 484இல் கூறப்படுகிறது.

பிறகு துலைக்கு அபிஷேகம் அர்ச்சனையாதிகள் செய்வித்துப் பிராட்டுவிவாகன் துலைக்கு மேற்கே கிழக்குமுகமாக நின்றுகொண்டு, அத்துலையில் அஷ்டதிக் பாலகர்களையும் அவரவர்களுக்குரிய நிறங்க ளின் பொருள்களையும் வைத்து ஆவாகனம் செய்து, பூஜைகள் இயற்ற வேண்டும். பிறகு வேறு 24 தெய்வங்களுக்கும் அங்குப் பூஜை புரிய வேண்டும். அதன்மேல் விஷபூஜையில் சொன்னபடி இந்திரன் முதல் துர்க்கை ஈறாக உள்ள தெய்வங்களுக்குப் பூஜையும், ஓமங்களும், சிரசு பட்டயப் பூஜையும் நிகழ்த்தவேண்டும்.

தராசில் இரு கட்சிக்காரர்களையும் வைத்து நிறுப்பதும், குற்றவாளி என்று கருதப்படுபவரை மட்டும் வைத்து நிறுப்பதும் உண்டு. (இப் பகுதி ஏட்டில் மிகவும் சிதைந்து விட்டதால் பொருள் காண்பது இயலாததாகிறது. 500—509 வரையில் முற்றிலும் சிதைந்துபோன பகுதிக்கு ஒருவாறு பொருள் கண்டு குறிக்கப்பட்டுள்ளது.)

பிராட்டுவிவாகன் துலைக்குப் பிரார்த்தனை செய்து, சத்தியம் செய் கிறவனை மேற்குப்புறத் தட்டில் ஏறச் செய்து, எதிர்த்தட்டில் எதிரி யையோ அல்லது முன் ஏறியிருப்பவன் எடைக்குத் தக்க மணலையோ, கல்லையோ மற்றொரு தட்டில் ஏற்றவேண்டும். ஐந்து விநாடிகள் அவன் அத்தட்டில் இருக்கவேண்டும். (சா என்னும் ஒலியைப் பத்து முறை சொல்லும் நேரம் பிராணன்; ஆறு பிராணன் கொண்டது ஒரு விநாடி). பிரமாணம் செய்பவன் நாக்கில் சுத்தமான நீரை விட வேண்டும். அந்நீர் கீழ்நாக்குக்கு வரும்போது முன் நிறுத்த நிலையி லிருந்து, அவன் இருந்த தட்டு உயருமானால் அவன் சுத்தன்; ஒத்திருந் தால் அவன் பொய்யும் மெய்யும் கூடியவன்; தாழ்ந்தால் முழுப் பொய்யன்.

தடசாலை நியமனம்

*மன்னனோர் தெய்வ..................தாயதி*
*கைய.........ம......த......அங்கியெள்ளு மதுனுடனே,*
*[யெவை*
*யிங்குரை யஞ்சுமென்று மிருக்கவும் பங்கமாகிய நால்பல*
*க......நீதிங்கு மானிடச் சாதியில் நீசனும்.* 475

*ஏதும் மூன்றுயி ரும்முட்பு காமலும்*
*பாது காக்க வொருபரி சாரகன்*
*போது முற்றிலும் பூட்டித் திறவென*
*வாதரித்துவைத் தானச் சாலை.........யை.* 476

**475-6 செய்யுட்களின் கருத்து** :—அரசன் அகலமாகவும் உயரமாகவும் ஒரு சாலைகட்டி அதற்குப் பூட்டும் திறப்பும் பண்ணி அதனுள் நாய், நீசன் இவர்கள் போகாமல் செய்து, அந்தச் சாலைக்குள்ளே மிருத்திகை, சலம், நெருப்பு, எள்ளு, கோதுமை, இந்த ஐந்தையும் எந்நேரமும் வைத்துக்கொண்டிருக்கச் சொல்லி, ஒரு பரிசாரகனையும் நியமித்து வைக்கவேண்டும். இது தடசாலை எனப்படும்.]

யூபத்தம்பம் தயாரித்தல்

*அத்தி யென்னு மரத்தின ருகிற்போய்ப்*
*பத்தி யாய்த்திக்குப் பாலரை வந்தித்துச்*
*சுத்தி யூபத்தம் பத்தைச்சொ லிவெட்டுஞ்*
*சித்தியாமந்தி ரத்தினைச் செப்பியே,* 477

*அந்த அத்தி மரத்தினை யறவெட்டி*
*நிந்தை யற்ற வறுமுழ நீளத்தில்*
*சிந்தை வைத்திரு துண்டுஞ்செவ் வாகியே*
*வந்த கோப்பினில் நாலுமு மும்வைத்து,* 478

*துண்டி ரண்டுசெ யமுனஞ் சொல்லியே*
*கண்ட வாறு முழத்துண்டைக் கா......து*
*கொண்டு நாட்டக் குழிக்குவிட் டோர்பங்கையி*
*ரண்டு பங்கு மரஞ்சது ரம்பெற,* 479

செய்ய வேண்டும் ; தலைப்புறஞ் செய்தபின்
தொய்வில் நாலு முழத்துணி யிரண்டையும்
தைய லாயதை நாற்சது ரஞ்செய்து
வையி தன்பெயர் விட்டம்வைத் தானபின், 480

துலைக்கால்கள் நடுதல்

சாலை......மத்தியில் நான்முழத் தைவைத்துக்
காலை மேற்கொரு காலுங் கிழக்கொன் றுஞ்
ஞால மீதில்.........கு ........நட்டு...........
ஏல வேசெய்த விட்ட மிணையிலே, 481

ஒன்றைப் பார்த்ததி னுற்கட்டி யுள்ளள(வு)
என்றைக் கும்மையி ரண்டுவி ரற்கிடை
சென்றப் பாலுய ரத்தினிற் சேரத்தோ.........
நின்ற கால்தனில் விட்டங்க ளின்னெறி, 482

கட்டி னவிட்டங் களின டுவிலே
தொட்டுப் பாசத்தை விட்டித் தொ ....
.........டய்ந்தி...........ம் பாசத்தை
விட்டு வைத்திடப் பூமியை நோக்கவே. 483

இச் செய்யுளில் விட்டத்தில் கயிறுகள் கட்டும்விதம் சொல்லப் படுகிறது.

தொங்கவி ட்டபிடி.........றுலைதனை
தங்கச் சொத்துத் தவளைக் குறங்கினிற்
தங்க மற்றிரு தட்டைப்படுத் தபின்
அங்குச்சிக்குகின் றதென்னவெண் ணெயிடே. 484

துலைப்பூசை

இத்த டத்தி..................யிழுத்தறிங்
தொத்தி ருப்பதை.........மோர்ந்திட்டு
சுத்த மாகச் சலத்தைத் தொலைநிலை
வைத்த விட்டத்தில் வார்த்துக்க ழுவியே, 485

விட்டங்காலி விடைக்கண்கள் மென்மையாய்க்
கட்டி மாலைசந் தங்களுஞ் சார்த்தியும்
இட்ட மாமலங் காரங்கள் ஏற்றிப்பின்
தட்டியேதடந் தன்னையும் பூசியே. 486

அன்று தோன்றும் பிரணவ மாதியாய்
மன்றி லேதெய்வ நாமங்கள் மத்தியாய்
பின்பு சேர்ந்துணர் நமாந்தம்பெ றச்சொலி
நின்று செய்மந்தி ரத்தின் நெறியிதே. 487

நீதி யாந்தட பூசை நிகழ்த்திட
வேதி யானபி ராட்டுவி வாகனப்
போதி லேதடத் தின்மேற் புறத்தினில்
ஆதித் தன்றிசை பார்த்துநின் றன்பினல், 488

துலையில் திக்குப்பாலர்களின் ஆவாகனம்

தெ.........திசைநிலை காலிற்றெய் வங்களில்
இந்தி ரன்னிற மஞ்சளென் றெண்ணியும்
மந்த வக்கினி யைத்தங்க மாகவும்
வந்தி டுமேயமன் வன்னங் கறுப்புமாய், 489

நிருதி யைக்கறுப் பனென்றங்கு நேமித்தும்
வருண னைப்பளிங் கின்வண்ண மாகவும்
பொருவில் வாயுவைப் புகைநிற மாகவும்
தருகு பேரனைத் தங்கநி றமென்றும், 490

செம்மை யென்றுமவ் வீசானன் றேகத்தைத்
தம்மி லேமனத் திற்பிரித் துக்கொண்டே
முறை லோக பாலர்க ளெட்டையும்
அம்மு றுச்சமுதலடி மட்டிலும்.............. 491

பின்பு விட்டத்தி.........திலைமுற்றிலும்
நன்கெ கன்னர பின்பந்தனர் வாயுவன்னனல் (?)
........................................................................
.........மாணிபி ராணரே. 492

தராசி வீசர்பின் பேர்சொலும் சீவரை
இராம லிந்த மறுத்தெழு பேரையும்
பராமு கமின்றிப் பூசைகள் பண்ணிப்பின்
தராசி னிற்கத் தகும்வட காலிலே. 493

மேல்மு தற்றெட்டு மேதினி மட்டிலும்
மால்த விர்ந்துத ரணதுரு வன்பினம் (?)
பால்நி றங்கொளுஞ் சோமன்பகர்ப்பை
ஆலம் நேர்விழி யாய்! அவ் வனிலனை, 494

அனல வன்பிரத்தி யூச னுனவன்தன்
மனமகிழ் பிர பாசன் வசுக்களிவ்
வினவெட் டுத்தெய்வந் தமையி ருத்திப்பின்
முனம்வைத் ததுலை முற்றினு மன்பினல், 495

தன்ம தேவதை தன்னையும் பூசிக்க
வின்ன னசொல்லி ருபத்து நால்தெய்வ
முன்னி முன்சொல் முறைமா திரத்தினல்
பின்ன மாகத் தனித்தனி பேணியே, 496

அங்கபூசை, ஓமம், சிரசுபத்திர பூசை

செஞ்சந் தம்செம்ம லர்செம்மை யட்சதை
அஞ்சி ரீதுகொண் டவர்க்க ளுதியாய்
மிஞ்ச வன்னங்கள் வெற்றிலை பாக்குவைத்(து)
உஞ்சத் ததிற்செய் யென்னச்சொன் னரரோ. 497

இப்ப டித்தட பூசையி யற்றிப்பின்
செப்ப மாய்விஷந் தின்கையிற் சொன்முறை
ஒப்பி லாதங்க பூசையு மோமமும்
தப்பி லாச்சிர பத்திரந் தன்னிலே, 498

பூசை செய்து புனிதத் துடன்வரும்
ஏச லோரைத் தராசிரு தட்டிலும்
நேச மாய் வைக்கில் நேரற் றுயர்ந்தவன்
ஆசி லாவிட த்திற்கல் லமிழ்த்தியே, 499

இருவர் தன்கன முஞ்சரி யென்றுசெய்
தரு மெதிரி யிலாதங்கு.....................
.............................................வப்பது
கருதியே யொரு கல்லே மணலேயே. 500

500-ஆவது பாட்டிலிருந்து 509-ஆவது பாட்டுவரை ஏடுகள் சிதைந்ததன் காரணமாகக் கிடைக்கப்பெறவில்லை. அவற்றின் கருத்தின் சுருக்கம் வருமாறு :—

பிரமாணம் பண்ணுகிறவர் ஒருவரேயானால், அவரை ஒரு தட்டிலும், அவர் எடைக்குச் சமானமான கல்லேயோ, அல்லது ஒரு பெட்டியில் மணலேயோ வைத்து எடையைச் சரிபார்க்கவேண்டும். சரி பார்த்தபின் அவரையும் எடைப்பொருளேயும் இறக்கிவிட்டுப் பஞ்ச வர்ணப் பொடிகளாலே தட்டுக்களில் கோலமிட்டு, பிராட்டுவிவாகன் தராசுக்கு மேற்கே கிழக்கு முகமாக நின்றுகொண்டு அதனைப் பிரார்த்திக்கவேண்டும். பிறகு, பிரமாணம் பண்ணுகிறவன் கையிலே முன்பு பூசைபண்ணி வைத்திருந்த சிரசுபத்திரத்தைக் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொல்லி அவனைப் பின்வருமாறு பிரார்த்தனை செய்யச் சொல்லவேண்டும்.

பிராட்டுவிவாகன் தராசிற்குப் பிரார்த்தனை செய்தல்

நீகல் யாணிசந் தேகம் நிசம்வரத்
தேகங் கொண்டவ ளாருஞ் செகத்திப்போ
தேக மாகுமென் பேரி லிருக்கின்ற
சோக மாடுஞ்சந் தேகந் துடைப்பையே. 510

இக்க ருமத்தினி லென்னிடத் தேகுற்றம்
தக்க தாமெனிற் ருழ்வுறக் கொண்டுபோ
மிக்க சுத்தமெ னில்மேற்கொண் டோடுவாய்
திக்க றியவெ னச்செப்பி னபின்பு, 511

தட்டில் ஏற்றி வைக்கிற நேரத்தின் அளவும் சோதனையும்.

செப்பும் சத்தியம் செய்பவன் தன்னையே
மெய்ப்புற வங்கு மேற்குறுந் தட்டிலே
ஒப்பி யேற்றிஎ திரியையு மற்றொரு
தப்பி லாத்தட்டிலேற்றிச் சபையார்முன், 512

*சாவெ னுங்குரு வக்கரந் தன்னையே*
*பூவிற் பத்துத் தரஞ்சொல் பொழுதிற்கு*
*மேவும் பேர்பிராணனென் றென்ன விள்ளுவார்*
*கூவும் பிராணனோ ராறு கொண்டாலதை,* 513

*விள்ளு வார்கள் வினடியொன் றென்னவே*
*வள்ளல் தன்னை.........வினடி யஞ்சா மட்டும்*
*எள்ள வின்றியத் தட்டி விருத்தியங்*
*குள்ள நீருயர் நாக்கி லொழுக்கியே.* 514

*..........மிருக்கின்ற நாக்கி லெவர் பாழிலே*
[*விழியாததைப் பார்க்கை*
*யிற் ருழ்வுக ளென் றுயர்ந்திடிற் சுத்தனென்ன உ-*
*ரைத்திட லாகுமே.* 515

*எற்றும் போதினைப் போலெத் திருக்குமே*
*..................ற்றலாகும்*
*.........மாய்வரு குற்றமுளளென*
*வெற்றி மைசெய்பி ராட்டுவி வாகனே.* 516

சிதைந்துள்ள செய்யுட்கள் 515, 516-இன் கருத்து பின் வருமாறு :—

அவ்வாறு மேல்நாக்கில் விட்ட சலம் கீழ்நாக்கில் வரப் பார்க்க வேண்டும். இப்படிப் பார்க்கும்போது, பிரமாணம் செய்கிறவனுடைய தட்டு உயர்ந்தால் அவன் சுத்தன்; ஒத்திருந்தால் சிறிதளவு சுத்தன். சிறிதளவு அசுத்தன்; தாழ்ந்தால் அசுத்தன். சிறிதளவு அசுத்தன் என்பது அவன் அறியாமற் செய்த குற்றம். அசுத்தன் என்பது அறிந்து செய்த குற்றம்.

முழுப் பழிகாரனை அறியும் வழி

*காசி லாதமாக் கள்காண் பழியெனில்*
*தூசு போக்குமி ரும்பேனுந் துண்டித்துத்*
*தேசங் காண்...... சத்தியஞ் செய்தவன்*
*மோசஞ் செய்த முழுப்பழி காரனே,* 517

*அத்த ராசுறு மவ்விரு பேரையும்*
*இத்த கைமை யறிந்தங் கிறக்கியே*
*முத்த ராகவங் கேவந்து மொய்த்தவர்க்*
*குத்த னங்க ளளித்து விடை கொடே.* 518

தடபூசை மூன்று நேரத்தும் செய்வது

*சாலே காத்து வரும்பரி சாரகன்*
*காலே யுச்சி கருதியு மந்தியுங்*
*கோல மாந்தட பூசையுங் கூறிய*
*பாலிலே யங்க பூசையும் பண்பினுல்,* 519

*நிற்ற லுஞ்செய்ய வென்றங்கு நேமித்துச்*
*சற்றும் குற்றம்வா ராமல் விசாரிக்கப்*
*பெற்ற மன்னன் புகழின் பெருமிதம்*
*சொற்க டங்குவ தில்லேசொல் வோருக்கே.* 520

*மெய்த்து லேப்பிர மாண விதியிங்கு*
*வைத்து ரைத்தன மேல்மகிழ் வாகவே*
*எய்த்தி டாக்கோச பானத் தியற்கையை*
*மொய்த்த செந்தமி ழாலுமொ ழிகுவாம்.* 521

துலேப்பிரமாண லட்சணம் முற்றும்.

---

## 23. கோசப் பிரமாண லட்சணம்

தெய்வங்களுக்கு அபிஷேகம் செய்த ஜலத்திற்குக் கோசம் என்று பெயர். கெட்ட நடத்தையுடையவர்களான கட்குடியன், தூர்த்தன், பாவி, தருமத்தை விட்டவன், செய்ந்நன்றி மறந்தவன், கொடிய நோயுள்ளவன், பழிபட நடப்பவன், நெற்றியில் ஒன்றும் அணியாதவன், தெய்வமில்லை யென்போன், பிரஷ்டன் ஆகிய பதின் மருக்கும் இப் பிரமாணம் இல்லை.

இவர்களல்லாதவர்களுக்கு அவரவர் வணங்கும் தெய்வத்தின் அபிஷேக தீர்த்தம் கொடுக்கப்பட வேண்டும். இன்ன தெய்வம் என்பது நிச்சயிக்க முடியாதவிடத்தில், பிராமணனால் சூரிய சக்கரத் தைத் தரையில் எழுதி அதைப் பூசித்து, அபிஷேக நீரைக் கொடுக்க வேண்டும். பிற குலத்தவரில் கள்ளன், ஆயுதங்கொண்டு பிழைப் பவன், சேவகன் இவர்களுக்குத் துர்க்கையின் சூலத்தில் அபிஷேகம் செய்த தீர்த்தம் கொடுக்கப்படல் வேண்டும். பிற தெய்வங்கள் ஆகா.

தூய ஓர் இடத்தில் சாணத்தால் வட்டமாக மெழுகி, பிரமாணம் செய்கிறவனைக் கிழக்கு முகமாக உட்கார வைத்துப் பிராட்டு விவாகன் முன் பிரமாணங்களில் கூறியபடி பூஜைகளை முடித்து, அவனுக்குச் சிரசு பட்டத்தைக் கட்டி, அபிஷேக தீர்த்தத்தை வருவித்து, அதை மந்திரித்துப் பிரார்த்தனையும் செலுத்தி (செ. 530), மூன்று முறை கையில் அபிஷேக தீர்த்தத்தை வார்த்துப் பருகச் செய்ய வேண்டும். இது சூரியோதயத்திலிருந்து பத்து நாழிகைக்குள் நடைபெறவேண்டும்.

இவ்வாறு நடந்தபின் 3, 5, 12, 14 நாட்களுக்குள்ளே பிரமா ணம் செய்தவனுக்கு இராஜீய தெய்வீகங்களால் ஊறு தோன்றுமானால் அவன் அசுத்தன்; அப்படி யில்லாவிட்டால் சுத்தன் என்று அறியப் படுவான். இப்பிரமாணம் மிகச் சிறிய குற்றங்களுக்கே கூறப் பட்டுள்ளது.

கோசம் என்பதன் பொருளும் அதற்கு உரியரல்லாதவரும்

*தெய்வங் கட்கபிடே கம்பண்ணி வந்த*
*சீர்த்தபேர் கோசமென் றுரைப்பார்*
*வெய்யமத் தியபா னஞ்செய்வோன் றூர்த்தன்*
*விளங்குதே விலையெனும் வீணன்*

வையத்தில் மிகும்பா தகஞ் செய்வோன் றனக்கு
வருங்குல தன்மத்தை யிகந்தோன்
உய்தற்குச் செய்ந்நன் றியு மறந்தோ
னுடலில்அண் ணகடொகை (?) யுயர்ந்தோர், 522

பழித்திட நடப்போன் ................
பரிந்துநெற் றியிலொன் று மணியான்
கழித்திடு மிவர்கள் போக்கும்...........
...............பானமதை விடுவோன்
வழித்திற மறிந்தோர் விதித்திட லாகா
மற்றய ரனைய வருக்குமீ
டழித்தபத் திவைக்குந் தெய்வங்கட் கபிடே
கஞ்செய்த தீர்த்தத்தை யீயே. 523

வேதியன் முதலியோர்க்கு உரிய தீர்த்தம்

சோத்தியன் வேதிய னுயவ னன்பாய்த்தீத்
தொழுந்தெய்வ முந்தெரிந் திலேயேல்
மூத்ததே விலின்முன் பானுசக் கரத்தை
முறைப்படி பூமியிற் கீறிக்
காத்திட வதனிற் பாவனே பூசை
காணச்செய் தங்க பிடேக
தீர்த்தமே யந்த வேதனுக் கென்று
திகழ்வட மொழியினி லுரைத்தார். 524

இப்பிர மாணஞ் செயவந்தோன் வேத
னின்றிமற் றக்குல னுகில்
ஒப்பியே யவனன் பாய்த்தொழுந் தெய்வ
மோர்ந்திட வில்லே யென்ரு லும்
செப்பமா யவன்றெய் வங்களே தெரியத்
திருடனென் றேவந்த வனுக்கும்
தப்பிலா தென்று வாயுதத் தாலும்
சேவகஞ் செய்துண்ப வனுக்கும், 525

இந்த மூவருக்குந் துர்க்கையே யாதி
யெழிலுக்கிர தேவதை களுக்கே
அந்தமா யபிடே கஞ்செய்த தீர்த்த
மதுதுர்க்கை யுமெண்ணில ஞனல்
சிந்தையிற் பாவித் தபிடேகஞ் செய்த
சலமவள் சூலத்தி லபிடே
கந்தவ ரூமற் செய்திடுஞ் சலத்தைக்
கரத்திலே யவர்க்களுக் களிப்பாய். 526

துற்கையை நீக்கி வேறுதெய் வமதைப்
பாவித்துத் தோய்ந்திடுஞ் சலமும்
வெற்றிகொள்வாராயு தங்களுங் குழித்து
வீழ்ந்திடுஞ் சலங்களு மாகா ;
பெற்றியா மொருகோ யிலின்முன்பு சதுரம்
பெறவிலா சங்கொள மெழுகிப்
பொற்பற.........முன்.........விஷவிதி தனிலே
புகல்முறை பிராட்டுவி வாகன், 527

அங்கதேவதா பூஜைகள் முதலியன

அங்கதே வதையைப் பூசித்............
ளபவிதிப்படி........சாலியே
பொங்கமாய் நடுவிற் றன்மதே வதையைப்
பூசித்து சிரசுபட் டயத்தை
அங்கையாற் பூசை யியற்றியே யதனே
யும்வைத்துத் தன்மதே வதைமுன்
தங்கு மேல் புறத்தோர் மண்டலமெழுகிச்
சத்தியஞ் செயவந்த வனுக்கு, 528

கோசம் கொடுத்தல்

தக்கதே வதையின் றீர்த்தத்தை யேபூ
சாரிகொண்டு வந்ததில் வைக்க
வைக்குமண் டலத்தின் மேல்புறந் தனிலோர்
மண்டல மெழுகியே யதனில்

மிக்கசு சியைச்சார்ந் துநின்றசோத் தியனை
நிறுத்திமேற் சிரசுபத் திரத்தை
அக்கணஞ் சிரசிற் கட்டியே தீர்த்த
மதனையே பிராட்டு விவாகன், 529

பிரார்த்தனை

தன்கையிற் கொடுவா ராய்சல மேநீ
தரணியிற் பிராணிகள் பிராணன்
முன்பயன் சிருட்டி யினில்முதற் சிருட்டிக்
கப்படு மவனென்று மொழிந்து
தென்சுகிக் கேநீ காரணனுன தே,வின்னு
னசுத்தன் சுத்தனே யென்றே
என்பிறர்க் கேதோன் றிடச்செய்வா யென்றே
இயம்பிமந் திரித்ததன் பின்பு, 530

கோசம் பருகல்

சோத்திய னந்தத் தீர்த்தத்தைப் பார்த்துத்
தொடங்கிவ ருணபக வானே
காத்திடு மெனைநீர் சத்தியத் தாலே
காத்திடு மெனக்கழ றினபின்
மூத்த சூரியனைப் பார்த்துணென் றங்கே
மொழிந்தவன் கையில்மூன் றுதரம்
பார்த்தங்கு மூன்று சிறங்கைதீர்த் தம்விடப்
பயந்தவ னுண்டிட வேண்டும். 531

சோதனையும் முடியும்

உதித்துமுற் பத்து நாழிகைக் குள்ளே
யுண்டசோத் தியற்கன்று முதலாய்
விதித்திடுந் தெய்வ தங்களி னலே
விளைதுன்ப மூன்று நாளைக்குட்
குதித்திட வஞ்சு நாளைக்குள்...........
ஏழாம் நாளைக்...........குள்மனமே
கொதித்திட வேபன் னிரண்டெனும் நாளைக்
குட்பதி னலெனு நாளை, 532

இப்படி யுரைத்த நாட்களிற் குறைய
வியம்பின நாட்களுட் கண்டதைச்
செப்பலா மிருந்த............வசுத்தனென்றேயத்
தினங்களே மிகிற் கொஞ்ச வசுத்தன்
தப்பிலா தொன்ப தஞ்சுநாளைக்குட்
சார்கினு மவன்கொஞ்ச வசுத்தன் ;
ஒப்பிலாப் பிரமா ணங்களுக் கெல்லா
முரைக்கு நாளிதற்குமே லிலையே. 533

மிகவுமே சிறுத்த கருமமேற் கோசம்
விளம்பியே செயச்சொல வேண்டும்
செகமறிந் திடவிந் நாட்களுட் குற்றம்
சேரவே யில்லையென் றாலும்
புகலுமிந் நாட்கு மேலைநாட் குற்றம்
பொருந்தினுஞ் சுத்தனென் றுரைப்பீர்
மகிழ்ந்திதன்மே லரிசியின் விதியை
யறைகுவேன் தமிழ் மொழியதனல். 534

கோசப் பிரமாண லட்சணம் முற்றும்.

# 24. அரிசிப் பிரமாண லட்சணம்

செய்யுள் 535 முதல் 541 முடிய அரிசிப்பிரமாணம் கூறப்படுகிறது. ஆனுல் ஏட்டில் செய்யுள்கள் 535, 536 மட்டுமே காணக் கிடைக்கின்றன. இந்தப் பகுதியின் பொருள் சுருக்கமாகக் கீழே வரையப்பட்டுள்ளது.

இந்தப் பிரமாணம் செய்கிற அன்றைக்கு முதல்நாளே நெல்லைக் குற்றி முனைமுறியாத வெள்ளையரிசியாக அரைப்படி அரிசி எடுத்து ஒரு தெய்வத்துக்கு அபிஷேகம் பண்ணின நீரில் ஒரு புதிய மண் பாத்திரத்தில் நனைத்து வைக்கவேண்டும். பிரமாணம் செய்கிறவன் முதல் நாள் உபவாசமிருந்து மறுநாள் நீராடித் தானம் செய்து ஈரவேட்டியுடனே குறித்த விடத்தில் நிற்க வேண்டும். பிராட்டுவிவாகன் உபவாசமிருக்கவேண்டா. ஆனுல் அவனும் சுசியுடன் வரவேண்டும். முன் பிரமாணங்களில்போல் பூசைகள் ஓமங்கள் முடிந்த பிறகு ஒரு மண்டலத்திலே குற்றவாளியைக் கிழக்கு முகமாக நிற்கச்செய்து அவன் கையிலே அரசிலையை வைத்து, நனைந்த அரிசியை மூன்றுதரம் எடுத்து அதில் வைக்கவேண்டும். ஒவ்வொரு தடவையும் அவன் அவ்வரிசியை வாயில் போட்டு மெல்லவேண்டும். அப்பொழுது அவன் கன்னங்கள் தடித்து இரத்தம் புறப்பட்டாலும், உடம்பில் நடுக்கங்கள் கண்டாலும் அவன் குற்றவாளி. இந்தப் பிரமாணத்திற்கு நாள் கெடு இல்லை.

*அரிசியின் பிரமா ணஞ்செயுந் தினத்திற்*
*கடுத்தமுன் றினத்தில்வெண் நெல்லைத்*
*தெரிவையிற் கன்னி தனைக்கொண்டே யிடித்துத்*
*தீட்டின பச்சைய ரிசியில்*
*வரியின்றி முறியா திருப்பதைத் தெரிந்து*
*மண்கடத் தரைப்படி வைத்துக்*
*கருதிய மறுநாட் கோயில் முன்பாய*
*கலம்பெறச் சதுரமாய் மெழுகி,* 535

*சோத்தியன் திறஞ்செப் பின்பிராட்டு விவாகன்*
*துணைவருஞ் சுசிபெற்றங் குவந்து*
*மூத்தவர் விஷவி திப்படியே........*
*மொழிந்தபடி...........க பூசைமுதற்*

சாத்திரப் படியே தன்மதே வதைபூ
 சைமுறை செய்து(?) கோலால்...........
..........க்கினிலோர் தேவ அபிடேகம் பணி
 கொண்டதீர்த் தம்வாங்கி வைத்து, 536

(537 - 541 வரைப் பாடல்கள் சிதைந்துவிட்டன.)

அரிசிப் பிரமாண லட்சணம் முற்றும்.

---

# 25. வசனப் பிரமாண லட்சணம்

---

சத்தியம் இடுதல் அல்லது ஆணையிடுதல் வசனப்பிரமாணமாகும். இது மூன்று பொன்னுக்கு உட்பட்ட வழக்குக்கு வசனப் பிரமாணமென்றும், அதற்கு மேற்பட்ட வழக்கிற்குக் கோசபானப் பிரமாணமென்றும் கூறப்பட்டிருக்கிறது. இதில், பிரமாணம் செய்கிறவன், தன் குலத்துக் கேற்றபடி, தான் குற்றம் செய்து இருந்தால் இன்ன இன்ன பொருள் கள் அழியும் என்று பிரமாணங்கள் செய்வான். உதாரணமாகப் பிராமணன் தன் வேதாசாரங்கள் குலையுமென்றும், க்ஷத்திரியன் வாகனங்கள் ஆயுதங்கள் அழிந்து போகுமென்றும், வைசியன் தன் பசுக்கள் தானியங்கள் அழிந்து போகுமென்றும், வேளாளன் தன் புண்ணியம் அழிந்து போகுமென்றும், கூறுவார்கள். இன்ன தெய்வத் தின் மேலாணை, தாய், தகப்பன், தன் புண்ணியம், தன் தலை, தன் மனைவி தலை, உறவினர் தலை என்று இவ்விதம் 12 பேர்மேல் ஆணை யிடுவதும் உண்டு. பூசையிட்ட நிர்மாலிய மலர்களைக் கையில் வைத்துக்கொண்டு ஆணை சொல்லுதலும் உண்டு.

இவ்வாறு பிரமாணம் செய்தபின் 3 நாளைக்குள் இராஜீய தெய்வீ கத்தால் அவனுக்கு விசனம் வந்தால் அவன் அசுத்தன். திரவியம் குறையக் குறைய நாளும் அதிகமாகும்.

இப்பகுதியும் முதல் மூன்று செய்யுள்கள் இல்லாமலே கிடைத் துள்ளது.

(542 - 544 வரை, பாடல்களில்லை)

குலவிதிப்படிப் பிரதிஞ்ஞை

ஒரு........ன் னமவ ரையும் வேதியனு னன்புற
விந்நாள் வரையும்நான் செய்த
பெருகுபுண் ணியங்க ளென்னைவிட் டின்றே
பிரிந்துபோ மெனச்சொல்ல வேண்டும்
பொருவில்சத் திரிய னிதுவரைக் கென்பாற்
பொருந்துவா கனங்களா யுதமும்
அருகியின் றெனைவிட் டகன்றிடு மென்றே
யறையென்று சொல்வதே யறமால். 545

நல்லவை சியனை இதுவரைக் கெனையே
நணுகிய கன்றுகா லிபசு
ஒல்லையில் விதைகள் பணங்க ளிவ்வெல்லா
மொழியுமின் றென்னைவிட் டென்றும்
பல்சூத் திரனேல் நானின்ன பாவம்
பண்ணினே னுறுநர கினில்நான்
செல்லுவே னெனவே செப்பிட வேண்டுஞ்
செகத்தினிற் பெரியவர் முனமே. 546

சூத்திரர் தமக்குத் தாழ்ந்திடுஞ் சாதித்
தொகைக்கெலா மவனவ னுக்கும்
பாத்தெந்த வாறு யுரைத்திடிற் பயங்கள்
பதியுமோ வவ்வழி பார்த்துச்
சேர்த்துரை யெனவே செப்பிட வேண்டுஞ்
சோறுகா ணிமுந் திரியாய்க்
கோ..............சொன் னங்களின் வரைக்குங்
குலங்களி லெக்குலத் தவரும். 547

இன்னகுற்றத்திற்கு இது பிரமாணம் அன்று என்பது

த..............தைதன் பெண்டிர்
தழைக்கும்பிள் ளைகள்சுற்றத் தார்கள்
அன்பும்வே றவர்க்கும் வேண்டினே ரிவர்கள்
பேரிலா ணையையிட வேண்டும்

முன்புறும் விவகா ரங்களிற் போகு
முதலிதிற் ரூழ்ந்ததொ கைகளேல்
வன்புறப் பேசித் தெரிவ தல்லாமல்
வழுத்துவ திலேப்பிர மாணம். 548

நாள் எல்லே

சொல்லிய பிரமா ணங்களி னுடனே
சோதனே தெரிந்திடா ததற்கு
மெல்லவே கோஷம் வலித்திடும் நாட்கள்
மீளமு தல்குறையக் குறையவே
வல்லி..........ஈனப.......ஞ்சு நாளேக்குள்
வகுத்து நாள்நெடுக நெடுகவைத்
தல்லலே யறிய வேண்டுவ தல்லா
லதற்குமேல் நாள்வைப்ப திலேயே. 549

முடிவுகாணல்

இப்படிப் பிரமா ணஞ்சொலி யேமுன்
றிரவினிற் சொன்னவ னுக்குத்
தப்பிலாத் தெய்வத் தாலேனு மரசர்
தங்களா லேனு மனவிதனம்
ஒப்பவே யுற்ருற் கள்ளனதி லிலேயே
லுரைக்கலாஞ் சுத்த னென்றவனேச்
செப்பின விதன்மேற் பதுமையின் பிரமாணஞ்
செயுஞ் செயலினே யினியுரைப்பாம். 550

வசனப் பிரமாண லட்சணம் முற்றும்.

# 26. பதுமைப் பிரமாண லட்சணம்

---

கணவன் மனேவி, யசமானன் வேலைக்காரன், கொடையாளி யாசகன், நாயகன் அடிமை, இவர்களுக்குள்ளே ஒருவன் கொடுப்பதாகச் சொன்னதைக் கொடுக்கவில்லை என்ற விவகாரத்துக்குப் பதுமைப் பிரமாணம் பயன்படும். தர்ம தேவதை, அதர்ம தேவதை ஆகிய இரண்டினே அவ்வவற்றிற்குரிய உலோகத்தில் செய்து முன் பிரமாணங்களில் சொல்லியமுறைப்படி, தானம், நீராடல், பூசைகள் முதலியன செய்து அந்தத் தேவதைகளேயும் பூசித்து, ஒரு மண்டலத்திலே அப்பதுமைகளேக் கோமயத்திலாவது (பசுஞ் சாணம்), மண்ணிலாவது, செய்யப்பட்ட உருண்டைகளுக்குள் புகுத்தி மூடி, ஒரு புதுச் சட்டியில் வைக்கவேண்டும். பிரமாணம் செய்கிறவர் அச்சட்டிக்கு மேற்குப் புறமாக நின்றுகொண்டு, '' நான் சுத்தனுனல் தருமம் வருக, அசுத்தனுனல் அதருமம் வருக '' என்று சொல்லிப் பானேகளுக்குள் உள்ள உருண்டைகளுள் ஒன்றை எடுக்கச் செய்யவேண்டும். அதனுள் தருமதேவதையிருந்தால் அவன் சுத்தன்; அதரும தேவதையிருந்தால் அசுத்தன். இப்பிரமாணத்தின்படி கண்டுபிடிக்கப்பட்ட குற்றத்திற்கு அடியுமில்லை; அபராதமுமில்லை.

தர்ம அதர்மதேவதைகட்குப் பிரதிமை செய்தல்

*தன்மதே வதையை வெள்ளியா லேய*
*தன்ம தேவதையை யீயத்தால்*
*அன்னமே யிதுவு மில்லையே லீய*
*மதிற்றன்ம தேவதை தனேயும்*
*மின்னவே யயத்தா லதன்மதே வதையும்*
*விளங்கவே செய்வது மிலையேல்*
*என்னசா தியிலும் வெள்ளேயாம் நிறமாய்*
*யிருப்பதிற் றன்மதே வதையும்,* 551

*கறுப்பதாம் நிறமா யிருக்கின்ற பொருளாற்*
*கருதியே யதன்மதே வதையும்*
*நிறுத்தியே யனமச்சாய்ச் செய்துவைத் திருக்க*
*வேண்டுமப் படியிருக் கையிலே*

ஒறுத்தொரு பெண்ணு மவள்தலை வனுமி
தலாலுற்ற சேவக னிசமானும்
மறுத்துரை பேசா தியாகியா சகியு
மவரவர லால்நாயன டிமையும், 552

இந்தநால் வகைபோன் றவரிவ னெனக்கே
யின்னது தருகிறே னென்றான்
முந்தவே யிப்போழ் திலையென்று னென்றே
மொழிந்திடும் வழக்கினுல் வந்தால்
வந்தபே ரிருவர் பிராட்டுவி வாகன்
வழுத்துமிம் மூவருஞ் சுசியாய்ச்
சிந்தையே பயந்தோர் கோயிலின் முன்பு
சேர்ந்துமுன் சதுரமாய் மெழுகி, 553

பூசைகள்

முன்விஷ விதியில் மொழிந்தவா றங்க
பூசையோ மங்களு முறையே
அன்பினுற் சிரசு பட்டைய பூசை
யதுவரை யுஞ்செய்து நடுவிற்
தன்மதே வதையைப் பதித்......ததனுக்குச்
சாற்றுமேற் கொருமண் டலந்தான்
பின்னமாய் மெழுகி யதன்மிசை முனமே
பேசிய பதுமையிரண் டினையும், 554

பதுமைகளை மறைத்து வைத்தல்

கோமய மிலையேல் மண்ணினுள் வைத்துக்
குவித்திரண் டுருண்டையாய்த் திரட்டி
யேமண்பா னைக்குள் வைத்துமண் டலத்தி
விருத்தியே யதற்குமேல் புறத்திற்
தாமத மறவோர் மண்டல மெழுகித்
தயங்கிவந்து நின்றசோத் தியனை
நேமமாய்த் தன்மேற் கீழ்த்திசை முகமாய்
நிறுத்தியே சிரசுபத் திரத்தை, 555

தலையினிற் சேர்த்திரு கரத்தையும் விரித்துப்
பானைவாய் தன்னிலே வைத்து
மலைவுறும் நானே சுத்தனேற் றன்ம
தேவதை........வரட்டும சுத்தனே
.........எனில் அதன்ம தேவதை வரட்டுமெனச்
சொலென்றே சொன்னபின்க........ரைந்தோர்
.............. விரைவிற்கையையிட்
டெடுக்கவோ ருருண்டை............ 556

பதுமை எடுத்தல்

எடுத்தவோ ருருண்டை தன்னையே வாங்கி
யிருகையாற் பிதிர்த்தறி கையிலே
அடுத்தது தன்ம தேவதை யாகி
லவன்சுத்த னதன்மதே வதையேற்
கடுத்திட லாகும் அசுத்தனென் றவனைக்
கழறிய விப்பிர மாணம்
நடுச்சொல்வோ ரறியச் செய்திடு மசுத்த
னுடவர் நாரிதா னெனினும், 557

இப்பிரமாணத் தசுத்தர்கள் முதலே
யிழப்பது.........மல்லால்
தப்புறு மவர்கட் கடியப ராதஞ்
சாற்றவே மனுவிதித்ததிலே
செப்பிய பிரமா ணங்களொன் பதுமே
தேர்ந்திட வுரைத்தன மினிமேல்
ஒப்புதன் பொருட்டுச் சம்மதிகேட்க
வேண்டிய விலட்சண முரைப்பாம். 558

பதுமைப் பிரமாண லட்சணம் முற்றும்.

# 27. தன்பொருட்குச் சம்மதி கேட்க வேண்டிய லட்சணம்

12...26 பகுதிகளில் மானிடப் பிரமாணம், தெய்வப் பிரமாணம் இவற்றின் வகைகளைச் சொல்லி, இனிச் சொத்துக்களை விற்றல், பிரித்தல், அவற்றின் உரிமை முதலியவற்றைச் சொல்லத் தொடங்குகின்ருர். இப்பகுதியில் சொத்தைப் பிறரிடம் கொடுக்கும்போது, யார் யாருடைய சம்மதம் வேண்டும் என்பது கூறப்படுகின்றது. சொத்தானது, தோப்பு, மனை, வீடு, நன்செய், புன்செய் என ஐந்து வகைப்படும். அவை கைம்மாறுதல்: விற்பனை, கொடை, அடகு, ஒற்றி, பிரிவினை என்பனவாம். இவற்றை விற்கும்போது பிரிவினை ஆகியிருந்தாலும் ஆகாமலிருந்தாலும் அண்ணன், தம்பி, சிற்றப்பன், பெரியப்பன் இவர்கள் பிள்ளைகள் இவர்களுடைய சம்மதியும், கையொப்பமும் இன்றியமையாதன. இவர்களில்லாவிட்டால் சாமந்தர் முன்னிலையில் அப்பொருளை விற்றவர், ஊரார், தெருவார், (முன்சொன்ன அண்ணன், தம்பிகள் இல்லாவிட்டால்) அவர்களின் பிள்ளைகள் இவர்களின் சம்மதமும் பெறவேண்டும். இவ்வாறு பெறுவது ஏனெனில், விற்கின்ற சொத்துக்குப் பாத்யதையுடையவர்களும், அருகில் சொத்து உடையவர்களுமாக அவர்கள் இருக்கக்கூடும். சொத்தை இவர்களுக்குள்ளேயே விற்பதும் நன்று. இவர்கள் வேண்டாமென்ருல் முதலில் தனக்கு அதை விற்றவனைக் கேட்கவேண்டும். பிறகு அயலாரிடம் விற்கலாம். அடிமைகளை விற்பதற்கும் இவ்வெட்டுப் பேர்களின் சம்மதிவேண்டும். சில இன்றியமையாத குடும்பக் காரியங்கட்குப் பிள்ளைகள் சம்மதம் கொடாவிட்டாலும் சொத்தினை விற்கலாம். இவ்வாறு விற்கும்போது சம்மதியில்லாமல் ஒருவன் வாங்கின சொத்தை உரியவர்கள் ஆட்சேபித்தால் கொடுத்த பணத்தை வாங்கிக்கொண்டு திருப்பிவிடவேண்டும்.

சம்மதி கேட்க வேண்டிய லட்சணம்

*தன்பொரு ளான தோப்பு மனைகள்தன் வீடு நன்செய்*
*புன்செயா ளடிமை யிங்கே புகல்பொரு ளேழை மற்ருேர்க்*
*கென் றுநன் கொடையா யேனு மீந்திட அலது விற்க,*
*முன்புறு முறியை வைத்து முதல் கொள, ஒற்றிவைக்க,* 559

ஒறுத்தட மானம் வைக்க வேண்டிவந் துற்றகாலை
வெறுத்ததன் மனைக போப்பு வீடுகள் நன்செய் புன்செய்க்
குறுத்துதன் புதல்வர் நேச முவந்தங்கி ஷம்பிரித்து
நிறுத்தினும், தமையன் றம்பி பெரியப்பன் நிசச்சிற் றப்பன்,

இயம்பிய வஞ்சுபேரு மில்லையே லவர்கள் பிள்ளை
அயலுறுஞ் சாமந்தனையனை......பொருளின் விற்றேன்
வயமுறு மூராரன்றி வாய்கின்ற தெருவிலுள்ளோர்
சயங்கொ...ளிவ் வைந்துபேரின் சம்மதி கேட்க வேண்டும். 561

இங்குரை யெட்டுப் பேரு மெனக்கது வேண்டு மென்னில்
அங்குமுன் னுரைத் திருந்த வவர்க்குமுன் னளிக்க வேண்டும்
தங்களுக் கதுவேண் டாமென் றவர்களாய்ச் சாற்றி விட்டால்
மங்கையே! பொருடந் தோர்க்கு வழங்குதல்
[வழக்கென் றூரே. 562

அடிமையா ளினுக்கு முன்னே யறைந்திடு மெட்டுப் பேரிற்
கடியசா மந்த னென்று கழறினேன் றன்னைத் தள்ளிப்
பிடியளேற் றலைவ னுயன் றலைவனேற் பெண்டிர் நாயன்
படியினி லிவரைச் சேர்த்துப் பயக்நெட்டு பேரைக் கேளே. 563

எதை விற்றேனும் செய்ய வேண்டிய கருமங்கள்

குடும்பத்திற் கிடுக்கண் தீர்க்கக் குடும்பத்தை யிரட்சை செய்யப்
படுங்கரு மஞ்சி ராத்தம் பண்ணவக் கருமம் வந்தால்
கெடும்பிள்ளைத் தடையைத் தள்ளிக் கிளக்குமேழ் பொருளை
[விற்றும்
நடுங்கிடா தேதன் றந்தை நடத்தலா மெதை விற்றேனும். 564

சொத்தை வாங்குவதற்கு முதலுரிமை பெற்றவர்கள்

எப்பொருள் களையென் றூலு மிருஞ்சகோ தரன்சோக் காரன்
ஒப்பின பின்மற் றேருக் குதவலே ஞாயமாகும்;
மைப்படி கண்ணினளே! வழுத்திய வொழுங்கி லுள்ளோர்
அப்பொருள் வேண்டா மென்று லவரொப்ப முறையில்
[வாங்கி, 565

அந்நியர்க்கு விற்குமுறை

ஏற்கின்ற வயலோர்க் கீய விவர்களி லொருவ னேற்றால்
மாற்றில்மற் றெழுவ ரொப்பம் வாங்கியே யவனுக் கீயச்
சாற்றுமிம் முறியும் பொன்னுந் தன்கையில் வைத்துப் பூமி
தோற்றிய வீடு தோப்பை விலைகொளத் தொடுத்தோன்
[கையில், 566

செலமும்விட் டைய வேண்டுஞ் செப்பொற்றி முதலா யுள்ள
பலவித..........வீவுக் கெல்லாம் பகர்வித மொப்பம் வாங்கிப்
பெலமுறு முறியை யீந்து பின்..........ல்லா
விலகிய பொன்னும் வேண்டா விருந்தண்ணீர் விடவும்
[வேண்டா. 567

இப்படிக் கொடுக்க வாங்கி னேனிந்தப் பொருட்கு நாதன்
செப்பின வெட்டுப் பேரிற் சிலர் தடை செய் திருக்க
அப்பொருள் வாங்கினேனு மச்சஞ்செய் தொப்பம் வாங்கி
வெப்புற...தாங்கி னேனும் விரும்பிவாங் கினதற் கெல்லாம்.

சம்மதியில்லாமல் வாங்கிய சொத்தை திருப்பிக் கொடுத்தல்

உடையவ னல்லா......ததான்முன் னுதவின பணத்தை
[மட்டும்
தடைசெய்தோன் பயந்தொப் பத்தைத் தானிட்டோ னிவ(ர்)
[கள் பாலே
இடையினில் வாங்கி முன்ன மீட்டித்தன் வசமிருந்து
தொடர்தரு பொருளை யங்கே சொன்னந்தந் தவன்பா லீயே.

சம்மதி வாங்கவேண்டியதன் காரணங்கள்

உடையவ னண்ணன் றம்பி யுத்தர வேதுக் கென்னில்
அடருமப் பொருளுக் கெல்லா மவர்களு முடைய ரதாலே
திடமுறு பெரிய தந்தை சிறுதந்தை யிவர்கள் பிள்ளை
அடைவிடா தவன்சுகங்க ளிடர்களுக் குடைய தாலே. 570

*பலத்தசா மந்த னெல்லேப் பிசகுகள் வாரா வாறும்*
*நிலத்தின் கூடப் பிறந்த நிலத்திஹுக் குடைய தாலும்*
*தலத்தின்முன் விற்றேன் முன்னே தந்திடும் நன்றியாலே*
*நலத்திஹர் தெருவும் வாங்கி ஞனேயா தரிப்பதாலும்,* 571

ஒப்பந்தம் வாங்குவதன் காரணம்

*சாட்சியா யிருக்கு மாறு தானனு மதிகே ளென்றே*
*ஆட்சியா மிந்த வைவ ரனுமதி கேட்ட பின்னும்*
*வாட்கணீ! ஒப்பம் வாங்கி வழுத்தின தேதோ வென்னில்*
*நாட்செவி லனும திச்சொல் நவிலவே யிலேயென் ஞமல்.* 572

தானம் செய்வதன் நோக்கம்

*பொன்னேயும் வைத்து நீரைப் பூரித்துத் தானஞ் செய்வ*
*தன்னமே! தோப்பை யாதி யஞ்சையும் விற்ற தோஷம்*
*பின்னரே தன்னே வந்து...பீடியா திருக்க வேண்டி*
*உன்னியே* **பிரிக்க வேண்டா** *விலட்சண முரைக்க லானேன்.*

தன்பொருட்குச் சம்மதி கேட்க வேண்டிய லட்சணம் முற்றும்.

---

# 28. பிரிக்கவேண்டாத லட்சணம்

---

இப்பகுதியில் சொந்தமாகச் சம்பாதித்ததும் தனக்கேயுரியதுமான **பதினேந்துவிதமான** சொத்துக்களேயும் அவரவர்களே வைத்துக் கொள்ளலாமென்பது கூறப்படுகிறது. குடும்பம் பிரிந்தபின் பெற்றோர் கள் தங்களுக்கு வந்த பாகத்தையேனும், பிறகு தாம் சம்பாதித்த பொருளேயேனும் ஒருமகனுக்குக் கொடுப்பார்களானல் அச்சொத்துக் கும் பிரிவினே இல்லே. தந்தை உபயோகித்த பல்லக்கு முதலியவை மூத்த பிள்ளேக்கே உரியன; பிற மக்கள் அவற்றில் பாகங் கேட்டால் அவ்வாறு கொடுக்காமல் தந்தை சிரார்த்தத்துக்கு வரும் அந்தணனுக் கேனும் கொடுத்துவிடவேண்டுமென்று விதிக்கப்படுகிறது. பெண்டிர்க் குக் கொடுக்கப்பட்ட ஆடையாபரணங்கள் அவரவர்களுடையனவே. தந்தை கையாண்ட பூசைப் பொருள்கள் மக்களுள் பூசை செய்கின்ற



வருக்கே சாரவேண்டும். குடும்பத்தின் தருமங்களைப் பிரிவினை செய்து கொண்டு நடத்திவரலாம். ஆனால் அவற்றுக்குரிய சொத்துகளைச் சொந்த உபயோகத்துக்கு எடுத்துக்கொள்ளலாகாது. கிணறு, குளம் முதலிய பெரிய பொதுத் தருமங்களை வரிசை முறையில் பிள்ளைகள் பார்த்து வரவேண்டும்; அவற்றைப் பிரிக்கலாகாது. நடைப்பாதை எல்லார்க்கும் பொதுவானது. உணவுத்தானிபங்கள் முதலியவற்றைப் பிரித்துக்கொள்ளாமல் பொதுவாக உண்ணவேண்டும்.

*தந்தைதன் முதல் தனக்குச் செலவுவா ராமற் பின்னே*
*வந்தபிள் ளைகடா மாக வருந்தியே கொண்ட சொத்தும்*[1]
*முந்தினேன் தம்பிமாரு முதிர்சினே கிதர்பாற் றேடிக்*
*கொந்துறு சொத்தும்*[2] *தங்கள் மணங்களைக் கூறிக்கூறி,*

*அந்தவே துவினல் வந்த வரும்பொரு டனையும்*[3] *தங்கள்*
*தந்தைகொள் நன்செய் புன்செய் தாம்மனை தோப்பு வீடும்*
*இந்தவைம் பொருளும் நீக்கி யெப்பொரு ளையுமற் றோர்கள்*
*முந்தவே யழிவ ழக்கால் முரண்டுசெய் தெடுத் திருக்க,* 575

*அப்பொரு டன்னை மற்ற வண்ணன் றம் பியர்கள் கூடி*
*எப்படி யுந்தி ருப்பி யெடுத்துக்கொள் எங்க ளுக்கே*
*ஒப்பிநீ தரவே வேண்டா மெனவுரைத் திடவோர் பிள்ளை*
*செப்புமுத் தரவுகேட்டுத் திருப்பியே வந்த சொத்தும்,*[4] 576

*பொதுமுதல் செலவு மின்றிப் பொருந்தித்தா னன்ன மாடை*
*எதுவேனுங் கொடுக்க வேண்டி யிருக்கின்றோர்க் குத்தா னுக*
*அதுதனைத் தேடி யிங்தே யறிவினற் றூனய்க் கற்ற*
*மதுரமாம் வித்தை யாலே வருந்தியே வந்த சொத்தும்,*[5] 577

*செங்கையா யுதம்பி டித்துச் சேவித்துப் பெற்ற சொத்தும்*[6]
*அங்கிஷம் பிரிக்கு முன்ன மவனவ னேறிப் போகும்*
*துங்கமாஞ் சிவிகை யாதி யாய்ச் சொல்வா கனமாஞ்*
*[சொத்தும்*[7]
*தங்கள்பூ சையு மதனைச் சார்ந்தபாத் திரங்க டானும்,*[8] 578

மூத்தவன் றகப்பன் றேடு முதலிலே செலவின் றித்தான்
மாத்திரம் தேடு சொத்தில் வரம்பே...பாதிச் சொத்தும்[9]
ஆத்தியாய்ப் பொதுவ ரம்நன் செயாதியைம் பொருள்க டம்முள்
.........அறியவே (?)கனன் றுடன் பிறந்தோர் பாலே - (?)[10]

உத்தர வேற்றுக் கொண்டவ்..........னே திருப்பி வந்தால்
அத்தில்நா வினிலோர் பங்கு மரியதன் புதல்வர் தேடும்
சொத்தும்[11] தான்...தேடிக்கொண்ட சொத்துக[12]டங்கள்
[பெண்டிர்க்
கித்தல மறியச் சீத னங்களா யிட்ட சொத்தும்,[13] 580

அவடனக் குத்தன் மாமி மாமன்று னளிபி னுலே
கவனம்வைத் தடிமை நன்செய் யாதியாய்க் கழறு மஞ்சாம்
இவையின்றி யீந்த சொத்து[14] மீன்றதன் றந்தை யன்பாய்ப்
புவனம்விட் டொருபிள் ளைக்கே பொருந்தியீந் துவிட்ட
[சொத்தும்[15] 581

அறைபதி னஞ்சு சொத்து மவரவர்க் கேய லாமற்
பொறையின்றிப் பகிர்ந்தா லந்தப் பொருளும்போம்
[வாழான் - (?)
மறைமொழி யிதுவா லத்தை வாங்கிநீ பகிர்ந்து கொள்ள
முறைமையே யில்லையென்று மொழிவர்கள் பெரியோர்
[ரெல்லாம். 582

பிரிவினை இல்லாத சொத்து இன்னதென்பது

மக்களங் கிஷம்பி ரித்து மகிழ்ந்தபின் மாதாத் தந்தை
இக்குநேர் மொழியாய்! தங்கட் கெனவைத்த
[பொருளி லேனும்
மிக்கதாய்த் தாங்க ளாக மீட்டிய பொருளி லேனுந்
தக்கவோர் மகனுக் கென்ன தான்கொடுத்து விட்டா ரேனும்,

தந்தை உபயோகித்த சில பொருள்கள் மூத்தபிள்ளைக்கே உரியன

அப்பொரு ளினையே மற்ற வவர்பகி ரவும டாதாம்
இப்படி யெங்கட் கெல்லா மீயென வும்ப டாதே
ஒப்பிலாத் தந்தை கொண்டங் குறுந்தண்டி கைப்பல் லக்கு
மைப்படி கண்ணி னுளே! கம்பளிகள் திண்டு.......... 584

சாமர முதலாய் ராசர் தந்திடும் வரிசை தானும்
தாமன தாக வேறித் தந்தைபோம் குதிரை யிங்கே
நாமறு வகையாய்த் தேற்றி நவில்பொருள் போன்ற வெல்லாம்
சோமனேர் வதனி! முன்னந் தோன்றிய பிள்ளைக்
[கென்னே. 585

ஷ பொருள்களுக்குத் தம்பியர் பாகங்கேட்டாற் சிரார்த்தப்
பிராமணனுக்கு அவைகளைக் கொடுத்துவிடவேண்டும்

மூத்தவற் கிந்த வாறு.........பொரு ளீந்த தற்குப்
பாத்திர னல்ல வென்றூற் பார்த்தடுத் தவனே கொள்ளச்
சாத்தி...........டியே யீயத் தம்பிமார் பொறுமை யற்றால்
பூத்தலம் புகழ்சி ராத்தம் பொருந்தியே கொடுக்கும் போது,

காதற்றந் தையினை ஆவா கனஞ்செய்வே தியனுக் கீயக்
கோதற்ற தந்தை பூண்கள் கூறைகள் சயன மெல்லாம்
போதத்தா லவர்க்கே யீயப் புகல்வதே யறமீ தல்லாற்
பேதத்தில் மக்க ளெல்லாம் பிரித்துக்கொள் ளவும்ப டாதே.

பெண்டிருக்குக் கொடுக்கப்பட்ட ஆடையாபரணங்கள்
அவரவர்களனவே

தம்பிமார் தமையன் மார்பெண் சாதிகட் காடை பூண்கள்
சொம்பொது விருப்பில் வாங்கித் தொகுத்தவர்க் களித்தி ருக்க
வம்பினேர் விழியார் வாங்கி யணிந்திருப் பவைகள் போக
வும்பிற வொருகாற் பூணு வோமென வைத்த தெல்லாம். 588

வாங்கியே தீர லாமம் மாதர்பூண் டிருப்ப தெல்லா
ஏங்கவே வாங்கிப் பங்கிட் டெடுக்கவே நினைத்த பேரும்
தாங்கிடா நரகில் வீழ்ந்து தயங்குவா ரைய மில்லை
தீங்கிலாப் பெரியோ ரீது தெரிந்தவர்க் குரைசெய் வீரே. 589

பூசைப் பொருள்களும் பிரிக்கப்படா.

பத்திசெய் தந்தை பூசைப் பதார்த்தங்க ளான வெல்லாம்
சித்தமொத் தந்தப் பூசை செயவரன் முறையா யுள்ளோன்
வைத்திட வேண்டு மல்லால் மறித்ததைப் பகிர்ந்தெடுத்தால்
எத்தவஞ் செய்தா ரேனு மெழுந்திரா நரகில் வீழ்வார். 590

தந்தை செய்த தருமங்களைப் பிள்ளைகள் பகிர்ந்துகொள்ளலாம் ;
அவற்றிற்குரிய சொத்துக்களைத் தாம் அநுபவிக்கலாகாது

தன்தந்தை செய்தி ருந்த தன்மங்கள் பகிர்ந்து கொள்ளும்
முன்புபிள் ளைகடாம் செய்து முடித்ததன் மங்க ளேனும்
என்பங்கீ துன்பங் கீதென் றெழுதியே பிரித்த பின்பு
தொன்றுசெய் தன்மந் தன்னைத் தொடுத்து முன்
[ னேன்றி னேன்முன். 591

ஆகவுந் தம்பி மார்பின் னுகவுஞ் சோதித் தத்தை
மோகமாய் வீழாச் செய்ய முறைமையே யன்றி யத்தைத்
தாகமாய்ப் பகிர்ந்து கொண்டு தழைக்கவுஞ் செய்யலாகா
ஓகையாய்ப் பகிர்ந்து கொண்டே யுண்ணவும் நி.........வாகா.

பொதுத் தர்மங்களைப் பிள்ளைகள் வரிசை முறையில் பார்த்துப்
பிரிக்காமல் அநுபவிக்க வேண்டும்

பொதுக்கிண றுகள்கு ளங்கள் பொய்கையா ளடிமை யிந்த
விதத்தி லேம் பொருள னுகில், விரும்பியித் தனைநா ளின்னுன்
அதற்குடை யவனென் றண்ண னுதியா யமைத்துக்
[கொண்டே
பதத்துடன் றம்பி மாரும் பார்த்தனு பவிக்க வேண்டும். 593

இவ்வரன் முறையா யாரு மிதையனு பவிப்ப தன்றி
ஒவ்விடா தெனப்ப கர்ந்திவ் வுலகத்தி லனுப வித்தால்
செவ்விலே போகார் கூற்றின் றென்றிசை யினிலே செல்லும்
அவ்வழித் தோஷந் தன்னை யடைந்தனு பவிப்பார் திண்ணம்.

உணவுப் பொருள்களைப் பிரிக்காமல் பொதுவாகப்
பாகத்தார்கள் உண்ணவேண்டும்.

*அங்கிஷம் பிரிக்கும் போதி லரிசிநெய் பருப்புக் காய்க*
*ளுங்கனிப் பலகா ரங்க ளும்பல வூறு காய்போல்*
*தங்கிய பொருளை யெல்லாந் தாங்களாய்ப் பொதுவிற் கூடிப்*
*பங்கிடா துண்ண வேண்டும் பகிர்ந் துண்ணிற் றோஷ மாமே.*

நடைபாதை பொதுவானது

*நடக்கும்பூ மியையென் றைக்கும் நடைபாதை*
*[பொதுவாய்ச் செய்து*
*விடச் சொல்ல வேண்டு மத்தை வீதித்தும் பகிர்ந்து*
*[கொண்டோன்*
*கடக்கொணு நரகில் வீழ்வான் கருதியே* தாய மாதி
*அடக்கிய பொருளுக்கெல்லா மிலட்சண மறைவா மேலே.* 596

பிரிக்கவேண்டாத லட்சணம் முற்றும்.

---

## 29. தாயமாதிப் பொருளுக்கு லட்சணம்

---

தாயம் என்னும் சொல்லுக்கு உரையாசிரியர்கள் வெவ்வேறு பொருள் கூறுகின்றனர். தான் சம்பாதித்தது தாயமென்றும், முன்னோர் தேடிவைத்தது சொத்து என்றும் இந்நூல் கூறுகின்றது. ஒவ்வொருவரும் தாம் சம்பாதிக்கவேண்டிய வழிகளைச் சாதிவாரியாக, செய்யுள்கள் 598-9 கூறுகின்றன. இவை தாயம், சொத்தென்பது தந்தை தன் முன்னோர்களிடமிருந்து பெற்று மகனுக்கு ஈவதும், பிறஉறவினர் தமக்கு மக்கள் இல்லாமையால் உறவின்முறையால் வந்ததும், புதையல் கண்டெடுத்ததுமாகிய மூன்றும் ஆகும்.

இந்த இரண்டுள் தாயத்தைப் பிரிப்பதைத் தாயாதிப் பிரிவு (அப்ரதி பந்தம்) என்னும் சொத்தைப் பிரிப்பதைச் சோப்பிரிவு (சப்பிரதி பந்தம்) என்றுங் கூறுவர்.

தாயம், சொத்து இவற்றிற்குப் பொருள்

*தான்கொண்ட பொருளுக் கெல்லாந்* தாயமென் றேபேர்
*[சொல்லும்*
*வான்புகு முன்னோர் தேடி வைத்திடும் பொருளுக் கெல்லாம்*
*மீன்பொரு விழியாய்! பேரை விளம்பலாஞ்* சொத்தீ தென்றே
*நான்புகல் தாயந்தேடும் விதியென்ன வென நவின்றூல்.* 597

குலத்துக்குத்தக்க தொழில்கொண்டு சம்பாதிக்கவேண்டும்

வேதனேற் றூனம் வாங்க விரும்பியா சகங்கள் வாங்க
நீதசத் திரிய னென்னில் நெறிப்படிக் காயுத் தத்தால்
சூதறச் சேவை செய்து தொகை நிதி கொள்ளப் பின்ன
ரோதும்வை சிகனே யாகி லுழுதுவியா பாரம் செய்தும், 598

சூத்திரர் வேந்தர்க் கெல்லாஞ் சொல்பணி விடைகள் செய்தும்
பூத்தனில் நிதிக டேடப் புக லுமிவ் வாறு போலக்
கோத்திடுந் தொழில்க டங்கள் குலத்திற்குத் தக்க செய்யச்
சாத்திர மெவருந் தங்கள் சாதிகட் கமைந்த செய்ய, 599

சொத்து வரும் வழி

இப்படித் தங்கு லத்திற் கிணங்கின தொழில்கள் செய்து
தப்பிலா தாருந் தேடும் தனத்தின்பேர் தாய மாகும்
செப்புசொத் தேதோ வென்னிற் செகத்திற்றன் தந்தை யீரு
கப்பெறு முன்னோர் தாமா கக்கொண்ட பொருள்க டானும்,

சிறுதந்தை பெரியதந்தை தேடருந் தமையன் றம்பிக்
குறுமத லேகளே அற்ற தோர்ந்துகொள் பொருள்க டானும்
பெறுபுதை யலேயெ டுத்துப் பேணிய பொருளிம் மூன்றும்
மறுவல துணர்ந்தோ ரெல்லாம் வழுத்தினர் சொத்தீ தென்றே.

பிரிவினையின் வகைகள்

இந்தவா றிரண்டும் பங்கிட் டெடுப்பதற் கேற்ற நாமம்
சிந்தையே தெளிந்தோர் தாயா திப்பிரிவென்று சொன்னர்
வந்தவன் முதலி லாமல் வழுத்திய சொத்தை மட்டும்
சொந்தமாய்ப் பிரிப்ப தன்பேர் சோப்பிரி வென்று சொன்னர்.

புகன்றனர் தாய மாதிப் பொருளிலட் சணங்க ளெல்லாம்
சகங்கொளத் தாய மாதி பிரிக்கும்லட் சணத்தை யென்றன்
அகந்தெரிந் திருக்கு மட்டு மறைகுவ னினிமே லத்தை
இகம்பர மிரண்டி னுக்கு மெழில்பெற வறிவீர் மண்மேல். 603

தாயமாதிப் பொருளுக்கு லட்சண முற்றும்.

# 30. தாயமாதிப் பிரிக்கவேண்டிய லட்சணம்

---

தந்தை தன் குமாரர்கட்குச் சொத்தினைப் பிரிக்கும் போது சேட்ட கனிட்டம் பார்த்தும் அப்படிப் பாராமல் சமமாயும் பிரிக்கலாம். பிரித்தற்குரிய காலங்கள் ஐந்து என இப்பகுதியில் கூறப்படுகிறது; (செய்யுள்கள் 606-7). தந்தைக்குச் சில குற்றங்களிருந்தால் அவன் பிரித்த முறையை மக்கள் பிறகு மாற்றிக்கொள்ளலாம். பாகமான பின் தந்தைக்கு ஒரு மகன் பிறந்தால், அத்தந்தைக்குப் பிறகு உண்டான ஆஸ்தியும் கடனும் அப்பிள்ளையையே சாரும். பல மாதரை மணந்த ஒருவனுக்கு மக்களோ சகோதரரோ இல்லாமற் போனால், அம்மாதர்களே சேட்ட கனிட்டமுறையில் அவன் சொத்தினைப் பிரித்துக்கொள்ளலாம், கர்ப்பத்திலுள்ள சிசுவுக்குப், பிறந்தபின்னன்றிப் பாகம் கிடையாது. விதவைக்குச் சொத்தில் பாகமுண்டு, கடனில் பாகமில்லை. சீதனம் பெற்ற தாய்க்குப் பங்குமுறை கூறப்படுகிறது; (614). ஒவ்வொரு வருணத்தானும் வேறு வருணங்களில் மனைவிகளைப் பெற்றிருந்தாலும், தன் குலத்திலேயே பல மாதர்களை மணந்திருந்தாலும், பல சாதியில் பல மாதர்களை மணந்திருந்தாலும் அவரவர்க்குரிய பங்கு விகிதம் விளக்கமாகக் கூறப்படுகிறது; (615-22). மதலைகள் பதின்மூன்று விதங்கள்; அவரவர்கட்குரிய பெயர்கள் :—(1) ஔரஸீ, (2) புத்ரிகாஸுதன், (3) க்ஷேத்ரஜன், (4) கூடஜன், (5) கானீனன், (6) பௌனர்பவன், (7) தத்தகன், (8) க்ரீடன், (9) க்ருத்ருமன், (10) ஸ்வயம்தத்தன், (11) ஸஹோடஜன், (12) அபவித்தன், (13) தாசி புத்திரன் அல்லது தத்தமன் (623-630) என்பன. இவர்களும் சவரனர், அசவரனர் என்ற இரண்டு வகைப்படுவர் (631). அம்மக்கட்குரிய பங்கு வீதமும் முறையும் பல பாடல்களில் கூறப்படுகின்றன (631-5). சகோதரர்களின் உரிமை, அவர் பிள்ளைகளின் சிறப்பு, அவர்களுக்குமுன் ஏற்படும் சில ஒப்பந்தங்களால் உண்டாகும் விளைவுகள் முதலியன ஆராயப்படுகின்றன. இழந்துபோன சொத்தைத் திருப்பிக்கொண்டவனுக்குரிய பங்கும், பிறர்க்குரிய பாகமும் மணமாகாத சகோதரர்களுக்குள்ளே பிரிவினை முறையும் பிரிவினைக் காலத்தில் காட்டாத பொருளுக்கு உரியவர்களின் உரிமைப்பாடும் கூறப்படுகின்றன. பதினன்குவிதமான குறைபாடுள்ளவர்கட்கு (செய்யுள் 649) உணவு, ஆடை, தங்குமிடம் இவைகளேயன்றிப் பாகப்பிரிவினை இல்லை என்று கூறப்படுகின்றது.

பெண், அலிகள், கெட்ட நடத்தையுடைய மனைவி இவர்களின் உரிமை ஆராயப்படுகின்றது. பாட்டன் விட்டுச்சென்ற முதல் தகப்பன்மாரின் சொத்துக்கள் முதலியவற்றிற்குச் சிறப்பு விதிகள் கூறப்படுகின்றன. பேரன்மார்கள் உரிமைகளும் பேசப்படுகின்றன. இவ்வாறு இப்பகுதியில் தாயமாதி சொத்துப் பிரிவினை நன்கு விளக்கப்படுகின்றது,

தந்தை மக்களுக்குச் சேட்ட கனிட்ட முறையில் பிரித்துக் கொடுத்தாலும் சமனுகப் பிரித்துக் கொடுத்தாலும் மறுக்க விதியில்லை

*தந்தையாய் மதலைகளின் றரமறிந்தங் கிஷம்பிரித்துத்*
*தந்த காலை*
*முந்தினோர் மொழிந்தபடி சேட்டகனிட் டங்கிஷங்கள்*
*முறையாய் வைத்தே*
*சொந்தமா யீந்திடினும் துணைவருக்கெல் லாஞ்சமனுய்ச்*
*சொலியீந் தாலும்*
*வந்ததே விதியதனை மறுத்தழித்துப் பகிர்ந்துகொள*
*வழக்கே யில்லை.* 604

*தனையீன்ற தாதைபிரித் தளித்திடுங்கா லொருமதலை*
*தனக்குக் கூடப்*
*பினையொர்மத லைதனக்கே குறையவைத்துன் பங்கிதெனப்*
*பிரித்தீந் தாலும்*
*நினையாமல் லதனையிரு கையேந்தி வாங்குவது*
*நெறியே யல்லால்*
*மனதார அதையழித்துப் பகிர்ந்துகொள்ள மண்ணின்மிசை*
*வழக்கே யில்லை.* 605

பிரித்தற்குரிய காலம்

*பிள்ளைகளா யங்கிஷம்நாம் பிரிக்கவே வேண்டுமென்று*
*பேச வேண்டில்*
*வள்ளலாந் தந்தையர்க்கு மாநிதியின் மேல்வெறுப்பு*
*வந்த காலம்*

தள்ளையே சிறிதுமாறித் தழைத்திடுங் காலமந்தத்
தாயே போன்றே
உள்ளதே கூடுமெனத் தந்தைநிதி மேல்மனம் வைத்
துவந்த காலம், 606

மறக்கொணுத் தாதையர்சம் மதித்திருந்த காலம்அவர்
மரணஞ் சேர்ந்து
சிறக்கவே பதவிகளைச் சேர்ந்திருக்குங் காலமிங்கு
செப்புமைந்தாம்
முறைக்குளாங் காலமதில் மொழிந்துகொண்டு பகிர்ந்துகொள
முறைமை யென்றே
அறைந்ததையே விரும்புகின்றவறிவுடையோர் மொழிவதுவே
யழகென் றேமால். 607

தந்தை பகிர்ந்ததை அழித்துப் பகிர்தற்கு உரியகாலம்

தாதைசாத் திரவிதியைத் தள்ளியே முனம்பகிர்ந்து
தந்தா னேனும்
பேதையெனப் பயித்தியங்கொண் டோன்கோபி பெருங்காமப்
பிணியே கொண்டோன்
ஏதமில்தன் குலதன்மத் தியற்கைதப்பி யேகடப்போ
னியம்பு நாலிற்
போதமுறுந் தந்தைவிதி புகன்றவழி யேபகிர்ச்சி
புரிந்தா னேனும். 608

பாகம் பிரித்தபின் ஒரு பிள்ளை பிறந்தால், தகப்பன் பின்பெற்ற
ஆஸ்தியும் கடனும் அப்பிள்ளையையே சாரும்

இந்தவிரு வகைப்படிமுன் பகிர்ந்திருந்தா லழித்துப்பகிர்ந்
தெடுக்க லாகும்
தந்தையிருக் கிறபோதே பகிர்ந்துகொள்ளப் பிறகுபிள்ளை
தகப்பன் பெற்றால்
முந்துபிள்ளைப் பிரித்தபின்பு தகப்பன்வைத்த கடனுத்தி
முழுவ தும்பின்
வந்தபிள்ளை தனக்கல்லால் முனம்பிரித்துக் கொண்டவவ
ருக்கு வாரா. 609

தகப்பனிருக்கும்போது பிரிவினையுண்டானால் அவன் தனக்கெனவும்
தன்னுடைய பெண்ணுக்கெனவும் வைத்தவைபோக
எஞ்சியவற்றைத்தான் பிரித்துக்கொள்ளவேண்டும்

தகப்பனிருக் கிறபோதங் கிஷம்பிரிக்க வேண்டுமெனிற்
றனக்குத் தந்தை
அகப்படிவைத் திடுமுதல்பெண் பிள்ளைதனக் களித்தமுத
லாவி ரண்டாய்த்
தொகைப்படுமிம் முதல்போக நின்றமுத லினைப் பிரிக்கத்
துணிவ தல்லால்
செகத்திலத னையும்வாங்கிப் பகிர்ந்து கொள்ள லாகுமென்று
செப்ப லாகா. 610

பல மாதரை மணந்த ஒருவன் சொத்து

பலமாதை மணத்திருந்த வொருவனுக்குப் பாலனேனும்
பரிபெண் ணேனும்
இலதாகிச் சகவுதர ரும்மிலையே லவற்குமுன்பெண்
டிருந்த மாதே
நிலமீதில் மூத்தவளாய் நினைந்தவர்கள் புருடன்வைத்த
நிதியை யெல்லாம்
உலகோர்சேட் டாங்கிஷம்வைத்தேபகிர்ந்து கொள்ளெனவே
யுரைக்க லாமே. 611

கர்ப்பத்திலுள்ள சிசு பிறந்த பின்னன்றி அதற்குப் பங்கில்லை

பகர்ந்திடு வோர் சகவுதரார் பாரிமா ரெனுமவர்மேற்
பரிமா தேனும்
நெகிழ்ந்துவயிற் றிடைக்கருப்பம் நின்றதறிந் தால்மதலை
நிலத்தில் மீண்டு
மகிழ்ந்திடுமாண் பிள்ளையெனி னதற்குமுள பங்கையிட
வழக்கே யல்லாற்
புகன்றகருப் பமுமிருக்கும் பொழுதினிலே பகிர்ந்துகொளப்
புகல லாகா. 612

விதவையான தாய்க்குக் குடும்பத்தின் கடன் வைக்கலாகாது;
சொத்தில் பாகமுண்டு

பிள்ளைகளங் கிஷம்பிரிக்கில் மங்கலநாண் பிரிந்தவன்னை
பிலத்தில் வைகில்
உள்ளகடன் முழுவதையு மோர்ந்துபிள்ளை பகிர்ந்துகொண்டங்
குற்ற வாத்தி
எள்ளளவுங் குறையாதோர் பங்கனைக்கு மீயெனவே
யியம்ப வேண்டும்
தள்ளையின்சீ தனமுதலிப் பங்கினுக்குச் சமனதிக
மாகச் சார்ந்தால், 613

சீதனம் பெற்றுள்ள தாய்க்குப் பங்குவிதி

அன்னைதனக் காத்தியினி லீவதெனச் சொலுமொருபங்
களிக்க வேண்டா
முன்னவன்சீ தனமுதலிப் பங்குமுத லினுங்குறையில்
மொழிந்த வாத்தி
தன்னிலெடுத் தீந்து குறை தவிர்த்தீந்து பின்புமறை
தனத்தை யெல்லாம்
பின்னமிலாப் பிள்ளைகடாம் பிரித்தெடுத்துக் கொள்ளெனவே
பெரியோர் சொன்னர். 614

நான்கு வருணத்தாரும் தத்தம் வருணத்தினும் தாழ்ந்த வருணத்துப்
பெண்களை மணந்துகொண்டு பிறந்த
பிள்ளைகட்குப் பங்கு விகிதம்

பெருமறையோ னுவன்னப் பெண்களையு மணந்தவள
வளுக்காண் பிள்ளை
பொருவரிதா யிருந்தனையைப்(?) புணர்வேதன் பொருட்பங்கு
புரிய வேண்டில்
தெருளறவே வாத்தியெ லாந்தெரிந்துதச கூறுகச்
செய்தே யத்தில்
மருவுபிரா மணிமகற்கு நாலுகூற்றினைவழங்க
வழக்கென் றேமால்; 615

சத்திரிச்சி பிள்ளைகட்கு மூன்றுபங்கும் வைசிகச்சி
தரும கற்கே
எத்திசையு மறிந்திடவே யிரண்டுபங்குஞ் சூத்திரச்சி
யீன்ற மக்கட்
கத்திலொரு பங்கினையு மாகவிந்த வாறீரஞ்
சான பங்கும்
ஒத்திடவே யளிப்பதிந்த வுலகமெல்லாம் புகழ்வழக்கென்
றோதி னரே. 616

சத்திரியன் மூன்றுவன்னத் தையலையு மணத்திடவத்
தைய லார்க்கும்
பத்திசெய வாண்புதல்வர் பிறந்திருந்தா லவனிதிபங்
காறு செய்தே
அத்தினிற்சத் திரிச்சிபிள்ளை மூன்றுபங்கும் வைசிகச்சி
யருள்பா லர்க்கே
வைத்திடலா மிரண்டுபங்கைச் சூத்திரச்சி புதல்வனுக்கோர்
பங்கு தானே. 617

இகத்திலொரு வைசிகன்ற னிரண்டுசா தியிலுமண
மியற்றி யன்பே
அகத்திலுறும் மதலைகளும் பிறந்திருக்கில் அவனிதிமூன்
றுபங்கா யாக்கிச்
செகத்தில்வந்த வைசிகச்சி மதலைகட்கே இரண்டுபங்கைச்
சேர்க்க வேண்டும்
மிகச்சிறந்தோ ராயினுஞ்சூத் திரச்சிபெற்றோர்க் கொருகூறாய்
விதிக்க லாமே. 618

சூத்திரன்றன் றன்னிலுந்தாழ்ந் திடுங்குலநங் கையை
தோய லாகா [மணத்துத்
பூத்தலமு மறிந்திடத்தன் குலமாதை மணந்தவளால்
போற்றும் பாலர்
ஆத்திகடன் முழுவதுஞ்சேட் டங்கனிட்டாங் கிஷங்கள் முறை
யாக வைத்து
மூத்தவனே பகிர்ந்திய...............க ளொப்பதுவே
முறைமை யென்றார். 619

தன்குலத்திற் பலமாதரை மணந்து பெற்ற மக்களுக்குத்
தாரவீதத்திற் பங்கீடு

ஒவ்வொருவன் தன்குலத்திற் பலமாதை மணக்கவவ
ருதவும் பாலர்
எவ்வளவி னுள்ளதனைத் தாராவி தத்தினிற்பங்
கெடுத்துக் கொண்டு
செவ்வ———னேரா மாதினுக்கு வந்தபங்கைச் சேட்டகனிட்
டங்கி ஷஞ்செய்
தவ்வளவு மவடருமாண் பிள்ளைகளே பகிர்ந்துகொள்வ
தறமென் றூரே. 620

பலசாதியிற் பல தாரங்களை மணந்து பெற்ற பிள்ளைகட்குப் பங்கீடு

ஒருவனே பலசாதி யினிலேயு மொருசாதிக்
கொன்றி ரண்டாய்த்
திருவாரை மணத்தவராண் சேய்களுமே பெற்றிடிலத்
திருவின் சாதிக்
கருதியே யறிந்தவனச் சாதிக்கு மு.....னங் கழறிவந்த
பங்கை வாங்கி
வருதார வீதத்தைப் பகிர்ந்து கொண்டோர் மாதுபங்கை
யவடன் சேய்கள். 621

சேட்டகனிட் டங்கிஷங்க டெரிந்துவைத்துப் பகிர்ந்துகொ
செப்ப வேண்டும் [ளச்
நாட்டிலங்கு நவின்றவிதிப் படியாயக் நாரியரே
நல்கும் பாலர்க்
கூட்டமெலா மங்கிஷங்கள் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று
கூறுகின்றூர்
வீட்டுநெறி யுணர்ந்தோர்கள் வடமொழியால் விளம்புமநு
விக்ஞா னத்தில். 622

பதின்மூன்றுவித மதலைகளும் அவர்களுள் இருபிரிவும்

ஒருவனுக்குப் பதின்மூன்று மதலையுண் டவைதாமே
யெவையென் றேதில்
சருவுதன்பா ரியினிடத்தில் தனக்குதித்தோ னுமௌர
சன்னென் றூகும்;

பிரகுமந்திரு வயனைய மகன்மகனும் புத்திரிகா சுத [2]னெனப் [பேர்
சேர்ந்தோ னென்று ;
பெருகும் வழி தனக்குமக வில்லாமற் பாரிதங்கள்
பெரியோ ரான, 623

தாய் தகப்பன் மாமிதங்கள் மாமனிந்த நால்வருமே
சாற்றுதற்காஞ்
சேய்பெறத்தங் குலத்தானைச் சேர்ந்துபெற்ற சேத்திரச [3]
னென்பா னென்று ;
காய்மதத்தாற் றன்பாரி யொருவரையு மறியாமற்
களவா யோடிப்
போய்மகிழ்தன் சாதியனைப் புணர்ந்துபெற்ற கூடசனும்[4]
புத்திர னென்றே ; 624

தன்பாரி கன்னிகையா யிருக்கையிலே மதர்த்தொருதன்
சாதிக் காரன்
இன்பாயல் மிதித்தணைந்து பெற்றெடுத்தங் கேவளர்கா
னீன [5] னென்றும் ;
இன்பாக மணந்தவனே பரதேசம் போகவல
திறந்து போக
அன்பான பெரியர்சொல விணைந்துபெற்ற பவுநற்பவ
னு[6]னு னென்றே ; 625

சுயசாதிப் பிள்ளைகளில் மூத்தபிள்ளை யிளையபிள்ளை
துணையுந் தள்ளி
அயலாக நடுவிலுள்ள பிள்ளைகளி லுறவின்முறை
யறியத் தத்து[7]த்
தயவாகக் கொண்ட தத்த னென்று;தன்சா தியில்விலைக்குத்
தானே கொண்டாங்
கியல்பாகத் தத்தினகி ருதனென்னு [8] பெயருளனு
யிருப்பா னென்றே. 626

ஆதரிப்பா ரொருவரற்றூற் றூனகை வந்துசேர்ந்
தவனை யன்பாய்ப்
பூதலத்தோ ரறிந்திடத்தத் தெடுத்தகிருத் திரும[9]னென்று ;
புகலுஞ் சாதி

பேதமற்றான் தான்மாத்திர மிருந்து கொடுக் கத்தத்தும்
பிள்ளை யான
காதலுற்றோன் சுயந்தேத்த [10] னெனும் பெயரை யுடையவ
[னென்
றாகுங் காணே; 627

கன்னிகையா யிருக்கையினுல் தன்சாதிக் காரனுடன்
களவாய்க் கூடி
மன்னியசூ லுடனிருக்க மற்றொருவன் தானவளை
மணத்த பின்பு
முன்னுறுசூ லில்வருச கோடசனென்[11] றும்சாதி
முறை யொன்றாகப்
பின்னமுறு தந்தைதாய் தள்ளிவிட்ட பிள்ளையைத்தான்
பேணித் தத்து, 628

கொண்டஅப வித்தனென்று; [12]தாசியைவே றொருவன்கூ
டாதே வைத்துக்
கண்டவள்பாற் றனக்குதித்த தாசிபுத்திர[13] னென்றாகக்
கருதி யிங்கே
விண்டுவந்த பாலர்பதி மூன்றுமே இதிலேசேத்
திரசன் தத்தன்
பண்டுசொல்கி றீதன்கிருத் திரிமன்சுயந் தத்தனிங்கட்
பால ரோடு, 629

சாற்றுமப வித்தனிந்த வாறுபிள்ளை களுக்கும்பே
ரசவ ரன்று ரென்றார்
நாற்றிசையு மறிந்திடவே கூடசன்கா னீனன்பவு
நற்ப வனின்பின்
ஏற்றுசகோ டசனிந்த நால்வரின்பேர் அசவ ரன்று
ரென்று சொன்னார்;
ஊற்றமிகு மறிவுடையோர் பிள்ளையின் பேதங்க ளிதென்
றுட்கொள் வீரே. 630

தந்தை சொத்து மதலைகட்கு முன் கூறிய வரிசைக் கிரமத்திற்
சேரும் என்பது

அங்கிஷங்கள் பிரித்தபிற கொருவன்முத றனௌர
சன்ருன் கொள்ள ;
இங்கிவன்ற னில்லையெனிற் புத்திரிகா சுதனேற்க;
இவனு மின்றேற்
பங்கமிலாச் சவறன்ற டன்பாரி னேர்தாசி
பால ஞேடு
துங்கமுறு மெழுவருமுன் சொன்முறையே யோரொருவன்
சொத்தை யேற்க ; 631

இவ்வேழு பிள்ளைகளு மில்லையெனில் சவரன்ற
னெனப்பேர் நான்கும்
ஒவ்வொருபிள் ளைகளாலாதி வந்தமுறைப் படிக்கேதா
னுடையா ராவர் ;
செவ்வாமித் தந்தை சொத்தை முன்னுரைத்தோன்
செப்ப வேண்டும் [முன்னெடுக்கச்
அவ்வாறி லவனிலையேற் பின்னுரைத்த பிள்ளைகள்சொத்
தெடுக்க லாமே. 632

புத்திரிகா சுதனுக்குப் பின்பு பிறந்த பிள்ளைகட்குப் பங்கு

புத்திரிகா சுதன்றனைநாற் பேரறியப் புத்திரனென்றே
புகன்றெ டுத்து
வைத்திருந்த பிறகௌர சன்பிறந்தால் வைத்ததந்தை
மரித்த பின்பு
சொத்தினிற்சேட் டாங்கிஷமற் றெருபங்கே புத்திரிகா
சுதனுக் கீந்து
பத்தியுடன் மற்றவற்றைச் சகவுதரர் விதிப்படியே
பகிர்ந்து கொள்வார். 633

ஔரசர்கள் பின் பிறந்தால் எல்லா மதலைகட்கும் பங்கு

சவரன்ன ருடன்ருசி புத்திரனே மில்லொருவ னைமகவாய்த்
தான்கொ ளப்பின்
புவனமகி ழௌரசர்கள் பிறந்திடிலிப் புத்திரர்மும்
மூன் றுபங்கும்

இவர்கள்வரு முன்னெடுத்தோன் றனக்கொருபங் கினையும்
யெல்லாச் சொத்தும் [வைத்தே
அவரவர்கள் கொள்வதுவே யறமெனமுன் முனிவரெலா
மறைந்த வாறே. 634

ஔரச புத்திரற்கும் அசவரன்னருக்கும் பங்கீடு

அசவரன்னர் நாலிலொரு பிள்ளையினை யன்பாகக்
கொண்ட பின்பு
திசையெங்கும் புகழுமௌ ரசன்பிறந்தாற் சொத்தையவன்
சேர்த்துக் கொண்டு
பிசகின்றி அச வரன்னன் றனக்குண்ண வுடுக்கமட்டும்
பெரிதா யீயென்
றிசைக்கின்ற மொழிமுனிவோ ரனைவருமே வடமொழியா
லியம்பி னரே. 635

சகோதரன் பிள்ளையின் சிறப்பு

அங்கிஷம்பி ரிக்குமுனம் சகவுதரர் களிலொருவ
னுருக் கேனும்
தங்கியவாண் பிள்ளையுறிற் பிள்ளையற்றோர் தங்கள்மகள்
பிள்ளை யாதிப்
பங்கமிலாப் பின்னிரண்டு பிள்ளையையு முறவின்முறை
படித்தோர் காண
விங்கிவனென் முதறனக்கே பிள்ளையெனச் சொலியெடுப்ப
தேறு தென்றோர். 636

சேட்ட கனிட்டர்கள் பங்கு பெறுமுறை

சேட்டகனிட் டங்கிஷங்க ளமைப்பதற்கு வகைபுவியிற்
றெரியச் சொல்வாங்
கூட்டுசொத்தி லிருபதிலோர் கூறுமூத் தவற்குநாற்
பதிலோர் கூறு
நாட்டவதற் கிளையவற்கே யெண்பதிலோர் கூறுநவில்
மூன்றும் பிள்ளைக்
கீட்டவிந்த விதிப்படியே பாதிபா தியைச்செய்தங்
கிளையோர்க் கீயே. 637

சகோதரர்களின் உரிமை

இப்படியே சேட்டகனிட் டங்கிஷங்க ளீந்துமற்ற
விருப்பை யெல்லாம்
அப்பொழுதே சமபாக மாய்வகுத்துச் சகவுதர
ரனைத்துங் கொள்ள
ஒப்பியந்த வாறுபிரி வாகுமுன மொருவன்ருன்
பொதுவாஞ் சொத்தைச்
செப்பயுக்த மாஞ்செலவி லழிக்கில்மற்ருே ரதைத்தடுத்துச்
செப்ப லாகா. 638

ஒரு சகோதரன் தந்தை சொத்தில்
தனக்குப் பங்கு வேண்டாமென்று கூறுதல்

ஒருவயிற்றிற் பிறந்தவரி லொருவன்ருன் றன்றிறத்தா
லொதுங்கித் தந்தை
பெருகுதன மனைத்துமெனக் கேவேண்டாம் நீங்களே
பெறுவீ ரென்னில்
கருதிமற்ருே ரதையேனு மவற்கீந்து கையதனு
லென்பாகத்தில்
வருவதெலா மேன்றுகொண்டே னெனவெழுதி
[வாங்கிடிற்பின்
வழக்கே யில்லை. 639

தந்தை உதவியினுல் பெருக்கின சொத்துக்குச்
சகோதரர்கட்கு உரிமையுண்டு

தந்தைபயிற் றினதொழிலாற் றந்தைமுத வீந்துபயிற்றும்
விந்தை தன்னுல்
எந்தவிதத் திலுந்தான்சோ றிடுமெவர்குச் சகவுதர
ரிடத்தாற் சென்று
சிந்தையினுற் கற்றதொழி லாற்றேடுந் திரவியத்தைப்
பொதுவிற் சேர்த்தே
அந்தமுறச் சகவுதரர் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்றே
யறைகின் ருரே. 640

இளையவர்கள் தாமே சம்பாதித்தது அவரவர்கட்கே ;
மூத்தவன் சம்பாதித்ததில் பாதியவனது

இம்மூன்று விதத்தையும்விட் டிளையவர்க ளீட்டுபொரு
ளீட்டி னோர்க்கே ;
அம்மூன்று விதத்தையும்விட் டண்ணனே தேடுமுத
லதனிற் பாதி
தம்பிதாய்க் கையாளக் கொடுத்துநின்ற பாதியைத்தம்
பொதுவிற் சேர்த்துச்
செம்மையா யனைவோரும் விதிப்படியே பகிர்ந்துகொள்ளச்
செப்ப லாமே. 641

பிறர்கவர்ந்த சொத்தைத் திருப்புகின்றவருக்குக் காற்பங்கு

நன்செய்புன்செய் தோப்புமனை பொதுவிலுறும் நாளதிலோர்
பலவா னேனென்
வன்புசெய்தங் கெடுத்திருக்க மலைந்துசக வுதரர்களில்
மற்றோர் கூடி
அன்பனொரு வனைப்பார்த்தே யதைத்திருப்பி நீயேகை
யாள்வா யெங்கட்
கென்றுமது வேண்டாமென் றேசொலவவ் வுத்தரனை
யிணங்கிக் கேட்டு, 642

தம்பியெனுந் தமையனெனுஞ் சண்டையிட்ட......
சார்ந்த தெல்லாம் [பலவான்பாற்
அம்புவியில் நால்வர்முனங் கரையேற்றி யதைத்திருப்பி
வந்தா லத்திற்
கொம்பனையாய்! நாலிலொரு கூற்றினையே திருப்பும்பிள்ளை
கொள்ள வேண்டும்
வெம்பலிலா மூன்றுபங்கைப் பொதுவாக்கிப் பகிர்ந்துகொள்ள
விதித்தார் முன்னோர். 643

பிரிவினையின்பின் பிறந்த தம்பிக்கும் சகோதரன்
மகளுக்கும் தாயபாகம்

*சகவுதரர் பிரிக்கையிலே தாய்வயிற்றிற் கர்ப்பமுற்றுத்*
*தந்தை துஞ்சி*
*அகமலேவாம் பின்பிறந்த வவற்குமூ வையாண்டாம்*
*வரைக்கண் ணன்மார்*
*செகமறிய முன்பிரித்த முதலில்யுத்த மாஞ்செலவைத்*
*தெரிந்து தள்ளி*
*மிகவிருப்பைச் சரியாய்ப்பங் கிட்டிளேயோர்க் கீவதுவே*
*விதியென்ருரே.* 644

*பங்கிடுமுன் மரித்திருந்த சகவுதரன் பாரிமுன்கர்ப்*
*பிணியாய் வைகி*
*அங்கிஷமே பிரித்தபின்பு பெற்றமகன் றனக்கு முற்பாட்*
*டறைந்த வாறே*
*சங்கையிலா தவற்குமூ வைத்தாண்டுஞ் சரியாய்ப்போ*
*யதற்கு மேலே*
*தங்களேப்போற் சமபாக மாகவைத்துச் சகவுதரன்*
*மகனுக் கீயே.* 645

சகோதரர்கட்கு மணவினையும் பாகப்பிரிவினைகளும்

*பிரிக்கையிலே சிலர்மணத்துப் பிள்ளேகளும் பெற்றிருக்கப்*
*பின்னேருக்கு*
*விரித்துமணம் புரியவின்றேல் மணமவரைச் செய்துபங்கை*
*மருவல் ஞாயம்*
*தெரித்தவிதற் கிணங்கிலேயேல் மணம்வரையிற் செலவும்*
*சிறுவற் கீய* [பங்குஞ்
*விரித்து மணம் பின்சுபசோ பனச்செலவை யொத்திய*
*விதியே இல்லே.* 646

மணமாகாத பெண்களுக்குரிய பங்கு விகிதம்

*மணவாத சகவுதரப் பெண்களுக்குஞ் சமபாகம்*
*வைத்தப் பங்கில்*
*குணமாக நாலிலொன்றை மணஞ்செய்யா த...வட்னக்குக்*
*கொடுத்து விட்டுத்*

துணையானே னவளவடன் பங்கினிலே மூன்றுபங்கைத்
தொடுத்துக் கண்ட
பணம்யாவும் பொதுமுதலிற் சோத ருடனே பகிர்ந்துகொள்ளப்
பகர லாமே. 647

பிரிவினையிற்காட்டாது ஒளித்த பொருளுக்கு உரிமை

பாகமிடில் மூத்தவனே மறைத்தமுத லினையிளையோன்
பார்த்துக் கண்டால்
சேகரமா மம்முதலைக் கண்டவனு மவன்றனக்குச்
சிறியோர் தாமும்
தாகமுடன் பகிர்ந்துகொள்ளத் தம்பிமா ரில்லையெனிற்
கண்டோற் குத்தான்
யூகமிலா விளையோர்கள் மறைக்கமுன்னோர் கண்டமுதல்
பொதுவா யோதே. 648

பிள்ளைகளில் சொத்துக்குரியராகாப் பதினால்வர்

இவ்விரண்டு பிரிவினுக்குஞ் சேட்டகனிட் டங்கிஷங்க
ளில்லை யென்றார்
செவ்வியர்க ளுடனுணில் விபதித னவனீன்ற
சேய்சப் பாணி
கவ்வையிலாப் பித்துறுவோன் காணிலசாத் தியரோகி
கருத்தி னாலே
ஒவ்விபித மகிதத்தை யுணராதான் குருடனெ
வுதித்தோன் பூவில், 649

சன்யாசி யாய்ப்போனோன் தந்தைதனக் காகாதான்
மனத்தினாலும்
உன்னாத பாதகங்க ளஞ்சிலே யொன்றுசெய்தோ
னும்பா பிட்டன்
என்னாளு மூமைசெவி டினையுடையோ னிப்பதினா
லுவிதத் தார்க்கும்
முன்னோர்க ளங்கிஷமே கொடுக்கவிதி யில்லையென்று
மொழிகின் றாரே. 650

குறையுடையோர்க்கு உணவு முதலியனவும் அவர் பிள்ளைகட்குப் பங்கு உரிமையும்

இப்பதிநான் காம்பேரில் மாபாத கன்றவிர
வேனை யோர்க்கும்
செப்பமுட னனமாடை மாத்திரமே யீயவிதிற்
பதிதன் சேயை
அப்புறமாய்த் தள்ளிமற்றப் பதின்மூவர் தமக்குமிந்த
வவகுண மில்லா
தொப்பநல மானபிள்ளை பிறந்திருந்தாற் பங்கிவர்கட்
குண்டென் றுரே. 651

பெண் அலிகளுக்கு

பெண்ணலிதன் சகவுதரி யாயிருந்தால் முனம்பகர்ந்த
பெண்கள் போல
நண்ணுபங்கை யீந்துவிட்டாற் போதாது நன்மொழியாய்!
ஆடை நாளும்
உண்ணவமு தையுமணஞ்செய் வரைக்கு மீந் தேமணஞ்செய்
துதவ வேண்டும்
எண்ணுசகோ தரன்பாரி யலியேலா டையுமணமும்
பொது விலீயே. 652

கெட்டநடத்தையுடைய மனைவிக்கு

ஒருசகோ தரன்பாரி விபசரிய நடையைமனத்
துட்கொண் டாலும்
பெருகுநே யக்கணவ னவனுடனே பிறந்தவர்கள்
பெரியோர்க் குள்ளே
கருதியடங் காநடையை யுடையவளா மெனக்குடும்பங்
கண்டா ளேனும்
வெருவியட மொழிபேசித் துரத்துவதல் லாற்கொடுக்க
வேண்டா மொன்றும். 653

பாட்டன் முதலின் பங்கீட்டு முறையும் தகப்பன் சம்பாதித்ததன் பங்கீட்டு முறையும்

பாட்டன்முத லினமக்கள் பிள்ளைகளெல் லாம்கூடிப்
பகிர வேண்டில்
நாட்டினிற்றன் றகப்பன்மார் வீதத்தில் விதிப்படியே
பகிர்தல் நன்றும்
பாட்டன்முத லுடன்றகப்பன் மார்முதலை யுஞ்சேர்த்துப்
பகிரவேண்டில்
நாட்டியசேட் டங்கனிட்டாங் கிஷங்களின்றித் தந்தைமுறை
பகிர்தல் நன்றே. 654

பாட்டன்முத லுடன்றகப்பன் மாரில்மூத் தவன்றனைப்
பரிந்து தேடிக்
காட்டுமுதல் கூடில்முனங் தனியேபோய்த் தேடினவன்
காதற் சேய்க்கு
வாட்டடங்கண் மாதே!தன் றகப்பனைப்போற் பாதிமுதல்
தனதில் வாரா
கூட்டுமுதல் சமபாக மாய்த்தகப்பன் மார்வீதங்
கொள்ள வேண்டும். 655

பாட்டன் ஓரவஞ்சனையாகப் பேரர்கட்கும் பங்கிட்டிருந்தால் மாற்றலாம்

பெரியவராம் பாட்டர்தாம் பேரப்பிள் ளையிற்சிலர்மேற்
பிரீதி யாகிச்
சரியாவே யீயாமே வேற்றத்தாழ் வாய்ப்பகிர்ந்து
தானீந் தாரேல்
அரியகலை கற்றுணர்ந்தோர் முனமாக வதையழித்துச்
சமபங் காக
உரிமையுறு மகன்சிசுக்கள் பகிர்ந்துகொள்ள லாகுமென
வுரைக்க லாமே. 656

பாட்டன் கொடுத்த முதலுக்குச் சிறப்புவிதி

உயர்பாட்டன் கொடுத்துவெகு நாட்சென்ற முதலேமக
　　ளொருவன் மற்ற
இயல்பான சகவுதர ருத்தரவின் மேல்வாங்கி
　　யிருப்பாய் வைத்தே
அயலாகப் பகிருமுன்னே துஞ்சின லதிற்சேட்ட
　　கனிட்டாங் கிஷங்கள்
வயபேரப் பிள்ளைகள்தாங் கொண்டுமற்ற முதல்சமமாய்
　　வாங்க லாமே. 657

பேரர்களுக்குள் உரிமை

தேடியே பாட்டனுத வியகேத மாமுதலினையே
　　தெரிந்தோர் பேரன்
நாடிமற்றப் பேரன்மா ருத்தரவின் மேல்வாங்கி
　　னனே யேனும்
கூடியதைச் சமபாக மாய்ப்பகிர்ந்து கொள்ளுவது
　　வழக்கே யல்லால்
நீடியசேட் டங்கனிட்டாங் கிஷங்கள் வைத்துப் பகிர்ந்துகொள்ள
　　நினைக்க வேண்டா. 658

இப்படியே தாயமா தியைப்பிரிக்கு மிலட்சணங்க
　　ளியம்பி னேமேல்
மைப்படிகண் ணாய்! தாயின் சொத்தினைப்பி ரிக்கும் வழி
　　வடநூ றன்னில்
செப்பியவா றேதமிழா லியம்புகின்றே னறிவுடையோர்
　　செவியுட் கொண்டு
தப்பிநட வாதபடி மாந்தருக்கெந் நாளுமிதைச்
　　சாற்று வீரே. 659

தாயமாதி பொருளைப் பிரிக்கும் லட்சணம் முற்றும்.

# 31. தாய் சொத்தைப் பிரிக்கிற லட்சணம்

---

தாயின் சொத்துக்குச் சீதனம் என்பது பெயர். இஃது, ஒரு பெண்ணுக்கு அவள் தந்தை, தாய், மாமன், மாமி, சகோதரன், மற்ற உறவினர், கலியாண காலத்தில் பெண்ணுக்கு இவ்வளவு கொடுப்பேனென்று கூறும் கணவன், இவர்கள் கொடுக்கும் சொத்தாகும். இவற்றுள் கணவன் கொடுப்பதாகச் சொன்ன பணத்தைக் கொடாமல் அழிவழக்குக் கூறினுல், அதனை வட்டியுடன் வாங்கிக் கொடுக்க வேண்டியது அதிகாரியின் கடமை.

பேசிய சீதனம் கொடுக்கப்படுமுன், பெண், மகவில்லாமல் இறந்துவிட்டால், தந்தை மருகருக்குக் கொடுப்பதாகச் சொன்ன ஆடை, ஆபரணம், சயனங்கள், வாகனங்கள் ஆகியவற்றை அவருக்குக் கொடுத்துவிடவேண்டும். இவளுக்கு அளிப்பதாக இவள் பெற்ருேர் கூறியிருந்த தனத்தை, இவள் இறந்தால், இவளுடைய சகோதரிகளுக்கு அளிக்க வேண்டும்; அவர்களில்லாவிட்டால் இறந்தவளின் சகோதரருக்குப் போகவேண்டும். இறந்தவளுக்கு ஓர் ஆண் மகவு இருந்தால், சீதனப் பொருளெல்லாம் அம்மகவையே சாரும்.

ஆபத்து வேளையில் கணவன் மனைவியின் சீதனப்பொருளைத் தனக்கு உபயோகித்துக் கொள்ளலாம். ஆனுல் அதனை அவன் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். ஆயினும், இவ்விஷயத்தில் வியவகாரம் கூடாது; பெண்ணின் கற்புக்கு வியவகாரம் பொருந்தாது.

பரிசம் கொடுத்து மணம் நிகழுமுன் பெண் மரித்துவிட்டால், சாவுச்செலவு போக எஞ்சியதை, ஆண் வரிசைப்படி எடுத்துக் கொள்வர்.

திருமண வகைகள் எட்டு. அவை பிரமம், தெய்வம், ஆருஷம், பிராசாபத்யம், (இந்நான்கும் அந்தணர்க்கு உரியன); இராக்கதம் (க்ஷத்திரியர்க்குரியது); அசுரம் (வைசியர்க்குரியது); பைசாசம் (நான்காம் வருணத்திற்குரியது); காந்தருவம் (க்ஷத்திரியர் முதலியோர்க்குரியது); இவ்வெட்டு மணங்கள் செய்யும் விதங்களும் அவற்ருல் உண்டாகும் நன்மைகளும் இரண்டு செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன.

முதல் நான்கு திருமணங்களில் பெண் மரித்தால் அவள் சீதனம் அவளுடைய கணவனைச் சாரும்; அவனுமில்லையானால் அவளுடைய ஆண் பிள்ளைகள் அதனைப் பகிர்ந்து கொள்ளலாம்; அவர்களும் இல்லாவிட்டால் அது தாயாதிகளைச் சாரும். பின் நான்கு வகை மணங்களில் பெண் மரித்தால் அவள் சொத்து அவள் அன்னையைச் சாரும்: அல்லது தந்தையைச் சாரும்: அவனும் இல்லையானால் பெண்களைச் சாரும்; அப்படிப் பெண்களைச் சாரும்போது சேஷ்ட கனிஷ்ட முறை வைத்து ஏற்கவேண்டும். இவ்வாறு பெண்களும் இல்லா விட்டால், மகன் வயிற்றுப் பெயர்த்திகளுக்குச் சமபாகமாகப் போகும். அவர்களும் இல்லையானால் சகோதரிமார், அவர் பெற்ற பெண்கள் இப்படிப்பட்ட பெண்வழியை அது சேரும். அவர்களும் இல்லா விட்டால் சக்களத்தி பெண்களுக்கு அது போகும். இவ்வளவும் இல்லாமற் போகுமானால், அவள் சொத்து தன் ஆண் சந்ததிக்கும், அதுவும் இல்லாவிடில் சக்களத்தி மகனுக்கும் போம். இவ் வெட்டுவகை மணங்களுள் பெண் தான் உயிருடனிருந்து தன் சீதனத்தைப் பிரிக்க விரும்பினால் அவள் தன் மக்களுள் ஆண், பெண் என்ற வேற்றுமையில்லாமல் தன் இஷ்டப்படி பிரிக்கலாம்.

சீதனமுடையவள் வார்சில்லாமல் இறந்தால் அவள் சொத்தை அவளுடைய சக்களத்திகள் எடுத்துக்கொள்ளும் முறை, செய்யுள்கள் 669-70இல் சொல்லப்படுகின்றன. அவ்வாறு சக்களத்திகளும் இல்லாவிட்டால், மணம் செய்த மறையோனுக்கு உரிமை வருகிறது; அவனும் இல்லாதவிடத்து ஆண் வார்சுகளின் பிள்ளைகள், பெற்றோர், மன்னன் என்ற முறையில் உரிமை செல்கிறது.

இப் பிரிவினை (தாய் சொத்து பெண்களுக்குப் போம்போது) இலிகித முறைப்படி எழுதப்பட வேண்டும்.

சீதனம் என்பது யாது

*தாய்சொத்தி னுக்கு முனிவோர்க ளுஞ்சீ*
*தனமென்று பேர்முன் னிடுவார்*
*நேயத்தி னற்சீ தனமாவ தோர்பெண்*
*நெறிதாய் தகப்ப னிவரும்*
*ஏயத்தன் மாமி யுடன்மாம னென்று*
*மிகழாச்ச கோத ரனுமே*
*தேயத்தில் மற்ற வுறவின்முறைக ளிடுசொன்ன*
*மேசீ தனமே.* 660

கூறிய சீதனத்தைக் கொடுக்க மறுத்தால் நீதிபதி செய்யவேண்டியவை

கலியாண மேபு ரியும்வேளை யந்தக்
கனிகைக்கிவ் வளவு சொனம்நான்
சலியாம லீகு வேனென்று பின்பு
மணமேசெய் தானதன்பின்
மெலிவால தீய விலையென்று வந்த
விவகார மேதெ ரிந்து
நலிவே வாராமல் முதலைக்கொ டென்று
நவில்வாய வற்கு நடுவாய். 661

நிதியே யிருக்க நிதியில்லை யென்றும்
நிதியீவ னென்றும் முனம்நான்
மதியா லுரைக்க விலையென்றும் வந்த
மதிகேட னஞ்சு மவதிசெய்
திதினல்வி ளைந்து வரும்வட்டி தானு
மிசைவாய் முனேசொல் முதலும்
அதிகாரி வாங்கி யிடவேண்டு மீது
மவள்சி தனத்தின் முதலே. 662

சொன்ன சீதனங் கொடுக்கப்படுமுன் பெண் இறந்தால்
செய்யவேண்டுவது

வாக்காலு ரைத்த முதலீயு முன்பு
மணமான பெண்ம கவிலா
தாக்கைக ழிந்து விடுமே லுரைத்த
வதையன்னை தந்தை கொண்டு
நீக்காத வன்பில் மருகற்கு ரைத்த
நீளாடை யாப ரணமும்
தாக்காது ரைத்த சயனங்கள் வாக
னமுமே யவற்கு தவுவாய். 663

அவளன்னை தந்தை கொண்டங் கிருந்த
முதலை மரித்த மகளாம்
இவளின் சகோத ரிகளுக் களிக்க
இவர்தாமு மில்லை யெனிலே,

தவமுன் புரிந்த தமையன் பினேவந்
தவனுக் களிப்ப தற்கென்று
உவமங்க ளற்ற பெரியோர்முன் னூலி
லிதுவே யுரைத்த விதியே. 664

'இவன் பிள்ளைகளுக்கு' என ஈந்த பொருள்

அம்மாதொ ராண்பெண் தமையே பயந்த
வதன்மேல் மரிக்கில், முனமே
நம்மாலி தீது தருகின்ற தென்று
நவில்சீத னங்கள் முழுதும்
இம்மாநி லத்தி லிவள்பிள்ளை கட்கீ
தெனவீய வேண்டும் இதுதான்
சொம்மான சீத னமுமான தல்ல
மதலைகள் வந்த சொலிதே. 665

சீதனப் பொருளைப் புருடன் தன் ஆபத்து வேளையில்
எடுத்துக் கொள்ளலாம்

தலைவற் கிடுக்கண் வரும்வேளை பெண்டிர்
தனமே யெடுத்த ளித்தால்
அலைவற்ற சிந்தை மகிழ்வா லளிக்கி
லழகாம தளிக்க விலையேல்
உலகத்தி லந்த முதலைக்கொ டென்று
விவகார மாக வுரையார்;
கலகத்தி லந்த முதல்கேட்ட மாது
கற்பான பெண்ணு மலவே. 666

பரிசங் கொடுத்த பணம்

பரிசங் கொடுத்து மணமாகு முன்பு
பகர்பெண் மரித்து விடிலே
தெரிவைக் களித்த பரிசப் பணத்தி
விழவிற் செலுஞ்செ லவுபோய்ப்
பிரிவுற்று நின்ற முதல்தன்னை யேற்ற
பெண்வீட்டு ளோர்கள் தரவே,
உரிமைக்கு ளாணின் வழியாயு ளோர்க
ளுரையாத தேற்க வுடையோர். 667

## திருமண வகைகள்

### பிராம மணம்.

மின்னூர் தமக்கு மணமே யியற்றும்
விதியென்ன வென்று வினவில்
நன்மாது தந்தை மனமே பொருந்தும்
நலவற்கும் மாதி வளுக்கும்
பொன்னுடை பூண்டு புகழ் கன்னி யாதானம்
புரியிற் பிராம மதுவாம்
சொன்னூர்மூ வேழு தலைகாப்ப னேயித்
தோகைப யந்த புதல்வன். 668

### தெய்வ மணம்.

ஓமத்தி னுக்கு நேமித் திருந்த
ஓரிருத்து வுக்கு முன்போல்
ஏமத்தி னுமெல் லாடைத் திரத்து
மிழையான்ம ணுள னிவரைத்
தாமற்பு தஞ்செய் திடுகன்ய தானம்
தருமீது தெய்வ மணமே
சேகத்தி லிங்கு வருபால ரீரேழ்
செனனத்தர் தீங்கு களைவார். 669

### ஆருஷ மணம்

மருகன்னி டத்தி லிருகோ விலைப்பொன்
வழுவாமல் வாங்கி யதனுல்
திருவாளி னுடை. யணியுந் தரித்துத்
திருவின் மணச்செ லவுசெய்
தொருகன்யா தான மிடில்ஆரு ஷம்மில்
வொருமாது பெற்ற புதல்வன்
இரு மூன்ற தான தலையின்முறைக்கு
மின்பங்கொ டுப்ப னிவனே. 670

பிராசாபத்ய மணம்

நன்மாம ஞுணின் மதலை யிலாது
நலிவாகி யாணின் மதலை
முன்னுக வந்த வதையேயெ னக்கு
மகவாக வீய மொழியென்
றன்னுளுக் கந்தவரமென் றவற்கு
மகடன்னை யிந்த வதுவே
சொன்னர் பிராசா பத்யமி வன்சி
சுவுமாறு பேரை விடுவான். 671

இந்நான்கும் அந்தணர்க்குரியன

இந்நால் விதத்தி லேசெய் மணங்க
ளியார்செய்வ தென்று வினவில்
முந்நூல் தரிக்கு மறையோர்கள் செய்யு
முறையென்று நூல்கள் மொழியும்
சொன்ன லவர்பெற்ற சிசுவேழு மூன்று
தொகையேழி ரண்டி ராறு
தன்னூர்வ தந்தை வரையீன்று ளோரை
யடைவேத வத்தில் விடுமே. 672

இராக்கத விவாகம் க்ஷத்திரியருக்குரியது

மணவாளன் மாதின் வழியைச்செ யித்து
மகளைக் கவர்ந்து மணமாம்
குணமேலி ராக்க தவிவாக மாகுங்
கொளுமிந்த மாதின் மதலை
தணவாது மூன்று தலையின் முறைக்கு
தவுவான் தவத்தை நகுல
னிணையான க்ஷத்திரி யரேயிவ் வாறி
லியற்றும் மணஞ்செய் திடுவோர். 673

அசுரமணம் வைசியர்க்குரியது

இச்சொன்ன மீயி விடுவேனென் மாதை
யெனச்சொல்லி ஏற்ற நிதியை
வச்சந்த மாதி னணியும் மணத்தி
னளவும் வழங்கி லசுரர்

மெச்சும் விவாக மிவன்பிள்ளை மூன்று
தலையின் முறைக்கு வழிசெய்
தச்சம்ம கற்று மிதுவைசி கன்செய்
தணிசேரு கின்ற மணமே. 674

பைசாச மணம் நான்காம் வருணத்திற்குரியது

கரவாக வஞ்ச னையதாக மாது
கண்ணே துயின்ற காலம்
விரைவாய்க்க வர்ந்து புரியும் மணத்தின்
விளைபேர்பை சாச மணமே
தரைமீ தவட்கு வருபாலன் மூன்று
தலையின்மு றைக்கு தவுவான்
திரமாக வந்த வழிச்சூத் திரன்செய்
திடலா மணங்கள் செயலாம். 675

காந்தருவ மணம் க்ஷத்திரியர் முதலியோர்க்குரியது

மாதும் மணாளன் மனதுங்க லந்து
மணமாக வந்த வழியெப்
போதுஞ்செய் காந்த ருவமா மிதிற்கொள்
புதல்வோர் தகப்பன் வரையில்
ஏதுந்த வங்க ளிலை யேனு மூவ
ரீடேற வேசெய் திடுவார்
ஓதுமிவ் வாற்றை யுயர்சத் திரியாதி
யுளசாதி யோர்செய் துறலாம். 676

முதல் நான்கு மணத்தின் வந்த மனைவி மரிக்க
அவள் சொத்துக்கு உரியவர்

இப்பெண்பி ராமி யவிவாக முந்தெய்
வவிவாக மீது மிலையேல்
தப்பின்றி யாரு ஷவிவாக மும்பிர
சாபத்திய மான மணமும்
செப்பிந்த நாலி லொன்றில் மணத்த
திருவேம ரிக்கி லவள் சொம்
வெப்பம் பொருந்து தலைவன் னெடுக்க
விதியம்ம ணாளற் கிலையேல், 677

அம்மாதி னுண்பின் ளைகளேவி தித்த
வடைவிற் பகிர்ந்து சொளலாம்
இம்மாநிலத்தி லிவரில்லை யென்னி
லிவளை மணந்த தலைவன்
தம்மார்வ முங்கொள் தாயாதி கொள்வர்
சாற்றிந்த வாற்றி லவன்சொம்
அம்மாறும் ஆணின் வழிகொள்வ தன்றி
யயலோர்கள் கொள்வ தலவே. 678

பின் நான்கு மணத்தின் மனைவியரின் சொத்துக்கு
உரிமை பெண்வழிக்கே

அன்பாயி ராட்ச தவிவாக மன்றி
யசுரர்வி வாக மதுவும்
இன்பாய்ப்பை சாச மணங்காந் தருவ
மின்னுல் மணஞ்செய் திடுவான்
துன்பாய் மரிக்கி லவள் சொத்தை யன்னை
சோதித் தெடுப்ப ளிலையேற்
பொன்ரூத வார்வ முறுதாதை கொள்வர்
புகல்தாதை போயும் விழிலே, 679

அம்மாது பெற்ற பெண்மக்கள் முன்ன
மாணுக்கு ரைத்த வடைவில்
இம்மாத்தி ரங்கள் சேட்டங்க ளிட்டங்
கிஷமென்ற தேற்க விதியாம்
சொம்மே யெடுக்க விவளில்லை யென்னில்
மகன்பெற்ற தோகை யர்கடாங்
தம்மால் நிரந்து சமபங்கு வைத்த
தைத்தா னெடுப்ப தறமே. 680

பெற்றபெண் மாரின் வழியும் பிறந்த
பின்பாஞ்ச கோத ரிக்கே
மற்றச்ச கோத ரிகளும் மரிக்கி
லவர்பெற்ற மாதர் வழியாய்ப்

பற்றுற்ற பெண்ணின் வழிகொள்வ ரிங்கு
பகரும் வழிப்பெ ணிலையேல்
பொற்புற்று வாழ்சக் களத்தி கொள்வர்
பின்கொள்வர் புத்தி ரிகளே. 681

இம்மூ வகைப்பெண் வழியு மிறக்கி
னிவள்சொத் தினைத்தா னுண்சேய்
சொம்மே யெடுக்க விவனும் மிழக்கிற்
றுணைமாதி னுண்கள் கொளலாம்
அம்மா றிவ் வாணின் மகவும்மி றக்கி
லவள்சக்க ளத்தி மகனே
தம்மார்வ மாக வவடன் றனங்கள்
தமையேகை யாள்வ தறமே, 682

மனைவியரின் சீதனச்சொத்து ஆண் பெண் மக்களுக்குச் சமம்

எட்டாய்வி வாக வகைகள் விரித்த
விதிலெவ் விதத்தி லெனினும்
கட்டாய் மணத்த வவடா னிருந்து
கருதித் தன்சீ தனமதைத்
தட்டாம லீய வருகின்ற போது
தன்பெண்ணு மாணு மொருநேர்
பட்டாள வங்கு சமபா கமாய
பகிர்வா யளிப்ப தழகே. 683

நால்வருண முறையில் சக்களத்திகளின் சொத்துப் பிரிவினை

முன்சொன்ன நூலின் முறைவேத னுதி
முதிர்சாதி நாலில் வருவாள்
தன்பண்பி னுல்ம ணஞ்செய்த வர்க்குத்
தான்பெற்ற பெண்க ளிலையேல்
அன்பொன்று சத்தி ரியமாது சொத்தை
யவடன்ம ணுளன் மனதில்
இன்பொன்று வேத சக்கள த் திகொள
விதுவே விதித்த படியே. 684

செட்டிச்சி சொத்தை யவள் சக்களத்தி
திகழ்சத்தி ரிச்சி கொளலிங்
கட்டுற்ற சூத்தி ரப்பெண்ட னஞ்சக்
களத்தி வைசி கப்பெண்...
தட்டற் றெடுக்க லாமிங் குரைத்த
சாதிப்பெண் நாலு மிலேயேல்
மட்டற்ற மோக னிவரைம ணந்த
மறையோ னெடுக்க விதியே. 685

மறையோனு மில்லே யெனிலிங் குரைத்த
மாதுக்க ளாணின் மதலே
குறையாது தங்க ளம்மை தனங்கள்
கொளலாமி தன்றி முன்போல்
முறையாமிம் மாதர் தமையே பயந்த
முதுதாதை யன்னே கொளிலே
இறையான மன்ன னதனேப்ப றித்து
மிடலாகு முன்சொல் முறையே. 686

மன்னுன சத்தி ரியனுதி மூன்று
வகையோரிவ் வாறு மணமாம்
மின்னுர்கள் சொத்தை மறையோன் மணத்த
மின்னுர் தமக்கு ரைசெய்த
அன்னேர் முறைக்கு வழுவாது கொள்வ
தறமாகு மென்ன வறிவோர்
முன்னே யுரைத்த வடநூலி லிந்த
முறையே மொழிந்த முறையே. 687

இப் பிரிவினேகட்குப் பத்திரங்கள் எழுதுதல்

தான்பெற்ற பெண்கள் தாய்சொத்தை முன்சொல்
தாமே பிரித்த தொகையும்
நான்பெற்ற திவ்வ ளவுசொன்ன மென்றும்
நாரிக் கமைந்த பெயரும்
வான்பெற்ற பத்தி ரத்தேவ ரைந்து
வைத்தங்கு சாட்சி யெழுதி
மீன்பெற்ற கண்ணி னுர்வைக்க வேண்டும்
வெவ்வேற தாயெ ழுதியே. 688

பெறுதாய் தனத்தை முறையே பிரிக்கும்
வழியிங்கு பேசி யினிமேல்
உறுபாவி யான மலடன்ற னத்தை
யுலகிற் பிரிக்கு முறையை
மறுவே யிலாத முனிவோர்கள் முன்பு
வடநூல் வகுத்த வழியே
சிறுபோத னுந்த மிழினு லுரைக்க 689
வறிவார் தெரிந்த பெரியோர்.

---

# 32. பிள்ளையில்லாதவன் சொத்தின் பிரிவு லட்சணம்

---

ஔரஸ புத்திரன் இல்லாத ஒருவன் பாகமாகாமல் மரித்தால், அவனுடைய சொத்தும் கடனும் அவனுடைய சகோதரர்களைச் சாரும். முன்பே பாகமாகியிருந்து, பதின்மூன்று வகைப் பிள்ளைகளில் ஒருவனேனும் அவனுக்கில்லையானுல், அவற்றை அவன் மனைவி அடைவாள் ; அவளும் இறந்துவிட்டால் அவளுடைய பெண்களுள் மணமாகாத கன்னி அச் சொத்துக்கு உரியவளாவாள் ; அவளும் இல்லையானுல், மணமான பெண்ணின் மகள் உரியவள்; அவளுமில்லாவிடில் அவன் பெற்றோர்களுக்கு அது போகும்.

மனைவி குடும்பத்துக்கு அடங்காமல் விபசாரியாகித் திரிவாளானுல் இறந்த கணவன் சொத்து அவளைச் சாராமல், அவனுக்கு அவள் மூலமாகப் பிறந்த பெண்மக்களுக்குப் போகும். இப்படிப்பட்ட எவரும் இல்லாவிட்டால் முன் சொன்னபடி அவன் தந்தை, தாய், சகோதரர் என்று முறைப்படி போகும். மாமன், மாமிக்கு அடங்கி அவர்கள் உத்தரவு பெற்று, மனைவி ஒரு மகனைப் பெற்ருல் அவனுக்கு உரிமை உண்டு.

இவ்வாறு வாரிசு எவரும் இல்லாவிட்டால், தகப்பனைப் பெற்ற பாட்டன், அவன் தாய், அவள் பெற்ற பிள்ளை முறைகளுக்கு அச் சொத்து உரிமையாகிறது. இப்பாட்டி ஏழுபேரென்றும், அவ்வெழு

வர் பிள்ளைகள் பேரன்கள் ஆகிய '- சபிண்ட தாயாதிகள்'' இச் சொத்துக்கு உரியராகின்றனர். இவர்களும் இல்லையெனில் ''சமானோதக தாயாதிகள்'' என்ற வகையினர்க்கு உரிமை வருகிறது. (இந்தத் தாயாதிகள் இன்னின்னார் என்பதை மூலநூலினின்று கண்டு கொள்க. செய்யுள்கள் 700, 701,) இவ்விருவகைத் தாயாதிகளுள் ஏழு தலைமுறை செல்லும் தாயாதிகள் சபிண்டத் தாயாதி என்றும், இதற்கு மேல் எட்டாம் தலைமுறைக்குச் செல்லும் தாயாதி ஸமானோதகத் தாயாதி என்றும் பெயர் பெறுவர் என்று தோனறுகிறது. இஃது அறிஞர்களால் ஆராயத் தக்கது.

இவர்களும் இல்லாதவிடத்து அத்தை, அவள் வமிசத்தினரை அச்சொத்து சாரும்; பிறகு தாய்மாமன், அவன் வழியினர் அதனைக் கொள்வர். அவர்களும் இல்லையானால் இறந்தவன் ஆசிரியர், அவர் சீடன், இவனுடன் உடன்படித்தவர், மன்னன் என்ற முறையில் செல்லும்.

இறந்தவன், அந்தணனாகில் அவன் ஆஸ்திக்குமேல் கடனிருந்தால் அதை அரசன் தீர்க்க வேண்டும். சொத்து அதிகமாயிருந்தால், அதைப் படித்த ஒரு வேதியனுக்கு அளிக்கவேண்டும். எக்காரணங் கொண்டும் அரசன் அந்தச் சொத்தைத் தான் எடுத்துக்கொள்ள லாகாது.

நாடு கடந்தவன். சாதிக்குப் புறம்பானவன் இவர்களின் சொத்தும் கடனும் சகோதரர்களுக்கும் பெண்களுக்கும் சரிபங்காகப் பகுக்கப் படும். மனைவிக்கு ஜீவனாம்சம் கொடுக்கவேண்டும். அவளுக்குப் பிறகு ஒரு பிள்ளை பிறந்தால் அதற்கும் சமபாகம் உண்டு (714); ஆனால் 15 வகைப் பிள்ளையில்லாதபோதுதான் இறந்தவன் மனைவி மைத்துனன் ஒருவன்பால் மகவைப் பெறலாம். அப்படிக்கின்றி அவள் நடந்துகொள்வது விபசாரமாகும். ஆபத் தர்மமான இம் மைத்துனன் உறவு அந்தணரையன்றிப் பிறருக்கே உண்டு (716).

இனி, மூவகை ஆச்சிரமிகளின் சொத்துக்கு விதி கூறுகின்றார்; பிரமசாரிக்கு வார்சு அவன் தாய் முதலானோர்; சன்னியாசிக்கு அவன் சீடர்; வானப் பிரஸ்தன் ஒருவனுக்கு வேறொரு வானப்ரஸ்தன்.

இவ்வாறு பிள்ளையில்லாமல் இறந்தவன் சொத்துப் பிரிவினை விதிகள் இப் பகுதியில் கூறப்படுகின்றன.

பிரிக்குமுன் மரித்தவன் சொத்து சகோதரரைச் சேரும்

அங்கி ஷங்களே பிரிக்குமுன் ஞெருவற் கவுரசப்
பங்க மற்றபிள் ளைகளிலாப் பாவியே மரித்தால்
பொங்க வன்சொத்தும் கடனும் பேர்சக வுதரர்
தங்கள் கைக்கொள்வ தேதன்ம மெனமுன் னூல் சாற்றும்.690

பிரித்தபின் மரித்தால் மனைவியையும் அவளுக்குப் பிறந்த
கன்னிக்கும் போம்

பாக மானபின் ஞெருவற்குப் பத்துடன் மூன்ருய்ச்
சேக ரப்படும் மதலையி லொருசிறு வனேனும்
ஆக முற்றிடா திருக்கையில் மரித்தவற் கமைந்து
மோக முற்றஆத் தியுங்கடன் முழுவ தினையுமே, 691

மரித்த வன்விதிப் படிக்குமுன் மணத்திடும் பாரி
தெரித்தி டும்பதி விரதையே லவடனைச் சேரும்;
அருத்தி யாமவ ளிறந்திடி லவள்பெண் மக்களிலே
ஒருத்தி யேமண வாக்கன்னி யுடையளம் முதற்கு. 692

கன்னியுமில்லாவிடில் பின் யார்யாருக்குப் போம் என்பது

கன்னி கைகளு மிலையெனில் மணத்தபெண் மகடான்
அன்ன வளுமே யிலையெனி லடைந்தவன் பாரி
தன்னி னைவிஞல் மாமன்றன் மாமிமச் சான்மார்
இன்னு ரையுளே யடங்கிடா தேதிரி கின்ருள். 693

இப்ப டியுமின்றி விபசாரி யாகியங் கிருப்பாள்
செப்பி ரண்டதாஞ் செயலுளா ளுக்குஞ்சொம் சேரா;
அப்ப டிக்குமே நடப்பவ ளதன்விந்து வதற்குத்
தப்பி லாதுபெற் றிருந்தபெண் களுங்கொளச் சாற்றே. 694

மேற்கூறிய எவரும் இல்லையேல் மரித்தவன் பெற்ருேர்
சகோதரருக்குப் போம்

இங்கு ரைத்தபெண் களுமிலை யெனில்மரித் திடுவோன்
தங்கு தந்தையே கொளவவ னிலையெனிற் ருய்தான்
அங்கு தாயரு மிலையெனி லவன்சகோ தரற்கே
பங்க மற்றிடுஞ் சகவுத ரர்களென் பார்க்கு. 695

தரணி யிற்பதின் மூன்றுவி தப்பிள்ளை களுமே
வரைய றுத்தில்லை யெனிற்செத்தோன் பாரிதன் மாமன்
உரைய தற்பின மாயினு ரையுயர்தந்தை தாய் சொல்
விரைவில் கேட்டதிற் பெறும்பிள்ளைக் கம்முதல் மீளும். 696

அந்த வாற்றிலு மவட்கொரு மகவிலை யானல்
உந்து சொத்துக ளுதரபே தச்சகவுதரர்
வந்து கைக்கொள்வ ரவர்களு மரித்துவிட் டாரேல்
இந்த வாறுள்ள வன்பிள்ளைக் கிவனுமில் லையென்றால், 697

மரண மானவன் தகப்பனைப் பெற்றவள் கொளவே
தரையி லேயவ ளிலையெனி லவள்பிள்ளை தனக்கே
உரைசெய் யிவ்வழி தானுமே யொழிந்திடு மாகில்
பரமெ னக்கொளுந் தகப்பனைப் பெற்றபாட் டனின்றாய், 698

அந்தத் தாயேனு மிலையெனி லவள்பிள்ளை வழிக்கே
இந்தக் காலினிற் றகப்பனை யீன்றபாட் டிமுதல்
சொந்தக் காரியா மேழுபே ரவள்பிள்ளைத் தொகையும்
வந்தப் பாட்டனே மதலைமுறை வரையுமே யொழியில், 699

அநந்தர வார்சு

இந்கு ரைத்தபாட் டிகளென்பா ரேழுபே ருக்கும்
அங்க வள்பெற்ற பிள்ளைக ளுக்கும்பே ரறைந்தார்
சங்கை யற்றவர் சபிண்டதா யாதிக ளென்றே ;
பங்க மற்றவிச் சபிண்டதா யாதிபார் விடிலே, 700

எட்டெ னச்சொலும் பாட்டியார் முதலிரண் டேழு
மட்டி லுற்றிடு மதலைமுறைப் பாட்டியின் வழியோர்
கட்டளைப்படி யொழுங்கிலே கைக்கொள்வ ரிவர்பேர்
சட்ட மாஞ்சமா னோதகத் தாயா திகளே. 701

பந்துக்கள்

இம்ம ரபுளோர் தானுமே யிறக்கில்முன் னிறந்த
செம்மல் தந்தையு டன்வந்த வத்தையைச் சேரும் ;
அம்ம ரபுளோ ரிறந்திடி லத்தந்தை யத்தை
தம்ம ரபுளோ ருக்கது சார்ந்திடு மென்றார். 702

சொல்லு மிவ்வழி யிறந்திடிற் சொத்தைவைத் திறந்தோன்
நல்ல தாயுடன் வந்தநன் மாமனைச் சாரும்;
வல்ல மாமனு மிலையெனி லவன்வழிக் கடையும்;
பல்கிம் மூவிதத் துளர்பெயர் பந்துக்க ளென்றார். 703

பந்துக்களுமில்லாவிடில் கொள்ளுதற் குரியவர்

இந்தப் பந்துக்க ளும்மிலை யெனில்முன மிறந்தோன்
சிந்தைக் கேற்றவா சிரியரே கொள,அவ ரிலையேல்
முந்திச் செத்தவன் சிஷனே கொளமுறை; அவனும்
அந்தத் தைப்பொருந் திடில்முன மாத்தியுங் கடனும், 704

அரசன் கடமை

வைத்துப் போனவன் கூடவே படித்தவன் கொளலாம்;
ஒத்துக் கூடியே படித்தவர் தாங்களு மொழிந்தால்,
எத்திக் கும்பணி மன்னனல் வாத்தியை யெடுத்துச்
செத்துப் போனவன் கொண்டிடுங் கடனெலாஞ் செலுத்தி,

மிஞ்சு மாத்தியைக் கொள்வதே விதிமன்ன வனுக்குத்
துஞ்சி னேன்கட னுத்திக்கு மதிகமாய்த் தோன்றில்
நெஞ்ச கங்குளிர்ந் தேதங்கள் நிதியினி லெடுத்து
வஞ்ச மற்றவக் கடனுக்கு வழங்குதல் வழக்கு. 706

விண்ட வாறினில் மரித்தவன் வேதிய னாகில்
பண்ட வன்வைத்த வாத்தியிற் கடன்பல்கு மாகில்
அண்ட ருந்தொழ மன்னனக் கடனெலா மடைப்பான்;
கொண்ட வாத்திகள் கடனினுங் கூடியே யிருந்தால், 707

அந்தவாத் தியைப் படித்தவே தியனுக்கன் றளிக்க;
எந்த வாறிலும் படித்தவே தனுமிலை யென்றால்
வந்தவே தியற் கம்முதல் வழங்குவ தல்லால்
சொந்த மாயதை மன்னவ னெடுத்திடிற் றோஷம். 708

நாடு கடந்தவன், ஜாதிப்பிரஷ்டன் இவர்களின் சொத்துக்கு விநியோகம்

*அங்கி ஷங்களும் பிரித்தவன் மதலையற் றவனுய்*
*எங்கை யோவெனுந் தேசத்தி லேகியே விடினும்*
*பொங்க மாந்தங்கள் சாதிக்கப் புறந்தள்ளுண் டிடினும்*
*தங்கு மாத்திபு மவன்கட னுள்ளதைத் தானும்,* 709

*சகவுத ரத்தில்வந் தவாண்க ளுந்தைய லாளும்*
*அகம கிழ்சரி பங்குவைத் ததைக்கொள, அவன்கொள்*
*சுகமொ ழியினுள் பெரியருக் கடங்கியுந் தூர்த்த*
*இகழ்ந டையற்று மிருக்கிற்சோ ருடையு மிடலாம்.* 710

*உடன்பி றந்தவர் பகிர்ந்துகொள் ளாதொன்று யிருக்கில்*
*அடங்க லும்பதின் மூன்றிலொன் றுமக வ்ற்றே*
*திடங்கொ ளண்ணன்மார் தம்பிமா ருந்திகைத் திருக்கில்*
*மடங்க லாமதி லொருவனே மரணத்தை யடைந்தால்,* 711

*மாய்ந்த வன்சக வுதரரி லொருவன்முன் மரணம்*
*ஏய்ந்த வன்மனை யாட்டிக்கும் மதலையை யீந்து,*
*தேய்ந்தி டாமலே பிறந்தவச் சிறுவற்குப் பாகம்*
*ஈய்ந்தி டிற்சம பாகம்வைத் தீதலே யியல்பால்,* 712

*இப்ப டிச்சக வுதரரி லொருவனுக் கெனினும்*
*செப்பி யபதின் மூன்றிலோர் பிள்ளையுஞ் சேரா*
*தொப்பில் வீய்ந்தவன் மனைக்குச்சே யுதவுவ தன்றித்*
*தப்பி லாமக விருக்கையி லீந்திடி லதன்மம்.* 713

*தமையன் தம்பியி லொருவற்கு மதலைதா னிருக்கில்*
*அமையும் பிள்ளையி லான்மர ணத்தினை யடைந்தால்*
*உமையை நேரவன் பாரி,காய் கனியையுண் டிருந்தும்*
*இமைகொட் டும்பொழு தேனுந்தன்ம விட்டிடா தியற்றி,* 714

விபசாரம் கூடாது

தன்ற லைவனை யேநினைத் திருந்துதாள் பணிந்தே
ஒன்று டலுக்குச் சவுக்கிய மொன்றுஞ் செய்யாமல்
நின்ற லின்றியே விகாரத்தா லொருவனை நேர்ந்து
வென்றி யாய்மணம் புரிய,வைப் பிருக்கவும் வேண்டாம். 715

அந்தணர் மனைவிக்குச் சிறப்புவிதி

இப்ப ரிசெலாஞ் சத்திரி யன்முத லிருப்போர்க்கு
ஒப்பில் வேதிய னிறக்கினு மோடிப்போய் விடினும்
தப்பி லாவவன் பாரிக் காடையு மன்னந் தானும்
செப்பி யியலா மகமச்சான் றிருவயிற் றுதவார். 716

பிரமசாரிக்கு

அரும்பி ரமசா ரிக்குள்ள வாத்தியுங் கடனும்
பெருந்த யவுள தாய்முத லாகமுன் பேசி
வருந்தி றத்துளார் கொள்வதே வழக்கெனக் கண்மேற்
பொருந்து மிவ்வழி தெரியவே முனிவர்கள் புகன்றார். 717

சன்னியாசிக்கு

வெறுத்தி டுஞ்சன் னியாசிக்கு விளைந்தவாத் திகளும்
மறுத்த வன்கொண்ட கடன்களு மவன் மரித்தபின்னே
உறுத்தியே வற்பணி செய்சீஷரி லுத்தம னுக்கென்
றறுத்து வந்திடும் வழக்கினை யறைவதே யறமால். 718

வானப்பிரத்தன்

முந்தும் வானப்பி ரத்தன்பால் மொய்த்திடு மாத்தி
அந்த வாறுள கடன்களு மவனுடன் படித்து
வந்த வானப்பி ரத்தனுக் கவனின்றி மரித்தால்
எந்த வானப்பி ரத்தனுக் கும்மதை யிடலாம். 719

மதலை யற்றவன் சொத்துக்கு லட்சணம் வகுத்தோம்
இதமி குத்திடுந் தமிழ்மொழி யாலினி மேல்நாளும்
சததி னத்திலுந் தெரிந்திட வெல்லை லட்சணமு
சிதமெ னக்கொள வுலகினிற் றெரிக்கலுற் றேமால். 720

பிள்ளையில்லாதவன் சொத்தின் பிரிவு லட்சணம் முற்றும்.

---

# 33. எல்லைகளின் லட்சணம்

கிராமங்கள், நன்செய் புன்செய் நிலங்கள், தோப்புக்கள், பாலங்களுடன் கூடிய ஆறுகள் என்ற ஐந்துக்கும் எல்லைப் பிசகுகள் வராமல் கல், மரங்கள், (ஆல், முருக்கு, காட்டிலவு, பனைமரம், மாமரம், பிற பாலுள மரம், மூங்கில், வன்னி, தர்ப்பை), நீர்நிலைகள் (கிணறு, ஊருணி, வாய்க்கால், ஓடை), கோயில்கள், காடு (மேட்டு நிலம்), மரக்கரி, உமி, புற்று, பள்ளம். எலும்பு, கற்பாறை என்ற இருபத்து மூன்று அடையாளங்கள் கூறப்படுகின்றன. இன்னும் எல்லைக் கற்களும் அடையாளமாக நிறுத்தப்படும்.

இப்படிப்பட்ட எல்லைகளில்லாவிடத்துத் தகராறு ஏற்படும்போது அதிகாரிகளிடம் கூற, அவர்களோ, அரசன் மந்திரிகளோ, நேரில் சென்று, சாமந்தர்களையும் சாக்ஷிகளையும் ஆராய்ந்து எல்லை கட்டிக் கொடுக்க வேண்டும். சாமந்தர் என்போர் அவ்வூரார், அயலூரார், அங்கே நிலமுடையவர் முதலிய ஐவர் ஆவோர். இவர்களையன்றி, அடுத்த ஊரில் வாழ்வோர், ஊர்க்காவலாளர், ஆடு மாடு மேய்ப்போர், வயது முதிர்ந்தோர், முன் அவ்வூரில் குடியிருந்தோர், இவ்வாறு சொல்லப்படும் ஏழு வகையினர் சாட்சிக்காரர் ஆவர்.

இவர்களை விசாரிக்குமுன் இவர்களை உபவாசம் இருக்கச் செய்தும், சுத்தியுடன் வரச்செய்தும், ஆணைகூறிப் பிராட்டுவிவாகன் தன்னை விரதாதிகளாற் சுத்தம் செய்துகொண்டு, நாலு பேர்களுக்குக் குறையாமல் பெரியோர்களை அங்கே வரவழைத்து, ' எல்லையை நான் காட்டுவேன் ' என்று கூறும் வழக்காளர்களுள் ஒருவனைக் கூப்பிட்டு, சிவந்த ஆடையும் சந்தனமும் மாலையும் அவன் தரிக்கச் செய்து, மண்ணை வெட்டி அவன் தலையில் ஏற்றி, எல்லைகாட்டி நடக்கச் செய்யவேண்டும். அவன் பின்னே பெரியோர்களும் நடப்பர். அவர்கள் முதலில் கிராமதேவதையின் கோயிலுக்குச் சென்று, பூஜை முதலியவற்றைச் செய்வித்து, '' நான் காட்டும் எல்லை தவறுனல் என்னை வாட்டுக '' என்று சொல்லிப் பிரார்த்தித்து, அவனை முன்னே நடக்கச் செய்து இவர்கள் பின்னே போகவேண்டும். அவன் செல்கிற வழியில் அடையாளம் குறித்துப் போகவேண்டும்.

இது நடந்து நாற்பத்தைந்து நாட்களுக்குள் எல்லை ஓடினவனுக்கு ராஜீய தெய்வீகங்களால் யாதொரு ஊறும் நேராவிட்டால் அவன் காட்டிய எல்லைக்கு அடையாளமிட்டு ஸ்திரம் செய்யவேண்டும். அப்படிக்கன்றி அவன் பொய்யனுகக் காணப்பட்டால், அவனுக்கும் பொய்யாக எல்லை கூறிய சாமந்தர் சாட்சிக்காரருக்கும் தனித்தனியே தண்டனைகள் குறிக்கப்படுகின்றன (741-2). ஒருவனுக்குரிய நிலத்தைத் தான் அநியாயமாய்க் கட்டிக்கொண்டு அனுபவித்து வந்தால் அவனுக்கேற்ற தண்டனை 743-4 ஆம் செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன. பிறருடைய நிலத்தில் கிணறு தோண்டுதல், மரம் வைத்தல் போன்றவற்றைச் செய்பவனுக்குத் தண்டனை 745-7 செய்யுட்களிற் காட்டப்படுகின்றது.

ஊர் முதலியவற்றிற்கு எல்லைகளும் எல்லைக்குரியவையும்

பதிகள்[1] நன்செய்கள்[2] புன்செய்கள்[3] தோப்புப்[4] பாலங்களுள
நதி[5]யிவ் வைந்திற்கு மெல்லையிற் பிசகு வாராமல்
இதிற்ப திக்குநான் கெல்லைக்கு மிழிவில் கல்ஆல்கள்
மூதிர்மு ருக்குக்காட் டிலவுகள் பனைம ரமுமே, 721

பன்ம ராமர மற்றப்பா லுளமரம் மூங்கில்
வன்னி தர்ப்பைகள் கிண றுக ளுருணி வாய்க்கால்
பின்னு மோடைகள் அணையுடன் கோயில்கள்.........திரடு
நன்ம ரக்கரி யுமிபுற்றுப் பள்ளம்நல் லெலும்பு, 722

அகன்பா றையிவ் விருபத்து மூன்றடை யாளம்
புகன்ற னம்மிது வைக்கவும் புதைக்கவும் வேண்டும்;
நிகழ்ந்த மற்றநா லினுக்கும்நால் திக்கினும் நிறுத்தச்
செகங்கொ ளும்படி செப்பினர் கல்லினை யடித்தே. 723

இயம்புங் கல்லன் றி மற்றுள விருபத்தி ரண்டில்
மயங்கி டாவகைக் கெல்லைக்கே துவைக்க வேண்டும்
செ(ய)ங் கொளும்படி யூகித்துத் தெரிந்துவைத் திருந்தால்
தியங்கி டாவகை யெந்த நாளிலுமெல்லை தெரியும். 724

அவ்வடையாளங்க ளில்லாவிடத்துச் செய்யவேண்டியவை

இவ்வி ருபத்து மூன் றடை யாளமு மின் றிச்
செவ்வி டாவெல்லைப் பிசகுவந் தாலெல்லை தெரியவே
ஒவ்வி வாழுஞ்சா மந்தர்பா லுரைத்து முன்னறி
அவ்வி டத்தில்வாழ் சாமந்த ரும்மறி யாரேல், 725

அறிந்தவன் சாட்சி கேட்க அறிந்தவ ரில்லை யாகில்
உறுமெல்லைக் குடை யோன் றன்னை எல்லையோ
[டென் று ரைக்கச்
செறிந்திடு மவர்க்கு மெல்லை தெரிந்திடா தென் று வந்தால்
நெறிபக ரமைச்ச ேனாடு மன்னன்போய் நின் று பார்த்தே,

அரசன் எல்லையைப் பிரித்துக் கொடுக்கவேண்டும்

மனத்திலே யோசித் தங்கு வழுத்துவோர் சொல்லுங் கேட்டே
உனக்கிதே யுனக்கிதே யென் றுறுத்தியெல் லையினைக் காட்டி
அனைத்துளோ ருக்கு மந்த வெலலைக் ளறிய வேண்டி
இனத்திரு பத்து மூன்ரூங் குறிகளு மங்கிட் டீயே. 727

சாமந்தர் என்பவர்

முன்சொல்சா மந்த ஞரேல் முதிர்பதி யிங்காற் றிக்கும்
இன்பமாம் வாழு மூரார் நன்செய்தோப் புமனைக் கெல்லாம்
தொன் றிலே நாலு திக்குந் தோன் றுபூ மியினை யாள்வோர்
மன் றிலே இவர்க்குப் பேர்சா மந்தரென் றியம்பி ஞரே. 728

சாட்சிக்காரர் என்பவர்

பின்பகர் சாட்சிக் காரர் ஆர்என் று பேசுங் காலை
நன் றசா மந்த வூரை நீக்கிவே றூரில் வாழ்வோர்
அன் றங்கே பிசகு வந்த வூரதின் சாமந் தவ்வூர்
என் றிவ்வூ ரிரண்டுங் காத்தங் கிருக்கின் றகாவற் காரர், 729

அத்திக்கிற் சஞ்ச ரித்தே யாடுமா டதனை மேய்ப்போன்
எத்திக்கி லிருந்து மூரை யேயறி கிழவாண் பெண்கள்
புத்தியாய்ப் பழையோர் கூடிப் புகல்வ.........ந்திருந்து
சத்திய மாகச் சொல்லுங் குமரனிச் சாட்சிக் காரர். 730

சாட்சிக்காரரையும் சாமந்தரையும் விசாரிக்கு முறை

இவ்வேழு பேர்சா மந்தர்....... வைவகையு ளோரைச்
செவ்வாகக் கெட்கும் போதிற் றெரியுப வாச மாயும்
அவ்வேளைவ......சுத்தியாகவு மிருக்க வைத்துக்
கவ்வையே பிறக்கு மாணை கழறிப்பின் கேட்க வேண்டும். 731

எல்லை ஓடும்போது பிராட்டுவிவாகன் செயல்

எல்லையோ டுவதிற் செய்யும் வகையெனே வெனவி னுவில்
நல்லதாந் தினத்தி லெல்லை நடப்பே னென்றாலும்......
வெல்கின்ற தறிபி ராட்டு விவாகனும் விரத மாக
ஒல்லையிற் சுசி......ங் கோடிடத் திருந்து கொண்டு, 732

பெரியர னேகர் வேண்டும் பெரியரே கிடையா விட்டால்
பெரியவர் கள்நா லிற்குக் குறையாது தேடிக் கூட்டி
வருவித்தங் கவர்கள் காண வணக்கமா......ட்டானே
ஒருமித்து விரத மான வொருவனை நோக்கிச் சொல்லே. 733

.........திரஞ்சு நாழிகையினுக் குள்ளாகக்
காயிரு சிவந்த வாடை கட்டிச்செஞ் சந்தம் பூசி
ஆயி.........சம்மாலை யடரவே கழுத்திற் போட்டுத்
தாயினு மினிய பூமி தனைக்கட்டி யாக வெட்டி. 734

735ஆம் செய்யுள் சிதைந்துவிட்டது.

732-ஆவது செய்யுள் முதல் 735-ஆவது செய்யுள் வரை ஓலைகள் சிதைந்தும் புள்ளிகள் விழப்பெற்று மிருத்தலால் செய்யுள்களின் முழுவுருவம் காணப்பெறவில்லை. அவற்றின் கருத்து:—

நான் எல்லை ஓடுகிறேனென்று சொன்ன எதிரியைத் தலைநாள் விரதமிருந்து, மறுநாள் விடிந்து பத்து நாழிகைக்குள்ளே தானம் பண்ணிச் சுசியாய் எல்லைப் பிசகிலே வந்து, சிவந்த வஸ்திரமுங் கட்டிச் செஞ்சந்தனம் பூசிச் சிவந்த மாலையுங் கழுத்திலே போட்டுக்கொண்டு, பூமியை வெட்டி ஒரு கட்டியை எடுத்துத் தலைமேலே வைத்துக் கொள்ளச் சொல்லவேண்டும்.

எடுத்துக்கட் டியைவி ரித்தே இருக்கின்ற தலைமேல் வைத்து
நடுக்கமாய்ப் பெரியோர் காண எல்லையே நடக்கும் போது
திடுக்கமா யேகி ராம தெய்வத்தைச் சிறப்பாய்ப் பூசித்
தடுக்கவே தான்விபூதி யதைநெற்றிக் கணிந்து கொண்டு,

தெய்வமே கிராமத் தில்வாழ் தேவரே பூமா தேவி
செய்கின்ற தாலே குற்றஞ் சிறியன்மே லிருக்கு மாகில்
வையமே யறிய வென்னை வாட்டுவீர் குறையென் மேலே
ஐயமே யின்றி யென்ற னெதிரியை யடக்கு வீரே. 737

என்றுசொல் லிக்கொண் டங்கே நடக்கின்ற வன்பின் னுக
வன்புட னேபி ராட்டு விவாகன்று னவன்பின் னுக
முன்பறி பெரியோர் போக முறையவர் பின்மற் றோர்கள்
ஒன்றும்பே சாதே போயவ் வெல்லைபோ மொழுங்கைப்
பாரே.] 738

ஓடிய வொழுங்கி லேதோ வோரடை யாளஞ் செய்து
நாடியே போக வேண்டும் நடந்தோன்ப தஞ்சு நாளுள்
வாடிடத் தெய்வம் ராசா வால்வர வில்லை யாகிற்
கேடிலா வடையா ளம்மவ் வெல்லைக்குக் கீழ்ச்செய் வாயே. 739

எல்லையோடியவன் குற்றவாளியானல், செய்யவேண்டியவை

நாற்பத்தஞ் சுதினத் துள்ளே நடந்தவற் கிடுக்கண் வந்தால்
மாற்றிலைம் பத்து நாலு பொன்றண்டம் வாங்கி யெல்லை
மேற்கொளும் மெதிரி கூடி விளம்பின படிக்கே யீந்து
தோற்றவே யவ்வெல் லைக்குச் சொலுமடை யாளஞ் செய்யே.

பொய்ச்சான்று கூறியவருக்குத் தண்டனை

எல்லையே யோடிச் சுத்த னுகின வெல்லையே......
வல்லசா மந்தர் சாட்சிக் காரர்சொல் வழிவே ருகில்
சொல்வதைப் பொய்யென் றெண்ணிச் சொல்லுமொவ்
[வொருவ னுக்கங்
கல்லல்செய் தடியிருநூ றைம்பத்து நாற்பொன் றண்டம்.

இப்படி மயக்கத் தாலே யியம்பினே ருக்குச் சொன்னேம்
செப்பமா யறிந்தி ருந்தும் பொய்ச்சாட்சி செப்ப லோர்ந்தால்
அப்படி யோரொ ருவற் கடியஞ்ஞூ றடித்துப் பின்னும்
தப்பிலைம் பத்து நாலு பொன்னப ராதம் வாங்கே. 742

பிறர் பூமியைக் கவர்ந்துகொள்பவருக்குத் தண்டனை

அறிந்தபேர் சொல்லச் சொல்ல வம்மொழி கேளா தேயும்
செறிந்திடு மாசை யாற்றன் றெரிந்துகொண் டெனினும் [வேறோர்க்
குறும்புவி தன்னைக் கூட்டி யொருவன்வைத் திருந்த [தோர்ந்தால்
பெறும்புவி யுனக்கி ருக்கப் பிறர்புவி யேனீ கொண்டாய்.743

என்றழைத் துவந்து கேட்டே யீறைஞ்ஞூ றடிய டித்தும்
அன்றவ னவனுக் குள்ள வாத்தியை யெடுத்துக் கொண்டு
தொன்றுறு மூரை விட்டுத் துரத்தியாக் கினையுஞ் செய்தால்
நன்றவ்வூ ரிலுக்கு மந்த நாட்டுக்கும் நலமுண் டாமே. 744

பிறர்க்குரிய நிலத்தில் கிணறு மரம் முதலியவை
வைத்திருப்பவருக்குத் தண்டனை

ஒருவன்பூ மியில தற்கே யுடையவ னைக்கே ளாமல்
பெருகவே றொருவன் வாவி பெருங்குளங் கிணறு செய்தும்
பொருடரும் மரம்வைத் தாலும் பயிர்பல புரிந்தா னேனுங்
கருதியே வீடு மற்றக் கருமஞ்செய் திருந்தா னேனும், 745

அன்னிலத் தினையு டையோர்க் கதிலுள்ள பலன்க ளல்லால்
தன்னவே றொருவன் மற்றோன் பெரும்புவி யினிற்கே ளாமல்
இன்னன செய்ய வேண்டி யேயங்கு செலவு செய்த
சொன்னமுள் படக்கொ டாமற் றுரத்தலே ஞாய மென்றார்.

இப்படிப் பெரியோர் கூடி யியம்பின வாற்றைச் செய்தோன்
தப்பியென் செலவை யேனுந் தாவென முரணி னனேல்
ஒப்பிலா மன்ன னந்த முரணைலா மொடுங்கச் செய்து
செப்பிடா தோடிப் போகச் செய்வதே யறமென் றூரே. 747

எல்லைலட் சணங்கள் யாவு மியம்பின மிதன்மேற் பூவில்
வெல்பவ ரறிய வேண்டி மிருகலட் சணங்க ளெல்லாம்
சொல்லுவாம் வடநூ லாறே தொகுத்திருந் தமிழி னாலே
எல்லையில் புகழ்கொள் மன்ன ரியற்றுவா ரிந்த வாறே. 748

எல்லை லட்சணம் முற்றும்.

---

# 34. மிருகங்களால் வரும் வழக்கு லட்சணம்

---

ஒவ்வொரு கிராமத்திலும், ஆடுமாடுகள் மேய்வதற்கென மந்தை வெளிகளின் அமைப்பு திட்டமிடப்பட்டிருக்கிறது. மேய்ப்போனின் கடமைகள் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன. விலங்குகள் களவு போதல், இறந்து போதல் முதலிய நேரங்களில் அவனுடைய கடமையும் பொறுப்பும் வரையறுக்கப்பட்டுள்ளன. மந்தைவெளிக்கு அப்பாலுள்ள நிலங்களிலுள்ள பயிர்களை ஆடு மாடுகள் முதலியன சென்று மேய்ந்தால் அவற்றை மேய்ப்பவனுக்குரிய தண்டனைகளும் அபராதங்களும் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அவனை மன்னித்தற்குரிய நிலைமைகளும் நேரங்களும் விளக்கப்பட்டுள்ளன. பாதுகாவலில்லாத இடங்களில் விலங்குகளால் உண்டாகும் நஷ்டத்திற்கும் ஈடுகாட்டப் படுகின்றது. பாடல்கள் எளிமையும் விளக்கமும் பெற்றுள்ளமையால் விரிந்த முகவுரை எழுதப்படவில்லை.

மந்தைவெளியின் அமைப்பு

பட்டினச்சுற் றில்நா னூறு விற்கிடைப் பாரிற் றூரம்
மட்டில்சிற் றூரின் சுற்றில் வரம்பிரு நூறு வில்லை
ஒட்டிய தூர மந்தை யாய்ப்பயி ரொன்றுஞ் செய்யா
திட்டமாய்ப் போட்டி ருக்க, விதுகுடி யேற்று வோரே. 749

இப்பதி யினிலி ருப்போ ரிந்தமந் தையினுக் கப்பாற்
செப்பமாய்ப் பயிர்கள் யாவுஞ் செய்தத னுக்கு வேலி
ஒப்பிலா வொட்ட கைக்கண் கண்டிடா வுயர மாயும்
தப்பிநாய் நரியே னங்க டாம்நுழை யாதுங் கட்ட. 750

இப்படி மந்தை யும்போட் டிருக்கவு மிந்த வாறே
செப்பமாய் வேலி கட்டிப் பயிர்பல செய்யு மூரார்
ஒப்பவர்க் காரு மற்றே யுயர்ந்தவாழ் வுடனே கூடித்
தப்பிலா தென்றும் வாழ்வார் தரணியுள் ளமட்டுந் தானே.

இடையன் கடமை

ஆவையே முதலா யுள்ள மிருகங்க ளனைத்து முள்ளோர்
ஈவையே யெண்ணி மேய்ப்போ னிடத்தில்மேய்க் கவிடுங் காலை
கோவையாய் மந்தை மட்டுங் கொண்டுபோய்ப் பயிரிற் போகா
தேவைதா னிருக்குங் காட்டைத் தேடிநீ கொண்டு போயே.

பத்திர மாக மேய்ப்பா யெனப்பகர்ந் துவிடுதல் வேண்டும்
ஒத்துமேய்த் திடுவோ னெண்ணி யேற்றுடன் கொண்டு
[போயே
புத்தியிற் பயந்து மேய்த்துப் புறத்துறு மிருக மெல்லாம்
எத்திசை யும்வி டாமற் கொடுவந்தங் கெண்ணி யீவான்.

இடையன் பொறுப்பும் கடமையும்

இப்படி மேய்ப்போ னச்ச மிருந்ததைக் கண்பா ராமல்
அப்புறத் தேபோ னாலு மதுமரித் தேபோ னாலும்
தப்பவி டாமல் மேய்த்துச் சாயுங்கால் வருவே னென்றே
ஒப்பியே கொண்டு போனோ னுடையவற் குதவ வேண்டும்.

கள்ளர்கள் கொண்டுபோனால் மேய்ப்பவன் செய்யவேண்டுவது

இறங்கியே மேயப் போன விடத்திலா ரேனும் வந்து
மறஞ்செய்தங் கவனைத் தள்ளி வலுவிற்கொண் டேசென்
[றாலும்
கறங்குநோய் கொடுவ தைத்துக் காட்டினிற் கிடக்கு மேனும்
பறந்தது போல வந்து மேய்த்தவன் பகர வேண்டும். 755

ஒல்லையில் வந்து ரைக்கில் மேய்த்தவ னுதவ வேண்டாம்;
சொல்லவே யில்லை யேனுந் தனக்குத்தோன் றினகால் வந்து
மெல்லவே யுரைத்தா னேனும்,....போமிரு கத்தைப் போல
நல்லதா யுதவ; இன்றேல் நல்வினைச் சொன்ன மீவான்.

இராஜீய தெய்வீகத்தால் ஆடுமாடுகளுக்குச் சேதம் நேர்ந்தால் செய்யவேண்டுவது

ஈதலால் மேய்க்கப் போன விடத்தினிற் றெய்வீ கத்தால்
ஆதர வற்ற மன்ன னலது மரணஞ் சேர்ந்தால்
சேதமா முன்பு காது வால்தோல்காற் குளம்பு செப்பும்
பேதமா மிந்த நாலும் பிரித்தெடுத் துவைத்துக் கொண்டு, 757

உடையவ னுக்குக் காட்ட உரிமையாய் மேயா தாலே
திடமிழந் திறந்து போகிற் றிரட்டிமேய்த் தவனி டத்தில்
தடைபடா தோரு ருவுக்குத் தண்டமீ ரைந்தி னேடே
அடைவில்மூன் றரைப்ப ணம்மும் அத்தொகை யடியும் வாங்கி,

உருவினுக் குருவும் வாங்கி யுடையவற் களிக்க வேண்டும் ;
வெருவவிப் படியே செய்வ தாவினை மேய்த்த வற்கு
வருமுரு விலைகள் கூடி வருவதுங் குறைவ துங்கண்
டருமனன் குறைத்துக் கூட்டி வாங்கிட வபரா தந்தான். 759

அபராதம் வாங்கத்தகாத பயிரழிவுகள்

செப்பின வாறு வேலி செய்திடும் பயிர்க டம்மைத்
தப்பியே கோவிற் காளை பசுவினு லழைவு சாரா
ஒப்பிலா ராசி கந்தெய் வீகத்தா லோடு கின்ற
எப்படிப் பட்ட சாதி மிருகங்க ளேயென் றாலும், 760

மந்தையி னுடனே சேர வருமொற்றை மிருகம் நொண்டி
யுந்தனித் தூநிற்கு மாக்கள் யோசனை தெரிந்து மேய்த்தோன்
தந்தைதாய் திதியி லீயுந் தருணத்தி லவற்குந் தோன்று
தெந்தவா றினிலும் வந்தே (இ)றங்கிய மிருகந் தானும், 761

விண்டவா றுள்ள வாறு விதமிரு கங்கள் வந்து
கொண்டிரும் பயிர்தின் றாலுங் குழைந்ததை யழிக்கு மேனும்
தண்டிய தனையே மேய்த்தோன் றனையடிக் கவும்ப டாது
கண்டப ராதம் வாங்கக் கருதவு மாகா தென்றார். 762

விலங்குகள் பயிரையழிப்பது மேய்ப்போன் பிழையாதலின்
அதற்குத் தண்டனை

அப்படி வேலி கட்டி யமைக்குநன் செய்யி னுட்போய்
எப்பயி ரினையு மோரா திறங்கியே தின்று விட்டால்
தப்பிட மேய்த்தோன் றன்னைச் சபையர்நா லடிய டித்துச்
செப்பினு ரிரண்டு மாவாம் பணம்தண்டம் வாங்க வென்றே.

ஒருபசு வின்கன் றேனு மொற்றையா டெனினுந் தின்றால்
கருதியே மேய்த்தோன் றன்னைக் கண்டிரண் டடிய டித்து
வெருவவே பகர்ந்தங் கொன்று மாப்பண மீட்டத் தண்டம்;
வருமொரு பசுவுங் கன்றுங் கூடிவந்து தின்று விட்டால், 764

ஆறடி யும்ம டித்து மூன்றுமா வபரா தந்தான்;
வெறொரு பசுவே தின்று வெறுத்தத னுட்கி டந்தால்
சீறியெட் டடிய டித்துத் தேற்றப ராதம் நான்மா
மாறிலா மன்னன் வாங்க வழக்கென வழுத்தி னனே. 765

ஒருகன் றுந்தா யுந்தின் றங்குபயி ருட்கி டந்தால்
இருவுரு வுக்கு மாக வடியும்பன் னிரண்ட டித்து
வருபவன் றன்னை யாறு மாப்பணந் தண்டம் வாங்க;
விரிபயி ரினையோ ராட்டின் குட்டிபோய் வீழ்ந்து தின்றால்,

அடியொன்று மடித்துப் பின்னை யபராதம் பணம ரைம்மாக்
கடிதிலோ ராடுங் குட்டி யுந்தினக் கண்டு விட்டால்
படியில்மூன் றடிய டித்த பராதமொன் றரையின் மாவும்
கடினமாய்ப் பகர்ந்து வாங்கக் கருதிமேய்த் தவனைத் தானே.

ஆடுங்குட் டியும் போய்த் தின்றே யவ்விடத் தேகி டந்தால்
நீடுமா றடிய டித்து நிறுத்திய பின்மூன் றுமா
வாடுமா னிடத்தில் வாங்க வந்தங்கோ ரெருமை மாடு
பீடுறு மொட்ட கங்கத் தபமிங்குப் பேசு மூன்றில், 768

ஒன் றென்று தின்று விட்டா லெட்டடி யுடனே நான்மா
நின் றித ன் மூன்றின் குட்டி தன்னில் நேர்ந் தொன்று
அன்றில்நா லடிய டித்தும் அபராத மிரண்டு மாவாம்; [தின்றால்
சென்றிதி லேயோர் தாயும் சின்முலை யுண்ணுங் கன்றும், 769

அங்குப் போய்த் தின்று விட்டால் ஆறிரண் டடிய டித்துச்
சங்கையி லாம லாறு மாப்பணம் அபரா தந்தான்;
இங்கனம் பகர்ந்த மூன்றி லொன்றுபோ யிறங்கித் தின்று
பொங்கமாய்ப் படுத்தி ருக்கிற் புறஞ்சென்று மேய்ப்போன்
றன்னை, 770

எண்ணிரண் டடிய டித்தே யெட்டுமாப் பணமும் வாங்க;
நண்ணுமிம் மூன்றி லேயோர் தாயுநற் குழவி தானும்
மண்ணிலப் பயிரைத் தின்று மறுத்ததிற் கிடக்கு மாகில்
அண்ணருன் இருபன் னுன்கா மடிபன்னி ரண்டு மாவும், 771

நன்செயிற் றின்ரு லிங்கே நவிலடி யபரா தந்தான்
புன்செயி லிந்த வாறே பொருந்தினுல் மேய்த்தோன் றன்னை
அன்பிலா ததற்கி ரட்டி யடியடித் தபரா தந்தான்
முன்புகன் றதற்கி ரட்டி வாங்குதல் முறை யென்ருரே. 772

சேர்ந்துமந் தையுட னிந்த மிருகங்கள் சென்று தின்ருல்
ஊர்ந்ததி லொன்றி னுக்கே யுரைத்தல்போ லனைத்தி னுக்கும்
நேர்ந்துமேய்த் தவன்பாற் பேசி நிசத்தடி யும்ம டித்தே
ஓர்ந்திடுஞ் செய்யின் பேத மறிந்தப ராதம் வாங்கே. 773

புகன்றிடு மிருகந் தின்று போம்பயிர்ப் போகந் தன்னை
அகந்தெரிந் தவர்கள் சொல்ல வதையுமேய்த் தவன்பால்
[வாங்கி
முகமலர்ந் துபயி ரிட்டு முகித்தவன் கையில் மன்னன்
செகமறிந் திடவளித்தாற் செழிக்குமத் தேச மெல்லாம். 774

மேய்ப்போன் தானே வந்து மன்னிப்புக் கேட்டல்

ஆத்திரை யாகப் போய்த்தின் றளித்திட மேய்த்தோன் வந்து
காத்துமுன் பயிரை யிட்டோன் கருத்திரங் கிடநல் வார்த்தை
மாத்திரஞ் சொன்னுற் போதும் விதைமுதல் மட்டுங் கைமேல்
மூத்திடும் பயிரை யிட்டோற் களியென மொழிய லாமே. 775

மன்னன் கடமை

மேய்த்தவ னல்ல வார்த்தை விளம்பிடா திருந்தா னேனும்
போய்த்தய வுவர மேய்த்தோன் புகன்றுமுன் பயிரை
[யிட்டோன்
வாய்த்ததன் பயிர்போச் சென்று மறுகின விதெலாம்
[பார்த்துத்
தாய்த்திற மன்னன் கூடக் குறையத்தீர்த் தளிக்கச் சாற்றே.

நடைவழியிலுள்ள பயிர்களுக்குச் சேதம் விளைப்பது

நடைவழிக் கடுக்க வேனும் நகரினுக் கடுக்க வேனும்
இடைவிடா திடும் பயிர்க்கு வேலியற் றிருக்க வீதை
அடைவுடன் மேய்ப்போன் றன்னை யறியாதெம் மிருக மேனுந்
தடைப்படா தேபோய்த் தின்ற தையழித்து விட்ட தேனும்,

மேய்த்தவற் கடியே யன்றி விளம்பப ராதந் தானும்
தேய்த்தழி பயிரின் போகந் தெரித்தவிவ் விரண்டு மில்லை
போய்த்தின்ப தறிந்தி ருந்தாற் புகலடி யபரா தங்கள்
ஆய்ச்சொலு மிரண்டு மேய்த்தோற் கல்லது மற்ற தில்லை. 778

மிருகத்தால் விளைந்து பூவில் வரும்விவ காரமெல்லாம்
கருதிச்சா லவுமுன் னூலிற் கழறிய வாறு சொன்னோம்
பொருளுக்கே யுடையோ னல்லான் அசுவாமி யெனப்பூண்
[பேரான்
மருளுற்றே விற்கு கின்ற விலட்சணம் வழுத்து வாமேல். 779

மிருகத்தால் வரும் வழக்கு லட்சணம் முற்றும்.

———

# 35. அசுவாமி விற்கிற லட்சணம்

---

உரிமை இல்லாமல் தீயவழியில் அடைந்த பொருளுக்கு அசுவாமிப் பொருள் என்று பெயர். அது மூன்று வகைப்படும். அவை:—பிற ஞெருவன் தன்னிடம் அடைக்கலமாக வைத்த பொருளைத் தன்னுடையது என்றல்; வீதியிற் கிடந்த பொருளை எடுத்துக் கொள்ளுதல்; களவிற் கொள்ளுதல். இவற்றை விற்கிறவர்கள் காலம், இடம், விலை இவற்றைத் தகாத வழிகளிலே விற்பார்கள். அதைக் கண்டவர்கள் அவற்றை வாங்கி உரியவரிடம் சேர்க்கவேண்டும்; அல்லது அரசன் பால் ஒப்புவிக்கவேண்டும். அரசன் இச்செய்தியைப் பறையறைந்து நாட்டுக்குத் தெரிவித்துக் குறித்தகாலம் பொறுத்து உரியவன் வந்து கேட்டால் கொடுக்கவேண்டும். அக்காலம் கடந்துவந்தால் காவற்கூலி பெறலாம். திருட்டுச்சொத்தை விற்கவந்தவரைக் கண்டுபிடித்து அப்பொருள் விலைக்கு ஏற்றபடி அபராதமும் தண்டனையும் விதிக்க வேண்டும். அப்பொருளுக்குப் பொய்யாக உரிமை கூறி வந்தவர்க்கும் தண்டனைகள் கூறப்பட்டிருக்கின்றன. பொதுவாகப் பொருள்களை நாலு பேர் அறிய வாங்கவேண்டும் என்று உலகத்துக்கு அறிவு கூறப் படுகின்றது.

அசுவாமிகள் மூவகையினர்

*அடைக்கலப் பொருளை யேற்றோ ஞர்பொரு ளேனும் வீதி*
*இடத்தினிற் கிடக்கிற் கொண்டோ னிப்படி யன்றி நெஞ்சுத்*
*திடத்தினி லொளித்துச் சென்று சிலபொருள் களவிற்*
*[கொண்டோன்*
*தொடக்கியிம் மூவர்க் கும்பேர் சொல்அசு வாமி யென்றே.* 780

அசுவாமி சொத்தினை விற்கும் வழிகள்

*இந்தமூ வருமிவ் வாறி லேற்றிடும் பொருளை விற்க*
*வந்திடி லொருவ ரேனு மறிந்திடா வழியாய்த் தானும்*
*தந்திடு முருவி னுக்குத் தகுங்கிர யத்தை விட்டுப்*
*புந்தியே பொருந்தி யீனக் கிரயங்கள் போது மென்றும்,* 781

இரவுகா லத்தில் வந்தும் இரவிவந் திடுமுன் னேயும்
விரைவிலே மத்தியான வேளையஸ் தமன காலம்
கரிசொல மனுட ரற்ற காலங்கள் பெறும்வி லேக்கே
தருகினு மிராக்கா லம்போற் சாற்றுஃறும் காலந் தன்னில், 782

திருட்டு விற்பனையைக் கண்டோர் கடமை

செப்பிய வஞ்சு காலத் திலும்வந்து விற்பான் வாங்க
ஒப்பினே னிந்த வஞ்சு காலத்தி னுள்வந் தோனைத்
தப்பிடா தேபி டித்துச் சபையுளோர்க் கறியச் செய்தே
அப்பொரு ளுடையோன் பாற்போ யடைவதாய்ச்
[செய்ய வேண்டும். 783

மன்னனிதனை அறிந்து செய்யவேண்டியவை

இவ்வழி யெளிதிற் றேடி லுடையவ னின்னு னென்றே
அவ்விடத் தேகா ணுதே லங்குவிற் பவனைத் தானும்
செவ்விலான் கொண்டு வந்த பொருளையுந் தேச மாளும்
நவ்விய மன்னன் முன்பு நாடியே கொடுபோய்ச் சேரே. 784

அப்பொருள் கொண்ட மன்ன னுனவன் றன்னூர் தேசம்
இப்பொரு ளிருக்கு தென்றே யறிந்திட வியம்பிக் கொண்டு
தப்பிலா தெவ்வி டத்தும் பறைதனைச் சாற்றச் சொல்லி
ஒப்பியப் பொருளே யெம்மி தெனவந்தோற் குதவ
[வேண்டும். 785

என்பொரு ளென்று வந்தோ னிருங்குல மறையோ னுகிச்
சென்றமுன் றூண்டி னுள்ளுந் தீரன்சத் திரிய னுதி
ஒன்றிய மூன்று சாதி யாயுளோ ரோராண் டிற்குள்
கன்றிடா மன்னன் பாலே கருதித்தன் பொருளைக் கேட்டால்,

கழறின பொருளை வைத்துக் காத்தகூ வியுமெ டாமல்
உளமகிழ்ந் துதவ வேண்டு முரைத்தவிவ் வாண்டுக் கப்பாற்
கொளமனத் தாய்த்தா வென்று கூறிலப் பொருள்...குப்புஞ்
சளதியாய்ப்(?) பொருளைப் போக்கித் தயங்கினேன் றூமும்
[பார்த்து, 787

கூலியைக் குறையத் தீர்த்த வன்முகங் கோணு வாறு
வேலிபோற் காக்கு மன்னன் விரும்பிவாங் கினபின் னேதன்
பாலுறும் பொருள்க டம்மை யுடையவன் றன்பா லீயும்
வாலிய மன்னன் கீர்த்தி வழங்குமூ வுலக மெல்லாம். 788

மன்னனுக்கு அறிவியாமல் தானே அபகரித்துக் கொண்டவனுக்குத் தண்டனையும், அபராதமும்

இப்படி மன்னன் முன்னே றவனைக்கொண் டுவிடா தேதன்
கைப்பொருள் சரியா யீந்தக் கள்ளன்றன் பொருளைப் [பெற்றேன்
அப்பொருட் கீன மான கிரயத்தை யளித்து வாங்கித்
தப்பிலா திப்பொ ருட்குத் தகுங்கிரை யம்மிங் கீய்ந்தேன், 789

இதற்குநீ சாட்சி யாக வறிந்துகொண்டீ ரென்று சொன்னேன்
மதர்த்துநான் சாட்சி வைக்க மறந்துவிட் டேனேயல்லால்
அதற்குள கிரயமெல்லா மளித்துவிட் டேனு னென்று
பதற்றமில் லாமற் பொய்யைப் பகர்ந்துசா தித்து நிற்போன்,

உடையவ னற்ற மூன்றி லொருவர்வந்து விற்கும் போது
நடையினிற் செல்வோன் கண்டு நானிதற் குடையோ னென்று
தடைசெய்து சிறிது சொன்னத் தைக்கொடுத் தேனு [மொன்றும்
இடையிலே யீயா தேனு மெனதென்று பறித்துக் [கொள்வோன், 791

ஒருவன்ற னகையைக் கொள்ளென் றேதிவிற் றுப்போம் [பின்பு
கருதிவே றொருவ னந்த கைதனைக் கண்டே யாசை
மருவிமுன் கொண்ட வன்பால் வந்திதென் பொருடா னென்று
பெருகவே மொழிந்த தைத்தா வெனப்பல வந்தஞ் [செய்வோன், 792

இத்திறக் குற்றக் கார ரைவரேற் றிருந்த தைத்தான்
ஒத்தஞ்சு பங்காய்ப் பார்த்த தில்லொரு கூறுக் குள்ள
தைத்தண்ட மாக வாங்கச் சாற்றியவ் வஞ்சி லொன்றை
ஒத்திடிற் றேண்ணூற் றுறு பணத்திலுங் குறைந்தி ருந்தால்,

பகர்ந்தவத் தொண்ணூற் ரூறு பணத்தையே தெண்டம்
[வாங்கி
இகழ்(ந்)திட வொருப ணத்திற் கிசையவோ ரடிவீ தத்திற்
புகன்ற நீள் கசையி னலே யடிபொருத் தியதன் பின்பங்
ககந்தளர் குற்றக் கார னரும்பொரு ளீந்து வாங்கும், 794

பொருளையு மவன்மு னீந்த பொருள்கொடா தேப றித்தங்
குருகிய வுடையோன் கையி லுதவலே ஞாய மாகும்
ஒருவன்வந் திதையின் னுன்தந் தெனைவிற்கச் சொன்ன
[னென்னைக்
கருதிமுன் னெருவன் காட்டும் பொருளைவே றெருவன் காட்ட,

இப்படி யிரண்டு வாறு யெப்பொருள் வந்த தேனுஞ்
செப்பியே முதலா ளிக்குத் தெரியச்செய் ததன்பின் வாங்க
அப்படிச் செய்தி டானே லப்பொருட் கிடும்ப ணத்திற்
கொப்பவே யெண்ணி யெண்ணி யடிப்பதே யொழுங்கா
மென்றார். 796

இப்பொருட் குடையோன் யானென் றியம்பியே
[யொருவன் றுன
ஒப்புநற் காலத் தேனு முரைத்திடும் நிசியே யாதி
செப்புதுர்க் காலத் தேனும் வந்திடிற் றுணையாய் நால்வர்
தப்பிலா தறிய வாங்கத் தனித்ததை வாங்கொ ணதே. 797

தனித்திருந் ததைநீ யென்பாற் ருவென வாங்கி னேர்க்கும்
நினைத்துயர் பார லட்ச ணத்தினிற் சாற்று.....வா(?)
றினைத்தள்ளி யதிக லாபம் வைத்துக்கூ றிக்கொண்
[டோர்க்கும்
தொனிக்கவ னியச் சொன்னதொகைப்படிக் கடிக்க
[வேண்டும். 798

இங்கசு வாமி விற்கு மிலட்சண மியம்பி னேமேல்
பொங்கநன் கொடை திரும்பிப் போவது மேற்ற வற்கே
தங்கிலட் சணங்க டாமுந் தமிழ்மொழி விருத்தத் தாலே
பங்கமி லாம லார்க்கும் பரிவுறச் சாற்று வாமால். 799

அசுவாமி விற்கிற லட்சணம் முற்றும்.

---

# 36. நன்கொடை திரும்புகிற லட்சணமும் திரும்பாத லட்சணமும்

---

இப்பகுதியின் தலைப்பு திருப்பப்படும் நன்கொடைகளும், திரும்பப் படாத கொடைகளும் என்று பொருள்படும். ஏழுவகைக் கொடைகள் திரும்பாக் கொடைகளாகும் ; அவை :—சேவகர்க்குக் கொடுத்த சம்ப ளம், நண்பனுக்குச் கொடுத்தது, செய்த உதவிக்குப் பிரதியாகக் கொடுத்தது, பெண்ணுக்குப் பரிசமாகக் கொடுத்தது, குருவுக்கு அளித் தது, அறவிலைக்கு விற்ற சொத்து, தானங்கள். என்பன. திரும்பத்தக்க கொடைகள் பதினெட்டு விதம். அவை ;—பயத்தினுலீந்தது, வெறுப்பு, கோபம், பரிஹாசம், மறவி, சொல்மாற்றம் முதலிய காரணங்களால் ஈந்தவை, மற்றொருவனுக்குரியதை எடுத்துக் கொடுத்தது, திருப்பித் தருவதாகச் சொன்னவனுக்குக் கொடுத்தது, ஏமாந்து கொடுத்தது, தீவினைக்குக் கொடுத்தது, பைத்தியன், பேய் பிடித்தவன், கள்ளுண் டோன், வீட்டைவிட்டு விலக்கப்பட்டோன், மூடன், பாலன் முதலி யோர் கொடுத்தவை முதலியன திருப்பப்படக் கூடியவை. இப்படிப் பட்ட பொருள் கொண்டவன் குற்றவாளி. அவன் தண்டனைக்கு உரியவன். ஆனுல், கொடுக்கத் தகுதியற்றவர்கள் தருமத்திற்கென்று கொடுத்திருந்தால் அதனைத் திரும்பப் பெறுதல் தகாது.

இவையன்றி நன்னெறியிற் கொடுத்த கொடை எதுவும் திரும் பாது. ஒரு தருமம் செய்வதாகச் சொல்லி அது நிறைவேறுமுன் கொடுத்தவன் இறந்துவிட்டால் அவன் மகன் அதை நிறைவேற்ற வேண்டும். அம் மகன் சிசுவானுல் அதுவும் வேண்டியதில்லை.

திரும்பாத எழுவகைக் கொடைகள்

*தாகித்தே சேவித் தோர்க்குச் சம்பளங் கொடுத்துத் தம்,சி[1]*
*னேகித்தோ னுக்கு னக்கென் றேகினைத் திதனைத் தந்தேன்*
*மோகித்தே நீயா ளென்றே மொழிந்துத விவிட்ட சொத்தும்,[2]*
*பாகத்தால் முன்செய் தோர்க்குப் பதிலுப கரித்த சொத்தும்,[3]*

*பெண்ணுக்குட் பரிசமாகப் பெய்ததும்,[4] குருவா யாண்ட*
*அண்ணற்கென் றுதவுஞ் சொத்தும்,[5] அறவிலைக் குவிற்ற*
*[சொத்தும்,[6]*
*மண்ணிற்செய் தன்மங் கட்கே வழங்கிய சொத்தி[7]வ் வேழாய்*
*எண்ணிக்கை போல்வதற்கே யீந்துபின் திரும்பா தென்றார்.*

திரும்பத்தக்க பதினெண்வகைக் கொடைகள்

பயத்தினு லீந்த சொத்தும்,[1] பாரிபிள் ளைகள்வீட் டின்மேற்
கயப்புறுங் காலக் தன்னிற் கருதியே யீந்த சொத்தும்,[2]
வியப்பற்ற பொருளின்மேலே விளைந்தகோ பத்தினுலே
அயற்கென வுதவிவிட்ட வப்பொருள் வகைக டாமும்,[3] 802

கோபவே ளையிலெ டுத்துக் கொடுத்திடும் பொருள்க டாமும்,[4]
தாபல வெனிற்ப ரியாசத் திற்குக் கொடுத்த சொத்தும்,[5]
சோபம்போ லேனு மொன்றின் பேர்சொல்லி வேறொன்
[றினைத்தா
னேபண்பாய் மறவி யான நினைவினு லீந்த சொத்தும்,[6] 803

சொல்லிலே நூறி தென்று யிரத்தொகை யீவ போல
மெல்லவோர் தொகையைச் சொல்லி வேறொரு தொகையீந்
[தாலும்[7],
ஒல்லையி லொருவன் சொத்தை யொருவனே கொடுத்திட்
[டாலும்,[8]
அல்லவென் றொருவன் றனே தடுக்கையி லளித்த சொத்தும்,[9]

இப்பொரு ளுக்குநானே பதிலிடு வேனென் றேனுக்
கப்பொழு தீந்த சொத்தும்[10] அறிவிலாப் பொல்லான்
[றன்னைத்
தப்பிலா நல்லோ னென்று தான் கொண்டே யீய்ந்த
[சொத்தும்,[11]
ஒப்பில்பொல் லாத தான பொருளைநல் லதெனவே யுன்னி,

கொடுத்ததும்,[12] தீவி னைக்குக் கொடுத்ததும்,[13] பயித்தியம் பே
யடுத்தவன்,[14] வெறிப்ப தார்த்த மருந்துவோன்,[15] குடும்பம்
[விட்டே
எடுத்துத்தள் ளுபட்டோன்,[16] மூட [17]னீ,ரெட்டாண்
[டுற்ற பாலன்[18]
வடுக்கொளிவ் வைந்து பேரும் வழங்கிய சொத்து மெல்லாம்,

இக் குற்றவகையிற் கொண்ட பொருளைத் திரும்பக் கொடாதார்க்குத் தண்டனை

ஓதிய பதினெண் குற்ற முடையவ ராதி யீந்த
கோதிலாப் பொருள்தி ரும்பு கூறுமிக் குற்றக் காரர்
ஆதியோர் தரக்கொண் டோனை யப்பொருட் டொகைப்படிக்கே
பேதியா தடித்துத் தண்டம் பிசகின்றி வாங்க வேண்டும். 807

குற்றவகையில் தருமமாகக் கொடுத்ததைத் திரும்ப வாங்கலாகாது

தண்டம்வாங் கினது மன்றி யாக்கினை செயவும் வேண்டும்;
பண்டுசொல் குற்றக் காரர் பதினெண்மர் தன்மத் திற்கே
கண்டளித் திருந்தா லத்தைக் கருதியே வாங்க லாகா
விண்டதை வாங்கி னோர்கள் மிகுநர கெய்து வாரே. 808

நன்னெறியிற் கொடுத்த கொடை திரும்பாது

இக்குற்றம் பதினெட் டில்லா னீய்ந்தது திரும்பமாட்டா
தக்குற்ற மேயில் லாதா னன்புட னுருக் கேனும்
மிக்கதாந் தன்மத் திற்கும் விரும்பியின் னதினை யானே
முக்ய மாயீவே னென்று மொழிந்தது கொடுக்கு முன்னே,

தன்மம் கொடுக்க இசைந்தவன் இறந்தால், அவன் மகன் அதை நிறைவேற்ற வேண்டும்; மகன் சிசுவானுல் வேண்டா

மரித்தவன் போய்விட் டானேல் மகனதை லிகிதத் தாலும்
விரித்தறி சாட்சி யாலும் விளம்பியங் கறிந்து கொண்டு
தரித்ததை யளிக்க வேண்டுந் தருகின்றே னென்றோன் போகில்
அருத்திவைத் தவன்சி சுக்க ளளித்திட வேண்டா மென்றார்.

கொடுத்ததை வாங்கு கின்ற விலட்சணங் கூறி னேமேல்
எடுத்தொன்றை விலக்குக் கொள்ள மீண்டதைக் கொடுக்கு மந்த
வடுக்கொளா விலட்ச ணத்தை வடமொழி புகன்ற வாறே
தடுக்கொணுத் தமிழி னுலே சாற்றுவா முலகுக் கெல்லாம். 811

நன்கொடை திரும்புகிற லட்சணம், திரும்பாத லட்சணம் முற்றும்.

# 37. விலைக்கு வாங்கினது திருப்புகிற லட்சணம்

---

ஒருவன் விலைகொடுத்து ஒரு பொருளை வாங்கியபின் அது தனக்கு வேண்டியதில்லை என்று திருப்பிவிட வேண்டிய நிலைமை ஏற்படுவதுண்டு. அதற்குப் பொருளுக்கு ஏற்றபடி நஷ்டஈடுகளும், திருப்பும் கால எல்லைகளும் இப்பகுதியிற் கூறப்படுகின்றன.

வாங்கினதை வாங்கின அன்றைக்கே திருப்பிவிட்டால் கொடுத்த விலையைப் பெற்றுக்கொள்ளலாம். பாதிப்பணம் கொடுத்து எஞ்சிய பாதியை மூன்று தினத்தில் தருவதாகச் சொன்னதையும், இரண்டு பங்கு கொடுத்து வாங்கினதையும் மூன்று நாட்களுள் திருப்பிவிடலாம். இரும்புக்கு ஒரு நாள்; ஆண் அடிமைக்கு மூன்று நாள்; இரத்தினங்களுக்கு நாட்கள் மூன்று; பெண் அடிமைக்கு ஏழு நாள். நெல் முதலிய வித்துக்களுக்கு நாள் பத்து; வீடு முதலிய பதின்மூன்று பொருள்களுக்குப் பதினைந்து நாட்கள் (செய்யுள் 816); எருமை முதலிய விலங்குகட்கு ஒரு மாதம் (817).

இவ்வாறன்றி, விரும்பாவிட்டால் இத்தனை காலத்துக்குள் திருப்பிவிடலாகுமென்று ஒப்பந்தம் செய்துகொண்ட பொருள்களுக்கு மேலே குறித்த காலவரையறை இல்லை.

வாங்கின பொருளை மூன்று நாளைக்குள் திருப்புவதற்கு நிபந்தனைகள்.

*வாங்கின வுடனே யேனும் வாங்கிமூன் றுதினம் வைத்துப்*
*பாங்குட னனுப விக்கப் படுவதாஞ் சாதி பேத*
*மாங்குலப் பொருளி லொன்றை யறவிலை கொடுத்து வாங்கித்*
*தாங்கின பின்றன் னெஞ்சஞ் சரிபட்டுப் பொருந்தா தாகில்,*

*அன்றைக்கே கொடுத்து விட்டங் களித்ததன் முதலை வாங்கல்*
*நன்றுமூன் றுதினம் வைத்து நலம்பொசித் திடும்பொ ருட்கே*
*ஒன்றிய விலையிற் பாதி யுடன்கொடுத்து மற்றப் பாதி*
*சென்றுபின் றருவே னென்று செப்பிவாங் கியிருந் தானேல்,*

*மற்றைநாட் கொடுக்க விரண்டு பங்குக்கு வருஞ் [சொன் னத்தை*
*அற்றையே கையி லீந்தங் கொரு பங்குக் கான சொன்னம்*
*முற்றுமே பிறகீ வேனென் றேமொழிந் தேற்றி ருந்தாற்*
*குற்றமே யில்லை மூன்றும் நாளினிற் கொடுக்க லாமே.* 814

சில பொருள்களுக்கு நாள்வரையறை.

இரும்புவாங் கிடலன் றைக்கே யீய,வான் சிறைக்கு மூன்றுய்
வருந்தினம் இரத்தி னங்கள் வாங்கிடி லஞ்சு நாட்குள் ;
பொருந்துபெண் சிறையேழ் நாட்குள் ; பொலியும்நெல்
[வரகு சாமை
அருந்துமிவ் விதத்தா திக்கே யறைபத்து நாளைக் குள்ளே ; 815

வீடுகள் மனைகள் நன்செய் விளைகின்ற புன்செய் தோப்புக்
கூடுபல் லக்குத் தண்டி கையானை குதிரை கட்டில்
தோடுசோ ணையுங் கம்ப ளியுந்தலை யணைகள் சொல்லி
நாடுமிப் பதின்மூன் றைப்போற் பொருட்கு மூவைந்து நாளே.

எருமை,க டா,வா,க் காளை யிதனுட னெட்ட கங்கள்,
கருதும்ஆ டுடன்க டாய்கள், கழுதை,மற் றமிரு கங்கள்
பெருகுமிவ் வொன்பான் போலப் பேசிய மிருகங் கட்கே
வருதின முப்பதிற்குள் மறுத்தளித் திடவு மாமே. 817

இரும்பினை யாதி யாக வியம்பின பொருளை யெல்லாம்
விரும்பியே விலைக்குக் கொண்ட பின்வெறுப் பாகு மாகிற்
பொருந்திய ததனுக் கிங்கே புகன்றநா ளினுக்கு ளீய்ந்து
தருந்தங்கள் பொருளை மீளத் தாவென வாங்கிக் கொள்ளே.

ஒப்பந்தம் செய்துகொண்ட நாட்குளேயுந் திருப்பலாம்.

இப்பொருள் களினுக் கிங்கே யியம்பிய நாட்கு ளேனுஞ்
செப்புநா ளினுக்கு மேலே செல்லும்நா ளினிலென் றாலும்
ஒப்பியே யிலக்கு வைத்தா லோதுநா ளதனுக் கெல்லை
அப்பொழு தொப்பிப் பேசும் நாட்களு ளளிக்க வேண்டும்.819

விலைகொடுத் தெத்தை யேனும் விரும்பி வாங்கினபின் புத்தி
மலைவினல் வெறுப்புக் கண்டால் மறுத்ததைக்
[கொடுத்து விட்டே
இலையெனு தேமுன் னீந்த பொருள்கொள்ளு மிலட்ச ணத்தை
நலமறிந் திடச்சொன் னேஞ்சே தாரலட் சணமேற் சொல்வாம்.

விலைக்கு வாங்கினது திருப்புகிற லட்சணம் முற்றும்.

# 38. சேதார லட்சணம்

பொன்னுக்குச் சேதாரமில்லை. வெள்ளிக்குச் சேதாரம் நூற்றுக்கு இரண்டு. தாம்பிரத்துக்கு ஐந்து, ஈயத்துக்கும் பித்தளைக்கும் எட்டு; இரும்புக்குப் பத்து. இவ்வாறு சேதாரமுண்டாம்.

பட்டு, நூல், நார் இவற்றால் புடைவை நெய்யும்போது சேதாரம் அதிகம் நேராது, பூவேலை முதலியவற்றுடன் செய்யப்படும் பருத்தி, கம்பளி ஆகியவற்றிற்கு முப்பதுக்கு ஒன்று வீதம் குறையும். பருத்தியை இழை நூலாக்கும்போது நூறு பலத்துக்கு மூன்று பலம் குறையும். இடை பெருத்திடும் நூலுக்கு ஐந்து பலமும், மிகப் பெருத்த நூலானால் பத்துப் பலமும் குறையும்.

இக்கணக்கின்படி சேதாரம் தள்ளிக் கொடுக்கவேண்டும். இதற்கு மேல் சொல்லும் தொழிலாளிக்குத் தண்டனை கூறப்படுகிறது.

பொன்முதல் பட்டு ஈறாக உள்ள பொருள்கட்குச் சேதார லட்சணம்

எப்படித் தன்ம னத்திற் கேற்றந கைகள்செய் தாலும்
ஒப்பிலாத் தங்கம் பொன்னி லொருரவை யேனும் போகாது;
மெய்ப்புற நகைகள் செய்யில் வெள்ளிநூற் றுக்கி ரண்டும்
தப்பிலாத் தாம்பி ரத்திற் கஞ்சுமே குறைசே தாரம். 821

ஈயம்பித் தளைக்கு நூற்றுக் கெட்டுத்தான் குறையு மெந்தத்
தேயத்தும் நகைக ளாகச் செயிலிரும் பினுக்கும் பத்து
நேயத்தாற் பட்டு நூலை நாரினை நிறுத்துக் கொண்டே
ஆயத்தாற் புடவை செய்தா லதிகமுங் குறைவு மாகா. 822

பூக்கள்போற் கொடிகள் போலப் போட்டுநெய் பருத்தி யாடை
காக்கவே செயினு மற்றுங் கம்பளிச் சுளுகு கட்கு
நோக்கிலச் சாதி நூலி னுணுகிடை முப்ப துக்குத்
தாக்குமப் புடவை தூக்கி லொன்றுதான் குறையு மென்றார்.

பருத்தியி லிழைநூல் நூறு பலத்திற்கு மூன்று மத்தி
பெருத்திடும் நூலுக் கஞ்சு பலமுறப் பெருத்த நூலேல்
கருத்துற வையி ரண்டுங் கண்டிடு மதிக மாயே
பொருத்திய புடவை தன்னை நிறுத்திடும் பொழுது காணும்.

சேதாரக் கணக்கைத் தவருகச் சொன்னுல் தண்டனை

இப்பதி னொருபொ ருட்கு மிங்கியம் பியசே தாரம்
தப்பியே குறைத்துக் கூட்டித் தான்வாங்கிச் செய்தோன்
[சொன்னுல்
அப்பொழு தவனைத் தண்டித் துள்ளதை யளித்து விட்டு
வெப்புரு துடைய வற்கு மற்றதை மீட்டி யீயே. 825

இங்குச்சே தார லட்ச ணங்களை யியம்பி னேமேற்
பங்கமு ரும விந்தப் பாரினில் வேலை கொள்ளும்
துங்கமா மிலட்ச ணத்தைத் தொல்புவி யறியும் வண்ணம்
பொங்குமார் வத்தி னலே புகலுவே னிகழா வாறே. 826

சேதார லட்சணம் முற்றும்.

---

# 39. அடிமையை வேலை கொள்ளுகிற லட்சணம்

---

சம்பளத்துடன் வேலை, சம்பளமில்லாமல் வேலை என்று வேலையில் இரு விதங்களுண்டு. சீடர்கள் படிக்கு மட்டும் ஆசிரியர்க்கு வேலை செய்யக் கடமைப்பட்டவர்; இவர்கள் ஐந்து வகையினராவர்; இவர்கள் வேதாப்யாசி, சிற்பாப்பியாசி, கணக்கு அப்யாஸி, பொறித்தறி(?), அந்தேவாசி (Apprentice) எனப்படுவர். சம்பளங் கொடுத்து வேலை பெறற்குரியர், அதிகர்ம க்ருது, (மேல் பார்வை யாளன்), பிரத்தகன் (ஏவலுக்கு அடங்கி வேலை செய்வோன்), வீரவுத்தமன் (ஆயுதம் பிடித்து வேலை செய்வோன்), பண்ணைக்காரன் (விவசாயி), சுமை தூக்குவோன் ஆகிய நால்வருக்கும் சம்பளம் கொடுக்குமட்டும் வேலை உண்டு.

அடிமைகள் பதினைந்து வகையினர். அவர்களுள் (1) கிரக தாசன், (2) கிரீதன், (3) லப்தன், (4) உபாகதன், (5) பிரவசன். (6) தனதாசன், (7) யுத்தப்ராப்தன், (8) க்ரிஹிதன், (9) பிரதிபன்னன், (10) வடபன், (11) கிரேந்தா. இப்பதினேரு பேர்களான அடிமைகளை

அவர்களின் உடல் உள்ளவரையில் வேலை வாங்கலாம்; (12) ஆகிதன், என்பவனை அவன் தானாகப் போகுமட்டும் வேலை வாங்கலாம்; அவன் விடுதலையாம்போது அவன் இரண்டு பசுக்கள் கொடுத்துப் போக வேண்டும்; (13) இரணதாசன், தான் வாங்கின முதலையும் வட்டியையும் கொடுக்கும் வரையில் வேலை செய்ய வேண்டும்; (14) பத்ததாசன், என்றவன் எதுவரை ஆளாக இருந்து வேலைசெய்ய ஒப்புக் கொண்டானோ அதுவரையில் வேலை செய்யக் கடவன்; (15) பிரஷ்டனுக்கு எஜமானன் சோறுபோடு மட்டுமே வேலை உண்டு.

இவர்களைத் தவிர முறிச்சீட்டு எழுதி அடிமை வேலை செய்ய வருகிறவர்களுள், சிறையிலிருந்து கடத்தப்பட்டுக் கள்ளனால் விற்கப்பட்ட அடிமையை அரசன் பிடித்துக்கொண்டால் அவன் எழுதிக்கொடுத்த முறிச்சீட்டைக் கிழித்துவிடவேண்டும். பலாத்காரமாக அடிமைப்பட்டவர் சீட்டும் கிழிக்கப்பட வேண்டியதே. எஜமானனுக்குண்டான ஒரு பிராணபத்திலிருந்து தப்புவித்த அடிமையின் சீட்டும் கிழிக்கப்பட வேண்டும்.

படிக்குமட்டும் வேலை கொள்ளுதற்குரியர்

வேதசாத் திரங்கள் கேட்டு விளம்பிய சீஷ னென்றும்[1]
பேதமாய்ச் சிற்ப[2]மேடு கணக்குகள் பேசும் மூன்றும்[3]
போதமே யறியும் வண்ணம் பொறித்தறி அந்தே வாசி
கோதறிவ் விருவர் வேலை கொள்ளலாம் படிக்கு மட்டும். 827

சம்பளம் கொடுத்து ஏவல் பெறற்குரியர்.

ஏவலாள் சிலரை விட்டங் கேவியே வேலை கொள்ளும்
ஆவர முடையோ னன அதிகர்ம கிருது வொன்று;[1]
மாவல னேவச் செய்து வரும்பிர தகன்றன் கையில்
மேவவா யுதம்பி டிக்கும் வீரவுத்த மன்றோ னென்று;[2] 828

பயிர்வினை பார்க்கு மத்தி மப்பண்ணைக் காரன் றானென்(று);
உயிர்வெறுத் தேசு மட்டைச் சுமந்துண்ணு மதம னென்று;
பெயரிரண் டினிலிந் நாலு பேரையுஞ் சம்பளங்கள்
அயர்வுரு தியு மட்டும் வேலைகொள் ளவுமா மென்றார். 829

அடிமை வகைகளும் அவர்களை வேலை வாங்குங் காலங்களும்

தாசனு மென்ற பேரைச் சார்புழுக் கயர்மூ வைந்தில்
வாசமாய் வீட்டில் வைகும் புழுக்கச்சி வயிற்றிற் றேன்றி
நேசமாங் கிரக தாசன்[1] நினைந்தொரு வன்றான் விற்க
ஆசையால் விலைக்குக் கொண்டே யாண்டுவந் திடுங்கி ரீதன்;[2]

தானமாய் வாங்கும் லப்தன் தான்கொண்ட சொத்தி னேடே
ஈனமாய்ச் சேர்ந்து வந்த வுபாகதன்[4] இறந்து நாயன்
போனதா லங்கிஷ முட்டிப் போனபின் னவன்ற னுளைத்
தேனமர் மொழியாய்! மற்றோன் சேர்த்துக்கொண்
[டபிர வசன்,[5] 831

தாங்குவோன் றந்தை நாட்டொட் டிருக்கின்ற தனதா சன்றான்,[6]
ஓங்கிய யுத்தஞ் செய்தே செயித்துடன் பிடித்துவந்த
தேங்கிடும் யுத்த பிராபத்தன்,[7] செப்பும்பந் தயத்திற் றேற்றே
ஆங்கதிற் செயித்தோற் காளா யடங்கிடு கிரிகி தன்றான்,[8] 832

அன்னமே[1] வலிய வந்தங் காள்புகும் பிரதி பன்னன்[9]
கன்னியி விரும்புத் தாலி கட்டிவைத் துக்கொள் தக்க
மன்னும்வைப் பாட்டி பெற்ற மக்களாம் வடபன் றனும்[10]
தன்விலை பட்டு வந்த வர்தம்பிக் கிரேதா தானும்,[11] 833

இப்பதி னென்றுஞ் சாதி யில்வரு மாணைப் பெண்ணைத்
தப்பிலா துடல்க ளுள்ள தனையும் வேலை கொள்ள லாகும்;
செப்பரு பஞ்சத் தன்னம் தினமிட்டுச் சேர்த்துக் கொண்ட
ஒப்பில் ஆகிதனை[12] முன்சோ றுதவினேன் வெறுத்து நோக்கி,

ஆகிதனை வேலைகொள்ளும் நாளெல்லை

போவெனக் சொல்லும் மட்டும் புகலிந்த வழியை விட்டே
தாவென வியம்பித் தானெஞ் சங்கலைத் துத்தான் போவே
[னென்னில்,
தாவெனப் பசுவி ரண்டு கேள்பசுத் தரும்நாள் மட்டும்
கோவெலா மறிய வேலை கொள்வதா கிதனை யென்றார். 835

இரணதாசனை வேலைகொள்ளும் நாளெல்லை

ஒருவன்கொள் கடனை யெல்லா மு தவியே சேர்த்துக் கொள்ள
வரும்ரண தாசன் றன்னை வழங்கிய நிதிகட் கெல்லாங்
கருதியே தன்சா திக்குக் கழறிய வட்டி கூட்டித்
தருதின மட்டும் வேலை சாற்றியே கொள்ளலாமே. 836

பத்ததாசனை வேலைகொள்ளும் நாளெல்லை

இத்தனை தினமுன் னுளா யிருக்கின்றே னென்று வந்த
பத்ததா சனைய வன்றான் பகர்ந்திடும் தினத்தின் மட்டும்
புத்தியே பொருந்தும் வேலை புகன்றதைச் செய்வாய் என்றே
ஒத்துவே லைகொள லாமென் றுரைத்தது வடநூ றன்னில்.

பிரஷ்டனை வேலை கொள்ளும் நாளெல்லை

என்வயிற் றினுக்குச் சோற்றை ஈயும்நாள் மட்டும் நானே
உன்னடி யானுய் வாழ்வே னென்றுரை பிரஷ்டன் தன்னை
அன்னந்தா னிடுநாள் மட்டும் பிரஷ்டனைத் தன்னுள் போல
மன்னன்று னறிய வேலை கொள்வது வழக்கென் றுரே. 838

அப்பிரஷ் டன்று னுக வப்புறம் போவா னென்னில்,
வெப்புறப் போம்நாள் மட்டின் விளம்பியந் நாளுக் கெல்லாம்
தப்பிலா திட்ட வன்னத் தின்விலை தருநாள் மட்டுஞ்
செப்பின வேலை யெல்லாஞ் செய்யெனச் சாற்ற லாமே. 839

முறிச்சீட்டு கிழித்தற்குரியர்

கள்ளனு யிருப்போன் மற்றோர் சிறையினைக் கடத்தி வந்து
மெல்லவே பேசி விற்க விரும்பியே வாங்கு மாளை
வள்ளல்மன் னவன்ப றித்து வந்ததி னத்திற் சேர்த்தே
கொள்விலை முறியும் வாங்கிக் கிழித்திடக் கூற லாமே. 840

அடிமையி லாசை வைத்தே அவன்றனு யன்னு னஞ்சும்
படிசெய்து பலத்தில் வாங்கிப் பரிவுறு மடிமைக் கெல்லாம்
கொடியகள் ளன்பால் வாங்கு மடிமைக்குக் கூறு மாறே
துடியிடை மயிலே! மன்னர் துணிந்துசெய் திடலா மென்றார்.

நாயனுக் குவந்த பிராண வாபத்தை நானென் றேற்று
நேயமாய்த் தீர்த்து விட்ட புழுக்கையை நிகழா பத்துப்
போயபின் முறிகி ழித்துப் புகழவே தன்போ லாக்கித்
தேயமே யறிய நன்மைக் கிருத்துதல் செம்மை யென்ருர். 842

அடிமையை வேலை கொள்ளு மிலட்சண மனைத்து மிந்தப்
படியினில் விளங்க வேண்டிப் பகர்ந்தன மிதன்மே லென்றும்
கொடிதின்றிச் சம்ப ளங்கள் கொடுக்கின்ற லட்ச ணத்தை
மடிவின்றித் தமிழ்ப் பாவாலே வழுத்துவே னிழுக்கி லாதே.

அடிமையை வேலைகொள்ளுகிற லட்சணம் முற்றும்.

---

# 40. சம்பளம் கொடுக்கின்ற லட்சணம்

---

செய்த வேலைக்குத் தக்க கூலி என்று பேசிக்கொண்டு செய்யும் வேலைகள் சில உண்டு. பால்கொடா ஆடு மாடு மேய்த்தல், பயிரிடு தல், சில வியாபாரங்கள் இவற்றிற்கு வாரம் பத்திலொரு பங்கு ஆகும். வேலை ஒப்பந்தமிருந்தும் வேலையை அதிகமாகவோ குறைவாகவோ செய் வதால் எஜமானனுக்கு அதிக இலாப நஷ்டங்கள் ஏற்படுமாஞல் அவற்றிற்கேற்றபடி சம்பள உயர்வு தாழ்வுகள் உண்டு. பலர் செய்யும் வேலையை ஒருவன் செய்தால் அப்பலர் சம்பளத்தை அவ்வொருவனுக் கும், ஒருவன் செய்யும் வேலையைப் பலர் செய்தால் அவன் சம்பளத்தை அப்பலருக்கும் கொடுக்கவேண்டும். சம்பளத்தை முன்னும் இடையிலும் பின்னும் கொடுக்கலாம். ஒப்புக்கொண்ட வேலையைக் குறைவாகச் செய்தால் அதற்கேற்றபடி சம்பளக்குறைவு அமையும்.

வாரத்திற்குரிய வேலைகள்

பாலிஞ லேனும்பா ரினிலுழு கின்ற தாதி
வேலை யாலேனும் பால்கொடா மிருகமேய்ப் பதற்கும்,
சாலி யாதியாம் பயிரினைத் தான்செய்வ தற்கும்,
பாலி தாகும்வியா பாரத்தின் வகைசெய்வ தற்கும், 844

இந்த மூவகை வேலையி லேவச்செய் பவன்றன்
தந்தி டுஞ்சம்ப ளங்கள்பே சாதுபோய்ச் செய்து
வந்த லாபத்தை வரம்பிட்டுப் பத்திலோர் பங்கை
அந்த வேலைக்குக் கூலியென் றளித்திட வேண்டும். 845

### குறித்த கூலியுள்ள வேலையில் இலாப நஷ்டங்கள் ஏற்ற அதிகமும் குறைவும்

இன்ன வேலைக்குக் கூலியிவ் வளவென்று தீர்த்துச்
சொன்ன வம்முத லாளிசொல் லிடத்தையும் காலம்
தன்னை யும்சொன்ன வேலைக டமையுமே விட்டுப்
பின்ன மாகத்தன் நினைவுபோற் பெயர்த்துச்செய் ததிலே,

முந்தி யம்முத லாளிதான் மொழிந்ததை விடவே
சொந்த மாகிய லாபத்தின் றொகையுயர்ந் துகண்டால்
அந்தச் சேவகற் கதிகமாய்ச் சம்பள மளிக்கத்
தந்த லாபங்கள் குறைந்திடில் குறைந்தசம் பளம்தான். 847

### பலர் வேலையை ஒருவனே முடித்தல்

நாலு பேர்செய்து முடிக்கநா டிவைத்தவே லையினை
ஏலு மென்றொரு வன்செய்து முடித்திடு வானேல்
பாலும் நேர்விழி யாய்! அந்த வொருவர்க்குப் பரிந்தே
மேலும் நாலுபேர் சம்பளத் தையுமிட விதியே. 818

### ஒருவர் செய்யத்தக்க வேலையைப் பலர்கூடி முடித்தல்

மத்தி யத்தரொப் பஒருவன் செய்வே லையை வளையாப்
புத்திக் காரராய் நாலுபேர் புரிந்ததை முடித்தால்
ஒத்துப் பேசியவ் வொருவன்சம் பளத்தையும் நால்வர்க்(கு)
எத்திக் கோர்களு மறிவதற் கீந்திட வேண்டும். 849

### சம்பளம் கொடுக்குங் காலம்

இந்த வேலையை முடிக்கிற்சம் பளங்களி தனைநான்
தந்து ரக்ஷிப்பே னெனச்சொல்சம் பளங்களை வேலை
வந்து செய்யு முன்னும்அதில் வளைந்துசெய் போதும்
அந்த வேலை செய்தானபின் னுமளித்திட லாமே. 850

குறையாக விட்ட வேலைக்கு

*மதித்த வேலைக்குத் தீர்த்தசம் பளத்தினை வாங்கி*
*அதிற் சிறிதுவே லையைச்செய்தே யவன் விட்டு விட்டால்,*
*மிதித்து மற்றவே லையைச்செய்யென் றேவிள்ளுவ தல்லால்*
*எதிர்த்து முன்னிட்ட சம்பளம் வாங்குவ திலையே.* 851

*சம்ப ளங்களைக் கொடுக்கின்ற விலட்சணம் சாற்றி*
*அம்பு விக்கெலா மறிந்திட அளித்தசம் பளத்தை*
*வெம்பி வாங்கிய விலட்சணம் விளம்புவா மினிமேல்*
*உம்ப ரும்மகிழ் பெரியவ ரிதனையுட் கொள்வார்.* 852

சம்பளம் கொடுக்கின்ற லட்சணம் முற்றும்.

---

# 41. கொடுத்த சம்பளத்தை வாங்குகிற லட்சணம்

---

சம்பளத்தைப் பெற்றுக்கொண்டு வேலை செய்யாவிட்டாலும், பின்னே சம்பளம் வாங்குவதாகச் சொல்லி வேலையில் குறை வைத்தாலும், பிரயாணத்தில் சுமை தூக்கிவர ஏற்று வாராவிட்டாலும், நடுவழியில் விட்டாலும் செய்யவேண்டுவன இப்பகுதியில் கூறப்படுகின்றன,

இப்பகுதியின் இடையிலே 859-ஆம் செய்யுளுடன் ஏடு முடிந்துவிட்டது. இதற்கு மேலுள்ள பகுதிகளிலுள்ள விஷயம் வேறு வழிகளில் சேகரித்து உரைநடையாக இயைக்கப் பெற்றிருக்கின்றது.

ஒருவன் வழியிலே, இன்ன இன்ன வேலை செய்கிறேன் அதற்குச் சம்பளம் இவ்வளவு என்று தீர்த்து வாங்கிக்கொண்டு, வழியிற் போன பிறகு மனமுரணினாலே முன் சொல்லியிருந்த வேலையில் எவ்வளவேனுஞ் செய்யாதிருந்தானானால், அவனை அடித்துக் கொடுத்திருந்த சம்பளம் அவ்வளவையும் வாங்கிக்கொள்ள வேண்டும்; சிறிது வேலையைச் செய்து சிறிது வேலையைச் செய்யமாட்டேனென்று சொல்லிவிட்டானானால், செய்த வேலைக்குத் தக்க சம்பளத்தைக் கொடுத்து மீதத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். தக்க காரணங்களினாலே, அவன்வேலை செய்யமாட்டாமற் போய்விட்டானானால், கொடுத்திருந்த

சம்பளத்தில் பத்திலொரு பங்கு மாத்திரம் வாங்கிக்கொள்ள வேண்டும். ஒருவனிடம் மற்றொருவன் சம்பளம் வாங்கிக்கொண்டு, ஆயுதங்களை யாவது மற்ற சுமையையாவது எடுத்துக்கொண்டு சம்பளங் கொடுத்த யசமானனுடன் போகிறபோது, இராசீக தெய்வீகத்தினாலே அப்பொருள் கள் போய்விட்டால், அவற்றிற்குள்ள விலை சுமந்துகொண்டு போன வன் கொடுக்கவேண்டியதில்லை. சுமந்துகொண்டு போனவன் கேட்டினால் பொருள்கள் போய்விட்டால், அவன் யசமானன் சொன்ன விலை கொடுக்கவேண்டும்.

வெகுசன காரியமாக அரசனிடம் வந்தவனுக்கு அரசன் கொடுத்த வெகுமதியை வாங்கினவன், வெகுசனத்தின் முன்னே அவ் வெகுமதியைக் கொண்டுபோய் வைத்துவிட வேண்டும். வைத்து விடாமல் தான் எடுத்துக்கொண்டானானால், அவனிடம் அரசன் கொடுத்த முதலைப் போலே பத்துப்பங்கு கூட்டி வாங்கி வெகு சனங் களுக்கு ஒத்த செலவில் செலவிட்டுக்கொள்ள வேண்டும்.

சம்பளத்தைப் பெற்றுக்கொண்டு வேலை செய்யாதவனுக்குத் தண்டனை.

*இவ்வ ளவுவே லையினுக் கேயிதுசம்பள மென்று*
*செவ்வு டன்மதிப் பாய்ச்சொலித் தீர்த்தசம் பளங்கள்*
*அவ்வ ளவையுமுந் தியேவாங் கினவ வன்றான்*
*எவ்வும் வேலையில் யாதேனுஞ் செய்தொழி யானேல்,* 853

*அவனைக் கூட்டிவந் தடித்தந்தச் சம்பளத் தினையும்*
*புவனத் தேதெரிந் திடவந்த பொருளிற்குச் சமமாய்*
*உவமிப் பாகிய பொருளையும் வாங்கியவ் வுடையோற்*
*கிவிடத் தேபுகழ் பெற்றிட வீவர்கள் பெரியோர்.* 854

பின் சம்பளம் வாங்குவதாகச் சொல்லி வேலையிற் குறை வைத்தவர்க்குத் தண்டனை.

*இந்த வேலைக்குச் சம்பள மிவ்வள வென்றும்*
*அந்தச் சம்பளம் வேலைக்குப் பின்னளி யென்றும்*
*முந்தித் தீர்த்தந்த வேலையிற் சிறிதினையு முடித்துச்*
*சிந்தித் தேயந்த வேலையிற் சிலமுடி யானேல்,* 855

சிறிது வேலைசெய் யான்றனைச் சீக்கிரத் தழைத்துப்
பொறிக லங்கிடப் பேசிமுன் புகன்றசம் பளத்தை
நெறிந டத்துவோர் வாங்கிமுன் னின்றுவே லையிட்ட
குறிம னத்தொறு முடையவற் கேகொடுத் திடென்றார். 856

பிரயாணத்தில் சுமை தூக்கிவர ஏற்று வாராதவனுக்குத் தண்டனை

அயற்ப திக்கிந்தத் தினத்தினிற் போகலா மென்று
முயற்சி செய்குவோன் சுமைகொண்டு வாவென மொழிந்து
நயத்தி னுனெடுஞ் சம்பள மதுதனை ஏற்றான்
தயக்க மாயச மானன்றான் புறப்படும் சமயம், 857

நானுன் கூடவே வருவதில் லையென நவில்வோன்
தானு முண்ணமுன் னீந்திடுஞ் சம்பள மதைப்போல்
வானும் போற்றவே இருபங்கு வாங்கிமுன் னிடுவோற்
கேநு டங்கிடாப் பெரியவ ரிடுவர்கள் கிளர்ந்தே. 858

அப்ப டிக்குச்சம் பளங்கொண்டோன் பாதியா றினிற்போய்த்
தப்பி டமேலவ ரேனினி யெனப்பகர்ந்து விட்டானேல்,
செப்ப மாயிடுஞ் சம்பள முழுவதி னையுமே
இப்பொ ழுதினிற் றாவென வாங்கவே யியம்பும். 859

...........................................................

(இதனுடன் சுவடி முடிந்து விடுகிறது)

கொடுத்த சம்பளத்தை வாங்கும் லட்சணம் முற்றும்.

---

## 42. வண்ணான் லட்சணம்

---

வண்ணானிடம் வெளுக்கக்கொடுத்த சீலையை சிலநாட்கள், அவன் தான் உடுத்துக்கொண்டிருந்தானானல், அவனை அடித்து, 'மூன்று பணம்' அபராதம் வாங்கவேண்டும். துணியை மாற்றிக்கொடுத்தானானல், 'பத்துப்' பணம் அபராதம் வாங்கவேண்டும். வண்ணான் தன் திறக்கேட்டினாலே ஒரு தரம் வெளுத்த சீலையைக் கெட்டுப்போக

விட்டாஞனல், அந்தச் சீலை வாங்கின கிரயத்துக்கு 'எட்டில் ஒரு பங்கு' தள்ளி, நின்ற பணத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். இரண்டு தரம் வெளுத்த சீலையானல், 'நாலிலொரு பங்கு' தள்ளியும், மூன்று தரம் வெளுத்த சீலையானல் 'மூன்றிலொரு' பங்கு தள்ளியும், நாலு தரம் வெளுத்த சீலையானல் 'முக்கால் பங்கு' தள்ளியும், ஐந்து தரம் வெளுத்த சீலையானல் 'முக்காலே அரைக்கால்' பங்கு தள்ளியும், பணத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். எட்டுத்தரமுதல் வெளுத்த சீலைக்குச் சீலைப்பலம் பார்த்துக்கொண்டு வாங்கிக்கொள்ள வேண்டும்.

வண்ணுன் லட்சணம் முற்றும்.

---

# 43. சொக்கட்டாஞதி, சோழியாதி, விளையாட்டு லட்சணம்

---

சொக்கட்டான், சதுரங்கம், சோழி, தாயம், ஏழுதாயம், புலுதம் இவை முதலாகிய உயிரில்லாத வஸ்துக்களை வைத்து விளையாடுகிறதற்கு ஒருவன் ஒரு தாயமுங் கட்டி வைத்துக்கொண்டு, அந்தப் பொதுத் தானத்தில் விளையாடுகிற உயிரில்லாத வஸ்துக்களையும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். அவன் அந்தச் சபைக்கு யசமான்; அவ னுக்குச் 'சபாபதி' என்று பெயர். அந்தச் சபாபதியினிடம் மத்தியஸ்த மாய்ப் பந்தயப் பணத்தை ரொக்கமாகப் பொதுக்கட்டி வைத்துவிட்டுச் சொக்கட்டான் முதலானவற்றை ஆடித் தோற்ருல், பொதுக் கட்டின பணத்தை வென்றவன் ஓரளவு கிரகத்தஞக இருந்தாஞனற், பொதுக் கட்டியிருந்த பணத்திலே இருபதிலொரு பங்கு அந்தச் சபாபதி எடுத் துக்கொண்டு, நின்ற பத்தொன்பது பங்கையும் அந்த வென்ற கிரகத் தனுக்குக் கொடுத்துவிட வேண்டும். வென்றவன் தூர்த்தஞக விருந் தால், சபாபதி தன்னிடம் பொதுக் கட்டியிருந்த பணத்தில் பத்திலொரு பங்கு எடுத்துக்கொண்டு, நின்ற ஒன்பது பங்கையும் வென்ற தூர்த்த னுக்குக் கொடுத்துவிட வேண்டும். இந்த இருவகை மானுடரில் எவஞ ஞலும் விளையாடுகிற பந்தயத்துக்குப் பணம் அந்தச்சபாபதியிடம் அடகு வைத்திருந்தாலும், அல்லது அந்தச் சபாபதிக்கேற்ப வாக்குச் சொல்லி யிருந்தாலும், அந்தப் பணம் தோற்றவன் வென்றவனுக்குக் கொடுக்கிற

வரையும், தோற்றவன் கிரகத்தனுகயிருந்தால் மாதம் ஒன்றுக்குப் பொன் பத்துக்கு அஞ்சு பணம் வீதம் வட்டியும், தோற்றவன் தூர்த்தனு யிருந்தானுனல் மாதம் ஒன்றுக்குப் பொன் பத்துக்குப் பத்துப் பணம் கூடின வட்டியும் முதலையும் சபாபதி வாங்கி, அதில் வந்த வட்டிப் பணத்தையும் வென்றவனிடம் வாங்கவேண்டிய பங்குப் பணத்தையுஞ் தான் எடுத்துக்கொண்டு மற்றப் பணத்தை வென்றவனுக்குக் கொடுத்துவிட வேண்டும். தோற்றவனிடமிருந்து வருகிற வட்டிப் பணத்தில் வென்றவனுக்கு ஒன்றும் சேராது. சபாபதியிடம் வந்த வட்டிப் பணத்திலும் பங்குப் பணத்திலும் ஐந்திலொரு பங்கு கொடுத்து விட்டு நின்ற ஐந்து பங்கையும் சபாபதி எடுத்துக்கொள்ள வேண்டும். தோற்றவன் சபாபதிக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுக்க மறுத்தா னுனல், அரசன் நடந்த செய்திகளைச் சாட்சிகளைக்கொண்டு அறிந்து, தோற்றவனை அடித்துப் பணத்தை வாங்கி உரிய பங்கை எடுத்துக் கொண்டு, மற்றதைச் சபாபதியிடம் கொடுத்துவிட வேண்டும். ஆடு கிறபோது பொய்யாக ஆடினவனையும், மணி மந்திர ஔடதங்களிலே ஏமாற்றுகிறவனையும், உபாயமாய்க் கவற்றை உருட்டுகிறவனையும், தலை யைச் சிரைத்து, எருக்கிலை மாலை போட்டு, அங்கவீனம் பண்ணி, ஊரைச் சுற்றி அடித்துவிடவேண்டும்.

ஆட்டுக்கிடாய் முதலாகிய நாற்கால் மிருகங்கள், கோழி, காடை முதலாகிய பறவைகள் இவற்றைப் போருக்கு விடுகிற லட்சணம்.

ஒரு பொதுத்தானங் கட்டி, (அதில்) சபாபதியிருந்துகொண்டு அவனவனிடம் இருக்கிற மிருகங்கள் பறவைகளைக் கொண்டு வந்து போருக்கு விடச்சொல்லி, முன் சொக்கட்டான் முதலானவற்றிற்குச் சொல்லியிருக்கிறபடிக்குப் பங்கு வாங்கி, இராசாவுக்குங் கொடுத்துத் தானுமெடுத்துக்கொண்டு வென்றவனுக்குங் கொடுத்துவிட வேண்டும். இந்த விடங்களிலே நடக்கிற அநியாயங்களை அறிகின்றதற்கு அரசனும் ஒற்றரை நியமித்து வைக்கவேண்டும். இந்தச் சூது, விலங்கு, பறவைப் போர் விளையாடல்களை முன் பெரியோர்கள் விளையாடியிருக்கிறபடியி னுலே, ஈனமான காரியமென்று சொல்லப்படாது.

சொக்கட்டானுதி, சோழியாதி விளையாட்டு லட்சணம் முற்றும்.

---

# 44. வியாபார லட்சணம்

தன் ஊரிலாவது சமீபத்திலிருக்கிற ஊரிலாவது வாங்கி வந்து அன்றைக்கு விற்றுவிடுகிற பொருள்களுக்கு—நூறு பணத்திற்கு வாங்கின பொருளுக்கு ஐந்து பணம் இலாபம் வரும்படியாக விற்க வேண்டும். தூரமாயிருக்கிற ஊரிலேயாவது, பிரதேசத்திலேயாவது வாங்கிவந்து அன்றைக்கு விற்றுப் போடுகிறதற்கு—நூறு பணத்திற்கு வாங்கின பொருளுக்குப் பத்துபபணம் இலாபம் வரும்படியாக விற்கவேண்டும். இந்த இரண்டிடத்திலேயும் வாங்கிவந்து நாட்பட இருந்து விற்கிறதற்கு, நூறு பணத்திற்கு வாங்கின பொருளுக்கும் பன்னிரண்டரைப் பணம் லாபம் வரும்படியாக விற்கவேண்டும். இந்த மூன்று வகையாக விற்கிற இடத்தில் இந்த இந்தப்படிக்கு இலாபங் காண விற்கிறதை விட்டு, அதிக இலாபம் வைத்து விற்கிறவனை 'இருநூற்று எட்டு அடியும்' அடித்து, 'இருநூற்று எட்டுப் பணம் அபராதமும்' வாங்கவேண்டும்.

எந்தப் பொருளுக்கும் அரசன் வைத்திருக்கிற விலையை அல்லாமல், ஏற்றமாய் ஆனுலும் குறைச்சலாயாலுலும் விற்றவனையும், ஒரு பதார்த்தத்தைக் குறைக்கவேண்டுமென்று உள்ளே பதுக்கொள்பவனையும், ஆயிரம் பணம் அபராதம் விதிக்கவேண்டும்.

மருந்துச் சரக்குகள், முதலான எட்டுப் பதார்த்தங்களில்...தாழ்ந்த விலைச்சாமான்களைக் கொண்டுவந்து விற்றவனைப் பதினெட்டு அடியும் அடித்து, பதினெட்டுப்பணமும் அபராதம் வாங்கவேண்டும். வாசனையில்லாததற்கு வாசனை கட்டி விற்றவன், புலித்தோலென்று ஆனைத்தோலைக் காட்டுகிறதுபோலத் தோல் மாருட்டமாய் விற்றவன், பட்டு நூல் என்று பருத்தி நூலை விற்றவன், சந்தனக்கட்டை என்று வில்வக் கட்டையை விற்றவ்ன், ஒரு மரப்பட்டை என்று மற்றொருமரப்பட்டையை விற்றவன், பட்டு வஸ்திரமென்று பட்டும் பருத்தியுமாக நெய்திருக்கிற வஸ்திரத்தை விற்றவன், ஆக இந்த "ஆறுபேரையும்" ஒவ்வொரு குற்றத்துக்கு நூற்றிருபத்தெட்டு அடியும் அடித்து, நூற்றிருபத்தெட்டுப் பணம் வீதமும் அபராதம் வாங்கவேண்டும்.

உள்ளூரிலே கிடைக்கிற பொருளில் இன்னது தருகிறேனென்று அதற்குள்ள விலேயை வாங்கிக்கொண்டு அந்தப் பொருளேயுங் கொடாமலிருந்து, அந்தப் பொருளுக்கும் நாளுக்கு நாள் விலே கூடிக் கொண்டு வருகிறதாக விருந்தால், அந்தச் சரக்குக் கொடாத நாள் வரைக்கும் வட்டி கூட்டி, கூட்டின வட்டிக்கும் முதலுக்கும் அந்தச் சரக்கைக் கொடுத்துவிடச் சொல்ல வேண்டும். அந்தச் சரக்குச் சிறிது நாளிலே ஒன்றுக்கு இரண்டு மூன்று ஆதாயங்காண்கிற பொருளாக இருந்து விட்டால், அதற்குத் தக்க அதிக வட்டி கூட்டிக் கொடுக்கச் சொல்லவேண்டும்.

அயல் தேசத்திலே இருந்து வாங்கி வந்த பொருளுக்குமுன்னதாகப் பணத்தை வாங்கிக் கொண்டு, சரக்கைக் கொடாமல் இருந்து விட்டவனே நூற்றுக்குப் பத்துப் பணம் வீதம் வட்டி கூட்டிக் கூடின வட்டிக்கும் முதலுக்கும் அந்தச் சரக்கைக் கொடுக்கச் சொல்ல வேண்டும்.

இன்ன சரக்குத் தருகிறேனென்று சொல்லி முன்னதாகப் பணம் வாங்கிக்கொண்டு அந்தச் சரக்கைக் கொடாமலிருக்கிறபோது அந்தச் சரக்கு நாளுக்கு நாள் மலிந்து போய் விட்டால், வட்டியில்லாமல் கொடுத்த முதலுக்கு மாத்திரம் அன்றைக்கு விற்கிறபடிக்குச் சரக்கைக் கொடுத்துவிடச் சொல்லவேண்டும்.

சீலே வியாபாரம் பண்ணுகிறவன் தானுடுத்த சீலேயை விற்ருனுல், பத்துப் பணம் அபராதம் வாங்கி, பத்து அடியும் அடித்து விட்டு விடவேண்டும்,

இன்ன சரக்கை இன்னவேளே வந்து வாங்கிக்கொள் என்று கெடுச் சொல்லி, முன்னதாகப் பணம் வாங்கியிருக்கப் பணங்கொடுத்தவன் அந்தக் கெடுவில் வந்து சரக்கை வாங்காமல் இருந்து விட்டால் அவன் வருகிறபொழுது அந்தச் சரக்கு விலே விழுந்து போனுலும், இராசீக தெய்வீகங்களினுலே அந்தப் பொருளே போய்விட்டாலும், அந்த நட்டம் பணங் கொடுத்தவனுக்குத்தான். பேசிப் போன கெடுவிலே பணங் கொடுத்தவன் வந்து கேட்கப் பணம் வாங்கினவன் சரக்கைக் கொடாமல் இருந்து விட்டால், அப்படி வந்தமுதலின் சேதம் பணம் வாங்கினவனுக்குத்தான், வாங்கியிருந்த பணத்துக்கு வேறே சரக்கு வாங்கி முதலாளிக்குக் கொடுக்க வேண்டும்.

ஒருவனுக்குக் காட்டி விலே தீர்த்துப் பணம் வாங்கிக் கொண்ட பொருளே, வேறே ஒருவனுக்கு விற்றுவிட்டாலும், நல்ல சரக்கைக் காண்பித்து விலே தீர்த்துக் கொண்டு ஆகாத சரக்கைக் கொடுத்தாலும், முன் வாங்கியிருந்த பணத்துக்கு வட்டி வாங்கி முதலாளிக்குக் கொடுத்துவிட வேண்டும். அயலூருக்குக் கொண்டுபோய் வியாபாரம் பண்ணுகிறவனிடம் இன்ன சரக்குத் தருகிறேனென்று பணம் வாங்கிச் சரக்கைக் கொடாமலிருந்துவிட்டால், பணங் கொடுத்தவனுக்கு அயலூரிலே கிடைக்கிற லாபத்தை லிகித சாட்சிகளினுல் நிசப் படுத்திக் கேட்டறிந்து கொண்டு, அந்த இலாபத்திற்கும் முதலுக்கும் சரக்கைக் கொடுத்துவிடச் சொல்ல வேண்டும். ஒரு பொருளே விலேக் குப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டு இந்தச் சரக்கு எனக்குச் சம்மதியில்லா விட்டால் இத்தனே நாளேயிலே கொண்டுவந்து கொடுத்து விடுவேன் என்று சொல்லித் திருப்பி விட்டானுனல், வாங்கின பணத் தைச் சரியாகக் கொடுத்து விடவேண்டும். கொடுத்த மறுநாட் கொண்டு வந்து தந்தால் முதலில் பத்திலொரு பங்கு எடுத்துக்கொண்டு நின்ற ஒன்பது பங்கையையும் கொடுத்து விடவேண்டும். கெடுக் கழித்த இரண்டாம் நாட்கொண்டு வந்து தந்நால் முதலில் ஐந்திலொரு பங்கு எடுத்துக்கொண்டு நின்ற நாலுபங்கையும் கொடுத்து விட வேண்டும். கெடுக்கழித்த மூன்ரு நாள் கொண்டுவந்து தந்தால், அந்தப் பொருளே எரிக்க வேண்டியதுமில்லே. பணங் கொடுக்கவேண் டியதுமில்லே, கெடுக்கழித்த நாலாம் நாள் வந்து முன் வாங்கின பொரு ளேக் கொடுத்துப் பணத்தைக் கேட்டுச் சங்கடப்படுத்தினுனல், அந்தப் பொருளில் ஆறிலொரு பங்கு அபராதமும் வாங்கிக் கொண்டு அந்தப் பணத்துக்குத் தக்கபடி அடித்துச் சங்கடப்படுத்தினவனேத் துரத்தி விடவேண்டுமே அல்லாமற் சரக்கை வாங்கிக்கொண்டு பணத்தைத் திருப்பிக் கொடுக்கச் சொல்ல வேண்டியதில்லே.

வியாபார லட்சணம் முற்றும்

---

# 45. அதிகப்பேச்சுச் சொன்னவனைத் தண்டிக்கிற லட்சணம்

குற்றம் இல்லாதவனைக் குற்றமுடையவனென்றும், அழகில்லாத வனை அழகனென்றும் பேசுவது போன்ற பேச்சுக்களுக்கு அதிகப்பேச்சு என்பது பெயர். நாடு, ஜாதி, பெண் இவர்களைக் குறித்து இழிவுபடப் பேசுவது வசை (வைதல்) எனப்படும், தன் மாதா, பிதா, மாமன், மாமி, தமையன், மதனி, குரு, குரு பத்தினி, தன்பெண்சாதி இவ்வொன் பது பேர்களுள் எவரேனும் குற்றம் செய்யாமலிருக்கிற போது அவரை ஒருவரையாகிலும் அதிகப் பேச்சுச் சொன்னவனை "ஐம்பது அடியும்" அடித்து, 'ஐம்பது பணம் அபராதமும்' வாங்கவேண்டும். தெய் வத்தையாகிலும் வெகு சனங்களை யாகிலும் அதிகப் பேச்சுச் சொன் னவனை "முப்பத்தேழு அடியும்" அடித்து, முப்பத்தேழரைப் பணமும் அபராதம் வாங்கவேண்டும். இவர்களை வைதானுல், எழுபத்தைந்து அடியும் அடித்து, உதட்டையும் அறுத்து, முப்பத்தைந்து பணமும் அபராதம் வாங்க வேண்டும்.

இவர்கள் நீங்கலாகப் பிற சம்சாரிக்காரரை அதிகப் பேச்சுச் சொன்னுல் பதின்மூன்று அடியும் அடித்துப் பதின்மூன் றரைப் பணம் அபராதம் வாங்கவேண்டும். இவர்களை வைதால், இருபத்தாறு அடியும் அடித்து இருபத்தேழு பணம் அபராதம் வாங்கவேண்டும். விபசாரியையாவது தனக்குக் கீழ்ப்பட்ட சாதியை யாவது அதிகப் பேச்சுச் சொல்லி விட்டால் பன்னிரண்டு அடியும் அடித்து, பன்னிரண்டரைப் பணமும் அபராதம் வாங்கவேண்டும். இவர்களை வைதவனை இருபத்தைந்து அடியும் அடித்து இருபத்தைந்து பணமும் அபராதம் வாங்கவேண்டும்.

எவனுனாலும் தனக்கு உயர்ந்த சாதியில் உள்ள பேரை வைது விட்டால் அவன் சாதிக்குத் தக்கன யோசனைப் பண்ணிக்கொண்டு அத்தனை அடியும் அடித்து, அத்தனை பணம் அபராதமும் வாங்கி உதட்டையும் அறுத்துப் போடவேண்டும். ஒருவன் மாதா முதலாகிய "ஒன்பது பேரில்" தன் பெண்சாதி நீங்கலாக மற்ற எட்டுப்பேருங் குற்றஞ் செய்திருந்தாலும், அவர்களை அதிகப்பேச்சு சொல்லவும்படாது; வையவும் படாது. தன் பெண்சாதி குற்றஞ் செய்திருந்தால் அதிகப் பேச்சுஞ் சொல்லலாகும். அவளை வையத் தக்கபடியும் வையலாகும்.

"அதிகப் பேச்சுச் சொன்னவனை தண்டிக்கிற லட்சணம் முற்றும்"

# 46. அடித்துக் கொள்ளுகிற குற்றத்துக்குத் தண்டனை லட்சணம்

எந்தச் சாதிக்காரனானாலும், எந்தச் சாதியிலுள்ளவனை ஆனாலுங் கொன்றுவிட்டால் அவனையும், தன் குருவையாவது தன் ஆசாரியா ராகிய புரோகிதரையாவது அடித்தவனையுங் கொன்றுவிடவேண்டும். கொன்று விடாமல் திரவியங்களை வாங்கிக்கொண்டு விட்டு விட்டால் அரசனுக்குத் தோஷம் உண்டு.

ஒருவனுக் கொருவன் சண்டை நேரும்போது ஆயுதங்களாக, கை, கால், கம்பு, புழுதி, மண், சகதி, சாம்பல், மலம் ஆக இந்த "எட்டு முதலானவைகளினாலே" அடிக்க நேரும். ஒருவன் ஒரு சம்சாரியை அடிக்கிறதற்குக் கையை ஓங்கினாலும், முந்தியே கையைப் போட்டு இழுத்தாலும், பத்து அடியும் அடித்து அபராதம் பத்துப் பணமும், காலை ஓங்கினாலும் மயிரையாவது காலை யாவது பிடித்திழுத்தாலும் இருபது அடியும் அடித்து இருபது பணமும் அபராதம் வாங்கவேண்டும். கழுத்திலே சீலையைப் போட்டு முறுக் கினாலும் வஸ்திரங்களைப் பிடித்திழுத்தாலும், நூறு அடியும் அடித்து நூறு பணம் அபராதமும் வாங்கவேண்டும். கையினாலே ரத்தங் காணாமல் அடித்தானானாலும், மலத்தைக் கொண்டே எறிந்தாலும் இருபத்தைந்து அடியும் அடித்து இருபத்தைந்து பணம் அபராதமும் வாங்கவேண்டும், கம்பினாலே இரத்தக் காயமில்லாமல் அடித்தானா னால் முப்பத்திரண்டு அடியும் அடித்து, முப்பத்திரண்டு பணமும் அபராதம் வாங்க வேண்டும், கையினாலேயாவது, கத்தியினாலே யாவது, கம்பு முதலானவைகளினாலேயாவது இரத்தங்காண அடித்தால் நூறு அடியும் அடித்து நூறு பணமும் அபராதம் வாங்க வேண்டும். தசை கிழிய அடித்தால் நன்றாக அடித்துத் தொண்ணூற்றாறு உழுந் திடைத் தங்கமும் அபராதம் வாங்கி ஊரை விட்டுத் துரத்தி விடவேண் டும். எலும்பு முறிய அடித்தாலும், உதடு, மூக்கு, காது கிழிய அடித் தாலும், மூர்ச்சைபோக அடித்தாலும், உதட்டை மூக்கைக் காதை விரலைத் தலைமயிரை அறுத்தாலும், கண்ணைக் கெடுத்தாலும் ஆக, இந்தப் பதினொரு விதம் போன்றவற்றில் ஏதேனுஞ் செய்தவனைக் கையையும் அறுத்துக் கண்ணையும் பிடுங்கி நூற்றுத் தொண்ணூற் றிரண்டு உழுந்திடைத் தங்கமும் அபராதமும் வாங்கி ஊரைவிட்டுத்

27

துரத்தி விடவேண்டும். இவர்களை இப்படித் தண்டித்து எதிரிக்குக் கொடுக்கவேண்டிய முதலையும் வாங்கிக் கொடுத்துக் காயம் கட்டு கிறது முதலாகிய செலவையுங் குற்றங் கண்டவனிடமே வாங்கிக் கொடுக்க வேண்டும்.

ஒருவன் தனக்கடுத்த உயர்ந்த சாதிக்காரனை இப்படிச் செய்துவிட் டால் இரண்டு பங்கு அவனுக்குச் செய்ய வேண்டும். ஒருவன் தனக் கடுத்த தாழ்ந்த சாதிக்காரனை இப்படிச் செய்துவிட்டால், பாதி செய்ய வேண்டும். மற்ற குற்றங்கள் செய்தபேரை இந்தப்படிக்கு அரசன் விவரங் கேட்க நியமித்திருக்கிற பெரியோர்களாகிய சபையாரைக் கொண்டு அரசன் தண்டிக்கச் சொல்ல வேண்டும்; அல்லது அரசனே தண்டிக்க வேண்டும்.

இப்படிப்பட்ட குற்றங்களை முன்னதாகச் செய்தவனை முன் சொல்லி யிருக்கிறபடிக்குத் தண்டிக்கவேண்டும். முந்தி ஒருவன் செய்ய, அந்தப்படிக்கு எதிரி பிந்திச்செய்தானுனல், முந்திச்செய்தவனிடம் முக்காற்பங்கும் பிந்திச் செய்தவனிடம் காற்பங்குமாக வாங்க வேண்டும். முந்தி ஒருவன் செய்ய, அதைப்பட்டுக் கொண்டு எதிரி ஒன்றுஞ் செய்யாமல் நின்று விட்டானுனல், முன் சொல்லியிருக்கிற படிக்கு முந்திச் செய்தவனைத் தண்டிக்கவேண்டும். இரண்டுபேரும் சம காலத்திலே செய்துகொண்டார்களானுல், முன் சொல்லி யிருக்கிறபடிக்கு இரண்டுபேரையும் தண்டிக்கவேண்டும்.

பைத்தியங் கொண்டவன், பேய் பிடித்தவன், வயசுமிகுதியினுலே புத்தி பேதித்தவன், லாகிரி கொண்டவன் இந்த ''நாலிலொருவன்'' இப்படிப் பட்ட குற்றங்கள் செய்தால், அவன் செய்த குற்றத்தையும் அவன் புத்தி மயக்கத்தையும் அளவிட்டுக் கொண்டு அதற்குத் தக்கபடி இலகுவாய்த் தண்டிக்க வேண்டும்.

ஒரு பெண்பாலையாவது ஆண்பாலையாவது கொன்ற பெண்பிள் ளையைக் கழுத்திலே கயிறு கட்டிச் சலத்திலே தள்ளித் தாழ்த்திவிட வேண்டும். ஒரு பெண்பிள்ளையையாவது ஆண்பாலையாவது கொல்ல வேண்டுமென்று அன்னபானுதிகளிலே விஷங்களைப் போட்டவள், தன் புருடனையாவது தன் குருவையாவது தன் பிள்ளையையாவது கொன்ற வள், ஆக இந்த இரண்டு பெண் பிள்ளைகளையும் மதர்த்துத் திரிகிற காளையின் கழுத்திலே கட்டி, இவளையும் காளையையும் துரத்த வேண்டும். இவள் கர்ப்பமாக இருந்து விட்டால் பிள்ளை பெறுகிற வுரையில் காவலிலே வைத்து, பிள்ளை பெற்றதின் பிறகு

அந்தப் பிள்ளேயை ஒருவரை வளர்த்துக் கொள்ளச் சொல்லிக் கொடுத்துவிட்டு, அதன்பிறகு அவனேச் சலத்திலே தள்ளியாவது காலே யிலே கட்டியாவது கொன்று விடவேண்டும்.

அடித்துக்கொள்ளுகிற குற்றத்துக்குத் தண்டனே லட்சணம் முற்றும்.

---

# 47. களவுக்குத் தண்டனே லட்சணம்

---

அரசனுவது பொருளுக்குடையவனுவது பார்த்துக்கொண்டிருக்கிற போது பலவந்தமாய் எடுத்துக் கொள்ளுகிறதற்குச் ''சாகசமென்று'' பெயர். அரசனுவது பொருளுக்கு உடையவனுவது காணுமலிருக்கிற வேளேயிலேயும், இவர்கள் நித்திரை பண்ணுகிற வேளேயிலேயும், எடுத் துக்கொண்டு போகிறதற்கும், லாகிரி கொண்டிருக்கிறவன், பைத்தியங் கொண்டிருக்கிறவன், பதினுலு வயசுக்குட்பட்ட குழந்தையாகிய பாலன், வயது மிகுதியினுலே புத்திபேதித்திருக்கிறவன் ஆக இந்த '' நாலு '' பேரைப் போலே உள்ளவர்கள் கையிலே யிருந்து வாங்கின தற்கும் இவர்கள் முன்னே யிருந்து எடுத்துக் கொண்டதற்குங் 'களவு' என்பது பெயர்.

இப்படிக் களவாண்ட கள்ளனே, '' அங்கத்தினுலேயும் '' பிடிக்க லாம்; '' அசுகையினுலேயும் '' பிடிக்கலாம். இதில் அங்கத்துக்கு லட்சணம், காலடி பேதம் பேதமாய்த் தோன்றும்படிக்கு மிதித்து நடக்கிறது; நாலு இரண்டு இடங்களிலே களவாடியிருக்கிறது; களவு போவதற்கு முன்னிருந்ததை விடப் பின் அப்பொருள் மீது நிரம்ப உரிமை என்று தோன்றும் படியாக நடக்கிறது. இவன் களவு செய் யத் தக்கவன்தானென்று நாலுபேர் சொல்லுகிறது ; களவு போன பொருளில் ஒருபொருளே அவனிடத்தில் காண்கிறது; களவாடுகிற ஆயுதங்களே அவனிடத்திற் காண்கிறது ; கள்ள வழிகளிலே எந் நேரமுஞ் அவன் சஞ்சரிக்கிறது; சாதியை மாற்றிச் சொல்லுகிறது; பேரை மாற்றிச் சொல்லுகிறது ; ஊரைமாற்றிச் சொல்லுகிறது; காலத்தை மாற்றிச் சொல்லுகிறது; ஆக இந்தப் 'பதினென்றும்' அங்க லட்சணம் .

அசுகை லட்சணம் சொக்கட்டான் முதலானவற்றை ஆடுகிறதி னுலே சீவனம் பண்ணுகிறது; திரிசஞ்சாரத்தை எந்நேரமும் விரும்பிக்

கொண்டே திரிகிறது; லாகிரிப் பதார்த்தங்களை விரும்பிப் புசிக்கிறது; முகம் வாடியிருக்கிறது; முகபேதமாக இருக்கிறது; சத்தம் பேதித்திருக் கிறது; கள்ளனை மறைத்துச் சொல்லுகிறது; கள்ளனுக்குப் புத்தி சொல்லுகிறது: ஆதாயமில்லாமல் மிகுந்த செலவு பண்ணுகிறது; களவு போன பொருட்சாதியை விற்கிறது; ஆக இந்த "பத்தும்" அசுகை லட்சணம்.

ஆக இந்த அங்கம் அசுகைகளினாலே, இராசா நியமித்திருக்கிற தலையாரிகளாவது தலத்துக் காவற்காரனாவது மந்திரவாதிகளாவது கள்ளனைப் பிடிக்க வேண்டும். இப்படிப் பிடித்த கள்ளனை மானுட ரெத்தினங்களினாலே விதமிட்டுச் சோதித்துப் பார்க்கிற போது, இவனே கள்ளனென்று ஒருவனுக்கு மாத்திரம் தோன்றினால் அவன் கள்ளனல்லன்; நாலுபேருக்கும் இவனே கள்ளனென்று தோன்றி யிருந்தால் அவனே கள்ளன். இப்படி நாலுபேரும் பார்த்துக் கள்ள னென்று சொல்லுகிறபோதும், அவன் 'நான் களவாட வில்லை' என்று சாதித்துக் கொண்டே நின்றானால், தெய்வங்களினாலே பிரமாண பூர்வமாகச் சோதித்து, அதனாலே அவனைக் கள்ளனென்று நிச்சயித்து அறிந்து கொண்ட பிறகு, சபையாரைக் கொண்டு அந்தக் கள்ள னுடைய சாதி, வயசு, பலம், குணம், தேசம், காலம், திரவியத்தொகை ஆக இந்த "ஏழு" வகையும் வைத்து அளவிட்டுப் பார்த்துக்கொண்டு இந்தக் கள்ளனுக்கு உடம்பெல்லாம் முத்திரை இட்டுச் சூலம் முதலியவற்றை ஏற்றிக் கொல்வது; மற்ற ஆயுதங்களினாலே கொல்வது; மாறு கால் மாறு கையை யறுக்கிறது; கையைமாத்திரம் அறுக்கிறது; காலை மாத்திரம் அறுக்கிறது; இருகை அங்குட்டந் தர்ச்சனிகளை அறுக்கிறது; ஒருகை அங்குட்டந் தர்ச்சனியை அறுக் கிறது; இரண்டு விரல்களில் ஒரு விரலை அறுக்கிறது; அடித்து அபராதம் வாங்குகிறது; அடித்துக் களவாடிய முதலுக்கு ஒன்றுக்கு இரண்டு முதலாக வாங்குகிறது, அடித்துக் களவாடின முதலை மாத்திரம் வாங்குகிறது; ஆக இந்தப் "பன்னிரண்டு வித முதலாகச்" சபையாரைத் தண்டனை விதிக்கச்சொல்லி, அவர்கள் விதித்தபடிக்குக் கள்ளனைத் தண்டிக்க வேண்டும்.

ஓர் ஊரிலே களவாடிக் கொண்டுபோன கள்ளன் மற்றொரு ஊர் எல்லைக்குள்ளே போய் மேல்தடம் தெரியாது போனால், அந்த ஊரார் களவுப் பொன்களைக் கொடுத்து விடவேண்டும்.

அரசன் இப்படியெல்லாம் விசாரிக்கும் இடத்தில் கள்ளன் காணு மற் போய்விட்டால், அரசன் தன் பொக்கிஷத்திலேயிருந்து களவு போன முதலைக் கொடுத்துவிட வேண்டும்.

தங்கத்தைத் திருடினாலும், முடிப்பு அவிழ்த்து எடுத்துக் கொண்டாலும், அதை நெருப்பிலே போட்டுக் காய்ச்சி, உடம்பெல்லாம் ஊற்ற வேண்டும். அறுபத்துநாலு பணமுதல் நூறு பொன் வரையில் களவாடினாலும் முடிப்பு அவிழ்த்தாலும் மூர்ச்சைபோக அவனை அடித்துத் தன் தேசத்தையும் விட்டுத் துரத்திக் களவாடிய முதலையும் வாங்கி முதலாளிக்குக் கொடுத்துவிட வேண்டும். பூட்டைத் திறந்து நூறு பொன்னுக்கு மேலே விலை பெறுகிற பொருளைத் திருடினால், அவனை ஆக்கினையும் பண்ணிக் கூர்மையாயிருக்கிற சூலங் கழு முதலாகியவற்றில் ஏற்றிக் கொன்று போடவேண்டும். தெய்வ சொத்து, பிராமண சொத்து, அரச சொத்து ஆக இந்தப்பொருள்களில் எவற்றையேனும் திருடினவனையும், பெண்பிள்ளை, ஆண்பிள்ளை, பசு, குதிரை இந்த நாலிலொன்றைத் திருடினவனையும் கொன்றுவிடவேண்டும். பெண்பிள்ளை, ஆண்பிள்ளை, இரத்தினம் இந்த மூன்றையும் ஒருவன் திருடினால் அவன் சொத்து முழுவதையும் எடுத்துக்கொண்டு கொன்றுவிட வேண்டும். பட்டு, ஆசனம், கட்டில், வெட்டிக் கிடந்த மரம், மரப் பாத்திரம், வேலி கட்டாமலிருந்த வைக்கோல், மூங்கில் கம்பு, மூங்கில் பாத்திரம், என்பு, என்புப் பாத்திரம், தோல், தோல் பாத்திரம், வேலி கட்டாமலிருந்த காய் கனி கிழங்கு, உப்பு, அவிந்த பதார்த்தம், ஊசின பதார்த்தம், மீன் மாமிசங்கள் ஆக இப் பொருள்களை எவ்வளவு திருடினாலும், ஒன்றுக்கு ஐந்து படி வாங்கி முதலாளிக்குக் கொடுத்துவிட வேண்டும். இப் பொருள்கள் நீங்கலாக மற்றப் பொருள்களை நூறு பொன்னுக்கு மேலே திருடினால் கொன்றுவிட வேண்டும். ஐம்பது பொன் முதல் நூறு பொன் வரையில் திருடினால் மாறுகாலும் மாறு கையும் வெட்டவேண்டும். இதற்குக் கீழ்பட்ட விலைபெறுகிற பொருளைத் திருடினால் ஒன்றுக்குப் பத்துக் கூட்டி வாங்கிக் கொடுத்துவிட வேண்டும். எல்லைகளிலே நாட்டியிருக்கிற எல்லைக் கல் முதலானதைப் பிடுங்கினவனை அங்குட்டம் தர்ச்சனி இரண்டு விரல்களையும் அறுத்துப் போட வேண்டும்.

திருடனையும் திருடுகிறதற்கு உபாயஞ் சொல்லிக் கொடுக்கிறவனையும் அடியும் அடித்து ஆயிரம் பணம் அபராதமும் வாங்கவேண்டும்.

பத்துப் பொன் முதல் நாற்பத்தொன்பது பொன் வரையில் உள்ள முடிப்பை அவிழ்த்தெடுத்துக் கொண்டவனை அங்குட்டந் தர்ச்சனி

இரண்டு விரல்களையும் அறுக்கவேண்டும். ஐம்பது பொன் முதல் தொண்ணூற்றென்பது பொன் வரையில் உள்ள முடிப்பை அவிழ்த் தெடுத்துக் கொண்டவனை மாறுகாலும் மாறுகையும் அறுக்கவேண்டும். நூறு பொன் முதல் அதற்கு மேலே உள்ள முடிப்பை அவிழ்த்து எடுத்துக் கொண்டவனைக் கொன்றுபோட வேண்டும். அரசனாவது பொருளுக்கு உடையவனாவது பார்த்துக்கொண்டிருக்கிறபோது பல வந்தமாய் எந்தப் பொருளையாயினும் எடுத்துக்கொண்டு போனவனை ஆயிரம் அடி அடித்து, ஆயிரம் பணம் அபராதமும் வாங்கவேண்டும்.

ஒருவன் சொத்தையாவது பூமியையாவது பலவந்தமாய் எடுத்துக் கொண்டவனை நூறு அடியும் அடித்து நூறு பணம் அபராதமும் வாங்க வேண்டும். ஒருவன் வத்திரம், பசு, எருமை, ஆடு, பிற மிருகங்கள், உணவு, பானம், வீடு ஆக இந்த 'எட்டிலொரு' பொருளைப் பலவந்த மாக எடுத்துக் கொண்டவனை ஐந்நூறு அடியும் அடித்து, அறுநூறு பணம் அபராதமும் வாங்கவேண்டும்.

களவுக்குத் தண்டனை லட்சணம் முற்றும்.

---

# 48. பெண்ணை அழித்தவனைத் தண்டிக்கிற லட்சணம்

## (ஸ்த்ரீ ஸங்கிரஹம்)

---

இப்பகுதியில் பெண்களின் கற்பினை அழிக்கிற குற்றத்திற்கு ஏற்ற தண்டனைகள் குறிக்கப்படுகின்றன. குடும்பத்தினுள்ளே புருஷன் மனைவியர்க்கிடையே உண்டாகும் சிறு பிணக்குக்களில் அதிகாரிகள் தலையிடலாகாது. மணமான பெண்களுடன் வஞ்சகமாகவோ பலவந்த மாகவோ தொடர்பு வைத்துக்கொள்பவனுக்கு அவன் குற்றத்திற்குத் தக்க அபராதங்களும் உடல் தண்டனைகளும் விதிக்கப்படுகின்றன. அடிமை, தாசி, மணமாகாத கன்னிகைகள் ஆகியோரைப் பற்றித் தனித்தனியே விதிகள் வரையப் பெற்றுள்ளன, காதலனொருவன் ஒரு கன்னியுடன் ஓடிப்போனால் அவ்விருவரையும் மணம் செய்விக்க வேண்டும். சம்மதியாத கன்னிப் பெண்ணைப் பலவந்தப் படுத்துவதற் குத் தண்டனைகள் விதிக்கப்பட்டுள்ளன. இப்பகுதி மூலத்தில் மிக விரிந்து உள்ளது.

பெண்ணை அழித்தவனைத் தண்டிக்கிற லட்சணம் முற்றும்.

---

